P. S. ஸ்ரீநிவாசய்யங்கார்

ஹநுமான் உபாசி

———



கடவுள் துணை.

தாண்டவமூர்த்திசுவாமிகள்செய்த

# கைவல்லிய நவநீத மூலமும்,

பிறையாறு

## அருணாசலசுவாமிகள்

இயற்றிய உரையும்.








சென்னை,

வித்தியாரத்நாகர அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பெற்றது.

1923.

இதன் விலை அணா—12.

உ

கடவுள் துணை.

# புத்தகபிரகடனம்.

---

| | | | |
|---|---|---|---|
| நல்லாப்பிள்ளை பாரதம் கவி வாலியம் 2-க்கு | 12 | 0 | 0 |
| இராமாயணம் சப்தகாண்டம் கவி வாலியம் 2-க்கு | 10 | 0 | 0 |
| தமிழ்ப் பேரகராதி. | 10 | 0 | 0 |
| நைடத மூலமும் விருத்திஉரையும். | 4 | 0 | 0 |
| நாலாயிரப் பிரபந்தம் இராகதாளமமைந்தது. | 3 | 8 | 0 |
| ஸ்ரீ பகவற்கீதை நவநீதவசனம். | 1 | 8 | 0 |
| வில்லிபுத்தூராழ்வார் பாரதம் கவி. | 3 | 0 | 0 |
| திருவிளையாடற்பாட்டு. | 3 | 0 | 0 |
| பாகவதப்பாட்டு முதற்பாகம். | 2 | 8 | 0 |
| ஷை இரண்டாம்பாகம். | 2 | 8 | 0 |
| ஆரியப்புலவர் பாகவதம் கவி. | 3 | 0 | 0 |
| அடங்கன்முறை சுத்தபதிப்பு. | 5 | 0 | 0 |
| சுந்தரகாண்டம் மூலமும் உரையும். | 3 | 8 | 0 |
| தனிப்பாடற்றிரட்டு மூலமும் உரையும் 1-ம் பாகம். | 2 | 0 | 0 |
| ஷை 2-ம் பாகம் மூலமும் உரையும். | 2 | 0 | 0 |
| பழநித்தலபுராணம் மூலமும் உரையும். | 1 | 0 | 0 |
| சுப்பிரமணிய பராக்கிரமம். | 1 | 8 | 0 |
| சிற்றின்பசாஸ்திர சிந்தாமணி. | 0 | 8 | 0 |

தபால்கூலி பிரத்தியேகம். இன்னும் பலவிதமான புத்தகங்கள் விற்கப்படும். அரையணாத் தபால் ஸ்டாம்பு அனுப்பினால் புத்தகே[illegible]லாக் அனுப்புவேம்.

பி. நா. சிதம்பரமுதலியார் பிரதர்ஸ்.

பிரம்பூர் பாரக்ஸ் போஸ்டு.

மதராஸ்.

கடவுள் துணை.

# உரைச்சிறப்புப்பாயிரம்.

சீர்வளர் பிரம சிருட்டியின் முனமே
ஏர்வளர் சத்தா யிலங்குறு பிரமம்
பாமூல குயிரெனப் படுபொரு ளெவற்றினும்
மூராணுறுஅச் சுசாதிய முதலிய பேதம்
அற்றொளிர் பரமா காச சயம்புவாய்
உற்றதன் னிலைமையி னேரிறை குறையா
தெறிதிரைக் காத்தா வினமணி கொழிக்கும்
செறிபுனற் பொன்னிசூழ் செம்பிய நாட்டில்
பொன்னிலத் தவிரிழி பொற்புறு படியென
நன்னிலை மாடமார் நன்னில மதனில்
செந்தண லோம்புந் திறந்திரி யாதுயர்
அந்தணர் குலத்தி னவதரித் தருளிய
நாரா யணகுரு நாண்மலர்ப் பதத்தைப்
போரா தவனருள் பெற்றிடு மதனால்
முற்றுணர் தாண்டவ மூர்த்தி யனுபவப்
பெற்றியி னுலகோர் பேரின் படையக்
கிளருய்வே தாந்தக் கீரோ ததியைத்
தளர்வறு சமாதித் தாழியி னிறைத்திட்
டகமுறு விசார வனலினுற் காய்ச்சி
மகிழ்குரு வாக்கிய மத்தாற் கடைந்து
ஞானகை வல்ய நவநீ தத்தை
ஆனபே ரன்பி னளித்தன னதனை
எளிதினில் யாவரு மின்புடன் றுய்க்க

ஒளிமணக் கிருதமா யுரைசெய்விக் கும்படி
சகவாழ் வினைத்துஞ் சத்திய மலவெனத்
திகழுறு மலைகாண் சென்றுசெய் தவத்தோர்
உடனுறைந் துடலொறுத் துணர்வுறப் பட்டினத்
தடிக ளெனத்துறந் தானுறை காசியை
நாடியாத் திரைசெயு நாட்டுக் கோட்டைப்
பீடுறு மருணு சலப்பெருந் தவத்தோன்
அருளிய மொழியினை யன்புட னுட்கொண்
டருளென நிலமகட் கணிகலை யான
நிலைக்கடல் வயிற்றி னிரப்பிப் பற்பல
கலைக்கட றன்னைக் கருத்து ளடக்கிய
அகத்திய முனிவாழ் பொதியமும் பொதிய
நகத்தரு சந்தன மாமகி லுங்கொடு
நீர்வரு பொருநையு நிகழுமந் நீரால்
ஏர்பெரு செந்நெற் கரும்பெனக் கன்னல்
கமுகெனக் கமுகுந் தெங்கெனத் தெங்குதான்
அமுதகு மெழிலிக் கானகா லென்னத்
திகழ்வுற வளங்களுஞ் சேர்ந்தினி தோங்கும்
புகழ்பெறு பாண்டிப் புத்தே ணாட்டில்
களைகளை கடைசியர் கண்ணூ டுறுமுகம்
அளைவுறு சாயையை யம்புய மீது
புல்லிதழ்க் குவளை பூத்ததென் றதனை
வல்லிதிற் கையால் வவ்வுறக் கண்டாங்
குழத்தியர் புன்னகை கண்டியங் கிடவும்
உழவர்க ளுணுறு மொண்பணை சூழும்
வாதவூ ரடிகண் மதியுரு வாகப்
போதபூ ரணனேர் பூசா னுகிக்
குருந்தடி யமர்ந்தருள் கோதில் பெருந்துறை

மருகிற் பளிக்குமேன் மாடத் திலவும்
மின்னனூர் முகமதி தமைவின் மதிதான்
தன்னனு ராசு தனைக்கொரு மொன்னலர்
என்னக் கலங்கி யேங்குறு மமயத்
தன்னூர் கூடந்த லாவெனக் கண்டு
பயமற் றேகுறும் பான்மையு மறையவர்
வயமுறு மாசர் வணிகர்சூத் திரமுறை
மன்னுமா வித்திரா வயலெனு நகரோன்
பொன்னிசூழ் பூம்புகார் வணிகர் குலோத்தமன்
காரியர் மனங்க ணயமுற நாடும்
சீரியல் வேளிற் சிறந்தநல் வெழிலான்
மாலைவண் டுணுநறுக் காந்தரு நவமணி
மாலையு மார்பில் வயங்குவெண் கவிகையான்
அறிஞர்நல் குரவெனு மங்கி தணியப்
பொறிவனஞ் சொரியுநற் புயல்கா முடையான்
சித்திது சடமீ தென்றவை தேர்ந்து
முத்தியைப் பெறமுயன் மூதறி வுடையோன்
இல்லற மதனி விருந்துமெய்த் துறவே
நல்லற மெனவே காந்தத்தை நண்ணி
சாதுசங் கத்தொடு சாத்திரார்த் தங்களை
மூதுணர் வுறவித மோதிநன் மோன
நிலையினின் றைம்புல நெறிச்செலு மனதை
அலைவுறு தடங்கு மடக்கியப் பறிஞன்
ஈன்றிடுங் கறுத்தா னெனுமால் கேட்பச்
சான்றோ ரனுபவச் சாம்பிரதா யத்தமிழ்இத்
தகைபெறும் பன்னூற் கருத்தையுந் தனது
சகசா நந்தமுந் தழுவியவ் வனலால்
உருக்குமவ் வுரையிற் குயர்பரா நந்த

கிருத மெனப்பயிர் கண்டு கிளத்தினன்
விண்ணவர் முதலோர் வீடுறு மெய்த்தவம்
கண்ணுற வந்துறுங் காவிரி நாட்டிடைத்
திருத்துருத் தியினோர் தேசிக வரசாய்
அருமறை முடிவா மாதனத் திருந்து
சித்தியாங் குருநில மன்னரைச் செயித்து
முத்திமா வுலகாண் டிடமுடி சூடும்
இந்திர பீடத் தெழிற்கர பாத்திர
சுந்தர னடிமுடி சூடிய தெத்தாத்
திரய னடிபெருஞ் செங்கம லன்றாள்
மருவுறு நாகையின் மன்னுபே ரறிஞன்
அகோசர சயம்பு வாகிய வோர்முதல்
சுகோததி யுருவாய்த் தோன்றரு ணாசலக்
குரவ னடிமுடி கொண்டடி யவர்க்குப்
பரவுணர் வாம்பொருள் காட்டுமெய்ப் பானு
ஓதரு மூவகை விளக்கு மூவாமதி
சாதன மொன்றுமி லாத்தமி யேனையும்
ஓர்பொரு ளாக வுவகையிற் கூவிச்
சீர்பதந் தலைமேற் றிகழ்வுறச் சூட்டி
ஒருமொழி யமுதை யுள்ளுற வூட்டி
நிருவிகற் பாங்க நிட்டையி னிறீஇ
மிகுசொரு பானு பூதியை விளக்கிச்
சகசா நந்தத் தலைமீக் கொண்டு
சும்மா விருக்கச் சுகமென வருளிய
எம்மா னெழிலுற் றிலங்கும் பிரைசை
அருணா சலசு வாமிக ளென்னத்
திருநா மம்பெறுந் தேசிகோத் தமனே.

முற்றிற்று.

கணபதி துணை.

# கைவல்லிய நவநீதம்.

## பாயிரம்.

அவதாரிகை:—வடநூலாராய்ச்சியில் வல்லமையுள்ள இந்நூலாசிரியர் தாமடைந்த சுவானுபூதிப் பிரத்தியக்ஷத்தை உலகம் எளிதிலடைந்து ஆனந்தாதீத மாகும்பொருட்டு அருளினாற் சொல்லப்புகுந்த இந் நூல் இனிது முடியுமாறு, அதன் அந்தரங்கமான பிரஞ்ஞானம் பிரமம் என்னும் இருக்குவேத மகாவாக்கியார்த்தமாக விளங்கும் அத்துவித ஸ்வரூபத்தை விலட்சணமாகவுஞ் சலட்சணமாகவுந் துதிப்பான் றொடங்கி, இச்செய்யுளில் சமாதியின்கண் உதயமான விலட்சணமாகிய கூடஸ்தபிரமத்தைத் துதிக்கின்றார்.

பொன்னில மாதராசை பொருந்தினர் பொருந்தா ருள்ளம்
தன்னிலந் தரத்திற் சீவ சாக்ஷிமாத் திரமாய் நிற்கும்
எந்நிலங் களினு மிக்க வெழுநில மவற்றின் மேலாம்
அன்னில மருவு மேக நாயகன் பதங்கள் போற்றி.

இதன்பொருள். பொன்னினிடத்தும் மண்ணினிடத்தும் மடவாரிடத்தும் ஆசையுள்ள அஞ்ஞானிகளும் நிராசையுள்ள மெய்ஞ்ஞானிகளுமாகிய இவர்களது இதயாம்பரத்தில் நான்கு பூதங்களிலும் நிறைந்திருக்கின்ற ஆகாயத்தைப்போலக் கூடஸ்த சைதன்னிய மாத்திரமாக நிறைந்திருக்கின்ற எவ்விதமான நிலங்களிலும் மேலாய ஞானபூமிக ளேழனுள் முடிவாகிய துரியபூமியிற் பொருந்திய ஒன்றாகிய பிரமசைதன்னியத்தின் திருவடிகளை வணங்குவாம். எ-று.

பதசாரம். சகல சமயங்களுக்கு மேலானது ஞானபூமி என்பார் 'எந்நிலங்களினுமிக்க வெழுநிலம்' எனவும், அவைகளின் முடிவானது துரியபூமி என்பார் 'நன்னிலம்' எனவும், அதனிடமாக விளங்குகின்றது துரியாதீதம் என்பார் 'ஏகநாயகன்' எனவும், அஃதே துரிய ஸ்வரூபமாய்ச் சொரூபமுதல், ஸ்தம்பபரியந்தஞ் சர்வவியாபகமாய் வியாபித்து விளங்குவது என்பார் 'பொன்னிலமாதராசை பொருந்தினர் பொருந்தாருள்ளந் தன்னிலந் தாத்திற் சீவ சாட்சிமாத்திரமாய் நிற்கும்' எனவும், யாவர்க்குஞ் சைதன்னியத்தின் தத்பிரகாசமான கூடஸ்த பிரமமே இடம் என்பார் 'பதங்கள்' எனவும், அவைகளின் ஐக்கியமே அத்துவிதம் என்பார் 'போற்றி' எனவும், கூறினர். பொன்னில மாதரென்பது இச்சையை விளைப்பதற்குக் காரணமான ஈடணாத்திரியமெனக் கொள்க. புத்திரேடணை என்பதை யவனுரிமையிற் பெறுவதாகிய அரசின்மேல் வைத்துக்கூறினர்.

இதன்தாற்பரியம். அகோசரமான நிரதிசயானந்தவஸ்து கோசரிக்குமிடத்துப் பூரணானந்தமாகப் பிரவேசித்து நித்தியானந்த சாக்ஷாத்காரமாகத் தடித்து அதில் அதீதமாக விளங்குவதைப் பிரமமாகவும், அஃதே விடயசம்பந்தங்களிற் றூக்கற்றிருந்ததைப் பிரத்யேகாத்ம ஸ்வரூபமாகவுந் துதித்ததாம். 1

அ - கை. இச்செய்யுளில் முற்கூறிய அத்துவித வஸ்துவைச் சகசநிட்டையிற் சலக்ஷணமாக விளங்கிய சுயஞ்சைதன்னியமாகத் துதிக்கின்றார்.

ஈன்றளித் தழிக்குஞ் செய்கைக் கேதுவா மயனுய் மாலாய்
ஆன்றவீ சனுமாய்த் தானே யனந்தமூர்த் தியுமாய் நிற்கும்
மூன்றமுத் தனுமா யின்பப் புணரியா தவனுய் நாளும்
தோன்றிய விமல போத சொரூபத்தைப் பணிகின் றேனே.

இ-ள். சிருஷ்டி ஸ்திதி சங்காரம் என்னும் இம்மூன்றொழிற்கும் ஏதுவாகிய பிரமனும், விஷ்ணுவாகியும், மாட்சிமையுள்ள உருத்திர

னுகியும், இன்னும் அநேக வடிவங்களாகியும் இருக்கின்ற பூரணமான முக்தனுகியும், ஆனந்த சமுத்திரத்திலுதிக்கு ஞான சூரியனுகியும், சதோதயமாகிய சுத்த சைதன்யமான பிரமஸ்வரூபத்தை வணங்குகின்றேன். எ-று.

ப-ம். தனது ஸ்புரணமெல்லாந் தனது வடிவமாக விளங்கும் என்பார் 'அயனுய் மாலா யான்ற வீசனுமாய்த் தானே யனந்த மூர்த்தியுமாய் நிற்கும்' எனவும், பேரின்பவிளக்கமே சைதன்னியம் என்பார் 'இன்பப்புணரியாதவன்' எனவும், உற்பத்தி திதிலயங்களின்றி விளங்கின சுத்த சைதன்னியம் என்பார் 'நாளுந்தோன்றிய விமல போத சொரூபம்' எனவும், கூறினுர்.

இ-ம். சர்வம் பிரமமயம் என்னும் உபதேச வாக்கியப்படிக்கு ஸ்வரூப் சாக்ஷாத்காரமான சுத்த சைதன்னியத்தைத் துதிசெய்ததாம்.

அ-கை. முற்கூறிய ஆத்மஸ்வரூபமே வடிவமான அருளிறையை அதீதமாகவுஞ் சாக்ஷாத்காரமாகவுந் துதிக்கத் தொடங்கி இக்கவியி லதீதமாகத் துதிக்கின்ருர்.

எவருடை யருளால் யானே யெங்குமாம் பிரம மென்பால்
கவருடைப் புவன மெல்லாங் கற்பித மென்றறிந்து
சுவரிடை வெளிபோல் யானென் சொரூப சுபாவ மானேன்
அவருடைப் பதும பாத மனுதினம் பணிகின் றேனே.

இ-ள். யாவருடைய கிருபையினுல் நானே எவ்விடத்திலும் நிறைந்திருக்கின்ற பிரமஸ்வ ரூபமும் என்னிடத்தில் தோற்றி விரிந்திருக்கின்ற உலகமுழுவதும் பொய்யென்றறிந்து கவரிடத்திருக்குங் ககனம்போல நானே பிரமசுபாவமும் ஆயினேன், ஆதலால் அவரது கமலமலர்போன்ற திருவடிகளை எப்போதும் வணங்குகின்றேன். எ-று.

ப-ம். சர்வம் பிரமமென்பார் 'எங்குமாம் பிரமம்' எனவும், சர்வமு மில்லையென்பார் 'கவருடைப் புவனமெல்லாங் கற்பிதம்' என

வும், யாவுந் தன்மயமாக விளங்குவனென்பார் 'சொரூப சுபாவமா னேன்' எனவும்,. கூறினர்.

இ-ம். சர்வமாய்ச் சர்வமிலதா யிருக்கின்ற தன்னைத் தன்னி டத்துத் தானாயிருந்து விளக்கிய குருதுரியத்தை வணங்கினதாம்.

அ-கை, இச்செய்யுளிற் சற்குரு சொரூபத்தைச் சாக்ஷாத்காரமா கத் துதிக்கின்றார்.

என்னுடை மனது புத்தி யிந்திய சரீர மெல்லாம்
என்னுடை யறிவி னூலே யிரவிமுன் னியமே யாக்கி
என்னுடை நீயு நானு மேகமென் றைக்கியஞ் செய்ய
என்னுடைக் குருவாய்த் தோன்று மீசனை யிறைஞ்சினேனே.

இ-ள். என்னுடைய மனம் புத்திகளாகிய அந்தக் கரணமும் ஞானேந்திரிய கன்மேந்திரியங்களும் தூலதேகமுமாகிய இவைகள் அனைத்தும் எனது ஆத்ம ஞானத்தினால் சூரியனைக்கண்ட பனியைப் போலச்செய்து, எனது சொரூபமாகிய நீ என்பதும் உனது சொரூ பமாகிய நானென்பதும் ஒன்றேயென அத்துவிதமாக்க, எனது ஆசா ரியராக உதயமான அருளிறையை வணங்கினேன். எ-று.

ப-ம். தனது பிரியத்தடிப்பே குருஸ்வரூபமென்பார் 'என்னு டைக் குரு' எனவும், தன்னை யிரக்ஷிக்கு நிமித்தம் உதயமானது அரு ளிறையென்பார் 'ஈசன், எனவும் கூறினர்.

இ-ம். மனமுதலிய தத்துவங்க ளனைத்தையுஞ் சமாதி ஞான த்தினாற் கரைத்து அதனினுதயமாகும் ஆனந்தமாகிய அஃதே இஃதே, இஃதே அஃது என்னும் அத்துவ ஸ்வரூபத்தைத் தரிசிப்பிக்[illegible] ருட்டுப் பூரணமே ஒருருவாக எழுந்தருளிய வாசாரியனை வணங்கின தாம். 4

அ-கை. தனது ஆசிரியரை வணங்கி அவரருளினாற் கூறப்பு குந்த இந் நூன்முகத்திற் கூறப்படும் விஷயமும், இதனாலுண்

டாகும் பயனும், இந்நூற்கும் இதிற் கூறப்படுவதாகிய விஷயத்திற்குமுள்ள சம்பந்தமும், இது கேட்டற்குரிய அதிகாரியும் ஆகிய அனுபந்த சதுட்டயம் இந்நூல்கற்கு மாணக்கன் உணரும்பொருட்டு உரைக்க வேண்டுதலின் அவற்றுள் அதிகாரியும் விஷயமும் இச்செய்யுளிற் கூறுகின்றார்.

அந்தமு நடுவு மின்றி யாதியு மின்றி வான்போல்
சந்தத மொளிரு ஞான சற்குரு பாதம் போற்றிப்
பந்தமும் வீடுங் காட்டப் பரந்தநூல் பார்க்க மாட்டா
மைந்தரு முணரு மாறு வஸ்துதத் துவஞ்சொல் வேனே.

இ-ள். ஆதிமத்தியாந்த ரகிதமாய் ஆகாயத்தைப் போலச்சகோதயமாய் விளங்குகின்ற ஞானசாரியரது பாதத்தை வணங்கிப் பெத்தமு முத்தியுமாகிய இவைகளின் ஸ்ரூபத்தைத் தெரிவிக்கும்பொருட்டு விரிந்திருக்கின்ற வேதாந்த சாத்திரங்களை ஆராய்ந்தறியச் சக்தியில்லாத சிஷரும் எளிதிலுணரும்படி பரவஸ்துவி னுண்மையைச் சொல்வேன். மைந்தரென்பது அதிகாரியெனவும், வஸ்துதத்துவமென்பது விடயமெனவுங் கொள்க. 'பரந்த நூல்பார்க்கமாட்டா மைந்தரும்' என்னும் உம்மையாற் பார்ப்பவர்களென்பது மாயிற்று.

ப-ம். காலமுதலியவை நசிக்கினுந் தான் நசியாதிருத்தலின், 'அந்தமின்றி' எனவும், இடையின்றித் தான் பூரணானந்தமாக விளங்குதலின் 'நடுவின்றி' எனவும், எப்போதுந் தான் சுயமாய்ப் பிரகாசித்தலின் 'ஆதியுமின்றி' எனவும், இங்ஙனஞ் சதோயமாக விளங்கிய சிதானந்தமான சுத்தசைதன்னியமே குரு சொரூபமாதலால் 'சந்ததமொளிருஞான சற்குரு' எனவும், தான் அதன்மயமாய் நிற்றலின் 'பாதம்போற்றி' எனவும், கல்வி அல்லலெனக்கண்டு அஃதின் சாரமான தன்னை விரைவிற்றெரிந்துகொள்ள விருப்பமுற்றவர்கள் எளிதிலுணரும்படி யுணர்த்துதலின் 'பரந்தநூல் பார்க்கமாட்டா மைந்தருமுணருமாறு வஸ்துதத்துவஞ்சொல்வேன்' எனவும், கூறினார்.

அ - கை. இச்செய்யுளில் சம்பந்தமும் பிரயோசனமுங் கூறுகின்றார்.

படர்ந்தவே தாந்த மென்னும் பாற்கடன் மொண்டு மூன்றூல்
குடங்களி னிறைத்து வைத்தார் குரவர்க ளெல்லாங்காச்சிக்
கடைந்தெடுத் தளித்தே னிந்தக் கைவல்ய நவநீதத்தை
அடைந்தவர் விடய மண்டின் றலைவரோ பசியிலாரே.

இ - ள், விரிந்திருக்கின்ற உபநிடதமென்னும் க்ஷீரசமுத்திரத்தில் முகந்து, மூன்றூலாகிய கடங்களில் ஆசிரியர்கள் நிறைத்து வைத்தார்கள், அவைகளனைத்தையுங் காய்ச்சிக் கடைதல் செய்து இஞ்ஞானசாத்திரமாகிய கைவல்லிய நவநீதத்தை எடுத்துக் கொடுத்தேன்; இதைப் புசித்தவர்கள் நித்திய திருத்தி யடைந்தவர்களாதலால் விடயவானந்தமென்னு மண்ணைப் புசித்துப் பவத்திற் சுழல்வார்களோ சுழலார். எ-று.

கைவல்லிய நவநீதமென்பது சம்பந்தமும் அடைந்தவர் பசியிலாரென்பது பிரயோசனமுமா மெனக்கொள்க.

ப - ம். வேதமுடிவான மகாவாக்கியம் ஓர் மொழியாயினும் அஃது சிடனுக்கும் போதமாகும் பொருட்டு உண்டான சுத்த வேதாந்த சாத்திரங்களுக்கு அளவின்மையால் 'படர்ந்த வேதாந்தமென்னும் பாற்கடல்' எனவும், அவைகளில் தங்களுக்கு அனுபவமாகும் பொருட்டு ஆசிரியரெடுத்தறிவித்த வாக்கியங்களை யெடுத்துக்கோடலை 'மொண்டு' எனவும், தாம்பெற்ற பேறு உலகம் பெறும்படி பாவினமாகிய நூ[illegible] அவ்வாக்கியங்களை அமைத்தலை, மூன்றூற்குடங்களி னிறைத்துவைத்தார் 'குரவர்கள' எனவும், அப் பலசாத்திரங்களிலுள்ள வாக்கியங்களைச் சேகரித்தலை 'எல்லாம்' எனவும், அவ்வாக்கியங்களின் பூருவபக்ஷத்தை நீக்கி விசாரத்தாற் சித்தாந்தப்படுத்துதலைக் 'காய்ச்சி' எனவும், அச்சித்தாந்தத்தைக் குருவுபதேசத்தாற் சமாதியில் அனுபவமாக ஆராய்தலைக் 'கடைந்து' எனவும், அதிலுதயமான திருவாணைக்கத்தை

யெடுத்து ஓர் நூலாகத் தந்ததை 'எடுத்தளித்தேனிந்தக் கைவல்ய நவ நீதத்தை' எனவும், இஃதைப்பெற் றனுபவித்துத் திருத்தியடைதலை 'அலடைந்தவர் பசியிலார்' எனவும், இவ்வாருடர் விடயவிச்சையினுற் சனனமரணத்திற் சுழலாரென்பதை 'விடய மண்டின்றலைவரோ' எனவும், கூறினுர்.

இ - ம். பிரமமென்னுங் காமதேனுவிற் சுரந்த சுருதிகளென்னும் பாலை, விசாரமென்னும் அக்கினியாற் பூருவபக்ஷமென்னு நீர்சுண்ட, சித்தாந்தமென்னு மதுரமிகக் காய்ச்சி, விருத்திஞானமென்னும் பிரை குத்தி, உபதேசமென்னு மத்திட்டு, அனுபவ ஆராய்ச்சி யென்னுங் கடைதலைச்செய்து, அதிலெழாநின்ற கைவல்லியமென்னும் நவநீதத்தை அனுபவித்தலை யடைந்து, நித்திய திருத்தியான பசியிலார் விடயானந் தமான .ழண்ணைப்புசியார்கள் எனக் கூறினதாம். 6

அ - கை. உபாசன மூர்த்தியை வணங்கி இந்நூலின் படலவகை கூறுகின்றார்.

முத்தனை வேங்க டேச முகுந்தனை யெனையாட் கொண்ட
கத்தனை வணங்கிச் சொல்லுங் கைவல்ய நவநீ தத்தைத்
தத்துவ விளக்க மென்றுஞ் சந்தேகந் தெளிதலென்றும்
வைத்திரு படல மாக மகுத்துரை செய்கின் றேனே.

இ - ள். பாசங்களை நீக்கி நிற்பவனை, வேங்கடாசலபதியாகிய திருமாலை, என்னை அடிமைகொண்ட இறைவனைப் பணிந்து உரைக்குங் கைவல்லிய நவநீதமென்னு ஞானசாத்திரத்தைத் தத்துவ விளக்கம் எனவும் சந்தேகந் தெளிதல் எனவும் நாமந்தரித்து இரண்டு படலமாகப் பிரித்துச் சொல்லுகின்றேன். எ-று.

இ - ம். வெளிப்படை. 7

பாயிர முற்றிற்று.

முதலாவது,

# தத்துவவிளக்கப் படலம்.

அ - கை. முற்கூறிய படலங்களுள் தத்துவ விளக்கம் என்னும் படலத்தில் தத்துவத்தை விளக்கும் பொருட்டு முதற்கண் அதுகேட்கும் அதிகாரிக்குரிய சாதன சதுட்டய இலக்கணங் கூறுகின்றார்.

நித்திய வநித்தி யங்க ணிர்ணயந் தெரிவி வேகம்
மத்திய விகப ரங்கள் வரும்போகங் களினி ராசை
சத்திய முரைக்க வேண்டுஞ் சமாதியென் றுறுகூட்டம்
முத்தியை விரும்பு மிச்சை மொழிவர்சா தனமிந்நான்கே.

இ - ள். நித்தியா நித்திய வஸ்துக்களின் நிச்சயந் தெரிகின்ற விவேகமும், இடையிலுள்ள இகலோக பரலோகங்களில் உண்டாகின்ற செல்வங்களில் விராகமும், உண்மையாகச் சொல்லத்தகுந்த சமாதி சட்க சம்பத்தியும் முமுட்சுத்துவமும் ஆகிய இந்நான்கையும் சாதன சதுட்டயம் என்று சத்துக்கள் சொல்லுவார்கள். எ-று. 1

சமந்தமம் விடல்ச கித்தல் சமாதானஞ் சிரத்தை யாறும்
சமமகக் கரண தண்டந் தமம்புறக் கரண தண்டம்
அமர்மனை விவகா ரங்க எருகலே விடலென் றாகும்
அமர்செயுஞ் சுகதுக் காதி யனுபவிப் பதுச கித்தல்.

இ - ள். சமமெனவும் தமமெனவும் உபாதியெனவும் திதிக்ஷையெனவும் சமாதானமெனவும் சிரத்தையெனவும் ஆறாகும்; சமமாவது அந்தக்கரணத்தைத் தண்டித்தலாம்; தமமாவது புறத்தின்கண்ணுள்ள தசேந்திரியங்களைத் தண்டித்தலாம்; விடலென்பது விரும்பப்பட்ட குடும்பவிவகாரங்களைச் சுருங்கச்செய்தலாம்; சகித்தலாவது கலகஞ் செய்

கின்ற இன்பதுன்ப முதலியவைகளைப் பிராரத்த மென்று சமசித்தமாய் அனுபவிப்பதாம். எ-று. 2

சிரவணப் பொருளைத் தானே சித்தஞ் சிந் திக்கு மாறு
சரதமாய் வைக்கு மித்தைச் சமாதான மென்பர் மேலோர்
பரமசற் குருநூ லன்பு பற்றலே சிரத்தை யாகும்
வரமிகு சமாதி யாறு வகையாஞ்சொற் பொருளீ தாமே.

இ-ள். வேதாந்த சிரவணார்த்தங்களை உள்ளமானது பிரியமாய்ச் சிந்திக்கும்படி இனிய தன்மையாகச் செய்யும் இதை மகான்கள் சமாதானமென்று சொல்லுவார்கள்; மேலான ஆசிரியரிடத்தும் வேதாந்த சாத்திரங்களிடத்தும் அன்புவைத்தல் சிரத்தையாம்; மேன்மை மிகுந்த சமாதியென்னும் ஆறுபிரிவான பதத்துக்கு அருத்தம் இதுவாம். எ-று.

இ-ம். அநித்திய வஸ்துக்க ளிவையெனக் கண்டு நித்திய வஸ்துவை யடைதற்கேதுவான குணங்களையே சாதன சதுட்டயமாகக் கூறினதாம். 3

அ-கை. அச்சாதனங்கள் இன்றியமையாச் சிறப்பினவெனவும் அதனாலுண்டாகும் பயன் இஃதெனவுங் கூறுகின்றார்.

சாதன மின்றி யொன்றைச் சாதிப்பா ருலகி லில்லை
ஆதலா லிந்த நான்கு மடைந்தவர்க் கறிவுண் டாகும்
நூதன விவேகி யுள்ள நுழையாது நுழையு மாகில்
பூதசென் மங்கள் கோடி புனிதனும் புருட னாமே.

இ-ள். சாதனமில்லாமல் ஒருகாரியத்தைச் சாதிப்பவர்கள் பூமியின்கணில்லை; ஆகையால் இச்சாதன சதுட்டயங்களைப் பெற்றவர்களுக்கு ஞானோதயமாம்; புதிய விவேகியின் மனதில்புகாது; புகுமானால் இறந்தகாலத்துள்ள அனந்த சனனங்களில் சித்தசுத்தி யுள்ளவனாகிய பூமானாம். எ-று. 4

இ - ம். மெய்யுணர்வை உணர்தற்கு இச்சாதனங்கள் அவசியம் வேண்டுமென்பதாம்.

அ - கை. அச்சாதனமுள்ள சீடனது தீவிரதர பக்குவத்தை அறிவித் தல்.

இவனதி காரி யானே னிந்திரி யங்க ளாலும்
புவன தெய் வங்க ளாலும் பூதபௌ திகங்க ளாலும் [ம்பிப்
தவன மூன் றடைந்து வெய்யிற் சகித் திடாப் புழுப்போல் வெ
பவமறு ஞான தீர்த்தம் படிந்திடப் பதறி னானே.

இ - ள். இச்சாதன சதுட்டய முள்ளவனே இந்நூலுக் கதிகாரியா னவன்; ஆதியாத்மிகத்தினாலும் ஆதிதெய்விகத்தினாலும் ஆதி பௌதிகங் களாலும் தாபத்திர யாக்கினியை அடைந்து, சூரியனது உஷ்ண கிர ணத்தைச் சகிக்கமாட்டாத கிருமியைப்போல வெப்பமுற்று, பிறவியை யொழிக்கின்ற ஞானசாகரத்தின் மூழ்கத் தீவிரமுற்றான். எ-று.

இ - ம். தாபத்திரயாக்கினியாகிய சம்சார துன்பங்களுக்கு ஆற்றாத வனே அவை நீங்கிப் பிரமானந்தமடைய விரைவன் என்பதாம்.

அ - கை. அத்தீவிரதர பக்குவனுக்கு ஆசிரியர் தரிசனமாதல்.

ஆனவிம் மனைவி மக்க ளர்த்தவீ டிவைகண் மூன்றில்
கானவர் வலையிற் பட்டுக் கைதப்பி யோடு மான்போல்
போனவன் வெறுங்கை யோடே போகாத வண்ணஞ் சென்
ஞானசற் குருவைக் கண்டு நன்றாக வணங்கி னானே.

இ - ள். தனக்கான இவ்வில்லாளும் புத்திரரும் தனமும் ஆகிய ஈடணாத்திரயங்களினின்றும் வேடர்கள் வீசும் வலைக்குள் அகப்பட்டுத் தவறிச்செல்லும் மானைப்போல ஓடினவன், சும்மா செல்லாதபடி உளத் தில் அன்பும் புறத்தில் ஆராதனைக்குரிய வஸ்துக்களும் கொண்டுபோய்

ஞானுசாரியனைத் தரிசனஞ்செய்து, திரிகரண சுத்தியாகப் பூசித்துப் பணிந்தான். எ-று.

இ - ம். ஈடணைத்திரயமான துன்பங்களினின்றும் நீங்கிய இவனுக்கு இன்பவடிவமான சற்குருதரிசன மாயிற்று என்பதாம். 6

அ - கை. தரிசனஞ்செய்த அவ்வாசிரியரிடத்திற் செய்யும் விண்ணப்பம்.

வணங்கிநின் றழுது சொல்வான் மாயவாழ்வெனுஞ்சோகத்தா
லுணங்கினே னையனே யென் னுள்ளமே குளிரும் வண்ணம் [ல்
பிணங்கிய கோச பாசப் பின்னலைச் சின்னமாக்கி
இணங்கிய குருவே யென்னை யிரக்ஷிக்க வேண்டு மென்றான்.

இ - ள். பணிந்தெழுந்து நின்று கண்ணீர் சொரிய அழுதுரைப்பான்; பொய்யான குடும்ப வாழ்க்கையென்னும் துன்பத்தினால் வாடினேன். எனதாசிரியரே! என் உள்ளங்குளிரும் வண்ணம் செறிந்த பஞ்சகோசமாகிய பின்னலைத் தூளாக்கி முத்தியை அடைவிப்பதற்கு உடன்பட்டிருக்கும் ஆசிரியரே! அடியேனை முத்தியிற் சேர்க்கவேண்டும் என்று சொன்னான். எ-று.

இ - ம். அறிவின்மையால் வரும் பவத்துன்பத்தை நீக்கி அறிவினால் வரும் இன்பத்தில் மூழ்கும்படி செய்விக்க, ஆசிரியரை வேண்டிக் கோடலாம். 7

அ - கை. அங்ஙனம் விரும்பிய சீடனைப் பரிசோதித்தல்.

அன்னதன் * சிசுவை யையன் றமைமீன் பறவைபோலத்
தன்னகங் கருதி நோக்கித் தடவிச்சந் நிதியிருத்தி

* அன்னை "தன்சிசுவை" எனவும் பாடம்.

செயல்கள்வேண்டும்; படிகக்கல்லில் தோற்றிய கருநிறம் கற்பிதமே என்று பார்த்திட மனமேபோதும். எ-று. 69

அ - கை. மேல் உத்தரத்திற்கு உபமேயங் கூறல்.

இங்குமப்படிச் சச்சிதானந்தத்தி லிடர்சடம்பொய்மூன்றும், தங்குமாயையின் கற்பிதமன்றியே சகசவாஸ்தவமன்றே, பங்கமாகுமஞ் ஞானத்தைக் கருமங்கள்பகைசெயா துறவாக்கும், துங்கஞானமே கருமவஞ்ஞானத்தைச் சுடுகின்றநெருப்பாமே.

இ-ள். இத்தாஷ்டாந்தத்தினும் அத்திஷ்டாந்தத்தைப் போல அஸ்திபாதிப் பிரியரூபமாகிய தன்னில் அனுர்தம் சடம் துக்கம் ஆகிய மூன்றும் தங்காநின்ற மாயாகற்பிதமே யல்லாமல் சுபாவமாயுள்ளதன்று. நிறுதான அஞ்ஞானத்தை புண்ணியகன்மங்களானவை பகைபண்ணுமல் நட்பாக்கும்; மேலான ஞானமே கன்மரூபமாகிய அஞ்ஞானத்தை எரிக்கின்ற அக்கினியாம். எ-று.

இ - ம். செம்பில் களிம்புபோல ஆத்மாவுக்கு அஞ்ஞானஞ் சகசமாகாமல் பளிங்கில் பஞ்சவன்னம்போலப் பிராந்தியாதலால், அங்ஙனந் தோற்றுங் கன்மசம்பந்தமான அஞ்ஞானத்தைக்கெடுப்பது விசாரரூபமான ஞானமே ஆம் என்பதாம். 70

அ - கை. மேற்கூறியதை வற்புறுத்தல்.

மனைக்குள்வைத்த பண்டங்களை மறந்தவன் வருடநூறழுதாலும், நினைத்துணர்ந்தபின் கிட்டுமேப்படியிந்த நிருமலவான்மாவும், அநர்த்தமான தன் மறதியைக்கெடுக்குந் தன்னறிவினாற்காணுமல், கனத்தகன்மங்க ளூறுகஞ்செய்யினுங் காணுமேகாணுதே.

இ - ள். வீட்டிற்குள்வைத்த வஸ்துக்களை வைத்தவிடந் தெரியாது மறந்தவன் நூறாண்டு துக்கித்தாலும், முன்வைத்த விடத்தை

ளைவினைப்போலத் தேகமுங்குளிர்ச்சியாய் மனமுங் குளிர்ந்து, நிறைந்த அன்பானது கரையழிந்துச் செல்லுவதுபோல இரண்டு கண்களிலும் ஆநந்தபாஷ்பம் பெருக இதழ்விரிந்த கமல மலர்போன்ற பாதங்களையிரண்டும் பணிந்து எழுந்துநின்று, இதனைச் சொல்லத் தொடங்குவான்-எ-று.

அ-கை. சீடன் விண்ணப்பத்தினால் அகம் இன்றென்பதைக் குறிப்பினால் அறிதல்.

சொன்னது கேட்கமாட்டாத் தொண்டனா னாலுஞ் சுவாமி
நின்னது கருணையாலே நீயென்னை யாள லாமே
உன்னது பிறவி மாற்று முபாயமொன் றுண்டென் றீரே
இன்னதென் றதைநீர்காட்டி யீடேற்றல் வேண்டுமென்றான்.

இ-ள். போதித்ததைக் கேட்டு நடக்கமாட்டாத அடிமையானாலும், என் தெய்வமே! தேவரீரது கிருபையினால் தேவரீர் அடியேனைத் தடுத்தாளலாமே? உனது பவத்தைக் கெடுக்கும் தந்திரமொன்று இருக்கின்றதென்று அருள்செய்தீரே, அவ்வுபாயம் இத்தன்மையதென்று தேவரீர் காண்பித்து இரக்ஷிக்க வேண்டுமென்றான். எ-று.

இ-ம். சீடனறிவு எவ்வளவு தல்லியமானாலும் அதன் கண்ணாதயமான ஆனந்தத்திற்கு விளக்கமாக அதை விளக்குதல் குரு துரியமாதலால் குருவருளே விளக்கவேண்டு மென்பதாம். எ-று.

அ-கை. அகம்பாவம் இன்றென்பதை அறிந்து ஆத்மஸ்வரூபத்தை உபதேசிக்கத் தொடங்கல்.

அடங்கிய விருத்தி யானென் றறிந்தபின் செறிந்த மண்ணின்
குடம்பையுட் புழுமுன் னாதங் குளவியின் கொள்கைபோலத்
தொடங்கிய குருவுமான்ம சொரூபமே மருவ வேண்டி
உடம்பினுட் சிவனைப்பார்த் துபதேச போது வாரே

இ - ள். விருத்தியடங்கினவனென்று தெரிந்தபின்பு நெருங்கிய பட்கூட்டிலுள் இருக்கின்ற சிருஷ்டியின் முன்னே, சந்திக்கும் ஞானவிழி னது தன்மையைப்போல உபதேசிக்கத் தொடங்கிய ஆசாரியரும் ஆத்ம ஸ்வரூபத்தைச் சீடனையும் பொருட்டுத் தேகத்துள் இருக்கும் சிவனை நோக்கி உபதேசஞ் செய்வார். எ-று.

இ - ம். சீடனது யதார்த்த ஸ்வரூபத்தைப் பார்த்து அவன் அஃ தாக விளங்கும் பொருட்டு அநுக்கிரகிக்கத் தொடங்கினதாம்.

அ - கை. பவத்தை நீக்கும்பொருட்டு அஃதுண்டான காரணமும் அஃது நிற்குங் கால அளவையுங் கூறல்.

வாராயென் மகனே தன்னை மறந்தவன் பிறந்திறந்து
தீராத சுழல்காற் றுற்ற செத்தைபோற் சுற்றிச் சுற்றிப்
பேராத கால நேமிப் பிரமையிற் றிரிவன் போதம்
ஆராயுந் தன்னைத் தானென் றறியுமவ் வளவுந் தானே.

இ - ள். எனது புத்திரனே! கேளாய் தனது ஆத்ம சொரூபத் தை விசாரித்தறியாதவன், அறிவினால் ஆராய்ந்தறியும் ஆத்மாவைப்பிரம மென்று தெரியுமட்டும் சநித்து மரித்து, ஓயாத சுழல்காற்றி லகப்பட்ட சருகைப்போல அச்சனன மரணத்திற் சுழன்று சுழன்று, நீங்காத காலசக் கரத்தினது சுழற்சியிற் சஞ்சரிப்பான். எ-று.

இ - ம். அறிவின்மையால் உண்டான பவம் அறிவு உதயமாய்த் தன்னைத்தானென உணருமட்டும் இருக்கும் என்பதாம். 12

அ - கை. மகாவாக்கிய உபதேசப்பிரகாரம் அறியவேண்டிய பொருள் இதுவென அறைதல்.

தன்னையுந் தனக்கா தாரத் தலைவனையுங் கண்டானேல்
பின்னையத் தலைவன் றானே பிரமமாய்ப் பிறப்புத் தீர்வன்
உன்னைநீ யறிவா யாகி லுனக்கொரு கேடு மில்லை
என்னைநீ கேட்கை யாலே யிதுப தேசித் தேனே.

இ-ள். கூடஸ்தனையும் தனக்கிடமான பிரமத்தையும் தரிசிப்பா னாயின், பின்பு அப்பிரமமே கூடஸ்தனாய் அக்கூடஸ்தனே பிரமமாய்ச் சநந நீங்குவான்; உனது அத்துவித ஸ்வரூபத்தை நீ தெரிந்து கொள்ளு வாயானால் உனக்கொரு கெடுதியுமில்லை; என்னை நீ கேட்கின்றபடியால் எனது அனுபவமான இதைச் சொன்னேன். எ-று.

ப-ம். நசிப்பான தேகமுதல் பிரகிருதி பரியந்தம் ஒவ்வொன் றினும் நசியாமல் தானாய்ச் சேடித்திருக்கிற பிரத்தியேகாத்ம சைதன்னி யத்தைத் 'தன்னை' எனவும், அங்ஙனஞ் சேடித்ததானே அவைக ளனைத்தினும் பூரணமான பிரம சைதன்னியாய் விளங்குவதைத் 'தலை வன்' எனவும், அஃதே இஃது இஃதே அஃதாய் விளங்குஞ் சுத்த சை தன்னியந் தானாகுவதைப 'பின்னையத்தலைவன் றானாய்ப் பிரமமாய்' எனவும், அங்ஙனம் விளங்கிய அனுபவத்திற்கும் உதயாஸ்தமனம் இன் மையால் சநநமரண மின்றென்பதைப் 'பிறப்புத்தீர்வன்' எனவுங் கூறினர். 13

அ-கை. தன்னையறியவேண்டும் என்பதைச் சர்வத்திர சாதாரண மாகக் கொள்ளுந் தேகமெனக் கருதி, அதை அறிந்தவர்கள் சநநமர ணம் நீங்காமையான் அஃதின் உண்மையை யுணர வினாதல்.

என்னைத்தா னசட னாக வெண்ணியோ சொன்னீ ரையா
தன்னைத்தா னறியா மாந்தர் தரணியி லொருவ ருண்டோ
பின்னைத்தா னவர்க ளெல்லாம் பிறந்திறந் துழலு வானேன்
தின்னைத்தா னம்பி னேற்கு நிண்ணய மருளுவீரே.

இ-ள். எனதாசிரியரே; என்னை யான் அறியாதவனாகக் கருதி யோ சொன்னீர்? தன்னைத் தெரியாத மனிதர் பூமியின்கணொருவரு ளரோ? பின்பு அவர்கள் அனைவரும் சநநமரணத்திற் சுழலுவானேன்? தேவரீரை நம்பின அடியேனுக்கு நிச்சயத்தைச் சொல்வீர். எ-று.

ப-ம். ஆசிரியர் தமதநுபவப்படி தேகத்தில் தானாயிருந்த தன்னை அறியவேண்டுமென்ன, அஃதநுபவமாகாத சீடன் தேகமே தான் எனக் கருதி; என்னை யான் அறியவில்லையா என்றானென்பார் 'என்னைத் தானசடனாக வெண்ணியோ சொன்னீர்' எனவும், இங்ஙனம் அறிந்த யாவர்க்குஞ் சநநமரணம் என் நீங்கவில்லை யென்பானென்பார் 'பின்னைத் தா னவர்களெல்லாம் பிறந்திறந் துழலுவானேன்' எனவும், தான் என்பது இஃதென உண்மையாகத் தெரிவிக்கவேண்டுமென்பா னென்பார் 'நிண்ணயமருளுவீர்' எனவும் கூறினார்.

இ-ம். தான் என்பது அநுபவமாகும் பொருட்டு அதனியல்பை விசாரித்தாம். 14

அ-கை. தான் என்பது இஃதெனக் கூறியுந் தோன்றாததற்காக ஆசிரியர் வருத்தமுற்று இரங்குதல்.

இன்னது தேகந் தேகி யிவனென வுணர்வன் யாவன்
அன்னவன் றன்னைத் தானென் றறிந்தவ னாகு மென்றார்
சொன்னபின் றேகி யாரித் தூலமல் லாமலென்றான்
பின்னது கேட்ட வையர் பீழையு நகையுங் கொண்டார்.

இ-ள். சரீரமானது இத்தன்மையுள்ளது. சரீரி இத்தன்மை யுள்ளவன் என்று அறிகின்றவன் எவனோ அவன் கூடஸ்தனத்தைப் பிரமமென்று தெரிந்தவனாவன் என்றார்; அங்ஙனம் போதித்த பின்பு இச்சரீரம் அன்றி சரீரியார் என்றுகேட்டான்; பின்பு அவன் அநுபவத்தைக் கேட்ட ஆசிரியர் துன்பமும் புன்னகையுங் கொண்டனர். எ-று.

ப-ம். இத்தேகந் தானாக எண்ணியிருப்பனை எங்ஙனம் உய்விக்கலாம் என ஆலோசிக்கும் மனவருத்தமும், தேகந் தான் என அறிந்தவன் தேகியையுந் தான் என்று அறிவனென்று மகிழ்ச்சியுங் கொண்டார் என்பார் 'பீழையு நகையுங் கொண்டார்' எனக் கூறினார்.

இ - ம். ஆசிரியர் தமதனுபவமான சுத்த சைதன்னியத்தைத் தான் எனக் கூறச் சீடன் தனக்கனுபவமான தேகந்தான் அன்றித்தான் வேறுளனோ என வினவினதாம். 15

அ - கை. தேகந்தான் அன்று, அதன்கண் உள்ளதேகியே தான்என்பது தனக்குத்தானே தோன்ற, அவத்தாத்திரயங்களை அறிகின்றவன் யார் என ஆசிரியர் வினுதல்.

தேகம தல்லால் வேறே தேகியார் காணே னென்றாய்
மோகமாங் கனவில் வந்து முளைத்திடு மவனார்சொல்லாய்
சோகமாங் கனவு தோன்றாச் சுழுத்திகண் டவனார்சொல்லாய்
ஆகநீ நனவி லெண்ணு மறிவுதா னேது சொல்லாய்.

இ - ள். சரீரத்தையன்றி வேருயுள்ள சரீரியார்? யாண்கண்டிலேன் என்றாய்; மோகமாகிய சொப்பனத்தி லுதித்தவன் யாவன் இதனை நீ சொல்: மயக்கமாகிய சொப்பனந் தோன்றாத சுழுத்தியில் சூனியமாகத் தரிசித்தவன் யார்? சொல்லாய்; ஆகிய இவ்விரண்டையும் நீ சாக்கிரத்தில் நினைக்கும் அறிவுயாது? சொல். எ-று.

இ - ம். தேகத்தைத் தவிரத் தேகி ஒருவன் உளன் என்பது தோன்ற வினுவினதாம். 16

அ - கை. தேகத்தின்கண் அவத்தைகளை அறிகின்ற தேகி ஒருவன் உளனெனத் தோன்றுகிறது, அதனை விளக்கவேண்டும் எனல்.

கனவுகண் டதுநான் கண்ட நனவுள நினைவு நீங்கிக்
கனவுகண் டதுமிரண்டுங் காணுத சுழுத்தி கண்டும்
தினமனு பவித்த லொக்குந் தெரியவு மில்லை சற்றே
மனதினி லுதிக்கும் பின்னை மறைக்கும தருளு வீரே.

இ - ள். சாக்கிராவத்தையில் பார்த்ததும், யான்பார்த்த, சாக்கிரத்திலுள்ள நினைப்புநீங்கிச் சொப்பனத்தில் பார்த்ததும் இவ்விரண்டையும்

த்தைகளின் தொழிலில்லாத சுழுத்தியில் சூனியத்தைப் பார்த்ததும், காட்டாது மறுபவிப்பதனுல் தேவரீர் தேகி ஒருவன் இருக்கின்றுனென் றருளியது ஒக்கும்; அது பிரத்தியக்ஷமாகவு மில்லை; சற்று மனதிற் றோன்றுகின்றது; பின்பு மறைகின்றது; அதின் ஸ்வரூபத்தைக்கிருபை செய்வீர். எ-று.

கண்டதென்பது கண்டேனெனவும் மறையு மென்பது மறைக்குமெ னவுந் திரிந்து நின்றன.

இ-ம். தான் என்பது தேகம் அன்று, தேகி என அவத்தை களை முன்னிட் டறிவிக்க, ஒருவாற்றான் அறிந்த சீடன் அஃது மின்மினிபோலத் தோன்றி மறைதலின், அதன் யதார்த்த ஸ்வரூபம் இஃதென விளங்க அனுக்கிரகிக்க வேண்டிக்கோடலாம். 17

அ-லக. முன்தேகந் தானு யிருந்தவனைக் கிஞ்சித்து விலக்ஷணப்ப டுத்திப் பின் தடஸ்த லிலக்கணையான் முன்புசடமான தேகவிலக்க ணங்கூறி, அதை நீங்கிப்பின் சித்தேதானுணதேகி இலக்கணங்கூ றத் தொடங்கல்.

தாலத்தின் மரங்கள் காட்டித் தனிப்பிறை காட்டுவார்போல்
ஆலத்தி னுடுக்கள் காட்டி யருந்ததி காட்டுவார்போல்
தூலத்தை முன்பு காட்டிச் சூக்கும சொரூப மான
மூலத்தைப் பின்பு காட்ட முனிவரர் தொடங்கி னாரே.

இ-ள். பூமியின்கணுள்ள தருக்களைக் காண்பித்துத் தனியான மூன்றாம்பிறையைத் தரிசிப்பவர் போலவும், ஆகாயத்தின்கணுள்ள நக்ஷத்திரங்களைக்காட்டி அருந்ததியைக் காண்பிப்பவர் போலவும், தூலமா யுள்ள தத்துவங்களை முன்னே தரிசிப்பித்து, அணுவுக்கணுவான கார ணத்தைப் பின் தரிசிப்பிக்க ஆசிரியர் ஆரம்பித்தார் எ-று.

ஆலமென்பது ஆகுபெயர்.

இ - ம். போதகாரும்படி போதிக்குமாறு கூறினதாம். 18

அ - கை. தானாகிய சித்தைத் தனியே தரிசிப்பிக்கும் நிமித்தம் தன்னைச் சசீவபரமாகத் தோற்றுவிக்கும் ஆரோபயுத்தியையும், அத்துவிதமான கூடஸ்த பிரமமாகத் தோற்றுவிக்கும் அபவாதயுத்தியையுங் கூறத்தொடங்கல்.

அத்தியா ரோப மென்று மபவாத மென்றுஞ் சொல்லும்
உத்தியாற் பந்தம் வீடென் றுரைக்கும் வேதாந்த மெல்லாம்
மித்தையா மாரோபத்தாற் பந்தமா மபவாதத்தால்
முத்தியா மிவ்விரண்டின் முந்தியா ரோபங் கேளாய்.

இ - ள். அத்தியாரோபம் என்று சொல்லுகின்ற உத்தியினால் பந்தமெனவும், அபவாதம் என்று சொல்லுகின்ற உத்தியினால் வீடெனவும், உபநிடதம் அனைத்துஞ் சொல்லும்; ஆதலால், இல்லாத ஆரோபத்தால் பந்தமாம்: அபவாதத்தினால் வீடாம்: இவ்விரு வகையில் முன்பு ஆரோபத்தைக் கேட்பாய். எ-று.

இ - ம். அத்தியாரோப அபவாத விலக்கணங் கூறினதாம். 19

அ - கை. அத்தியாரோப இலக்கணத்தை திஷ்டாந்த ரூபமாகக் கூறுதல்.

ஆரோப மத்தியாசங் கற்பனை யாவவெல்லாம்
ஓரோர் வஸ்துவினை வேறே யோரோர் வஸ்துவென வோர்தல்
நாரூடு பணியாத் தோன்ற னரனாகத் தறியிற் றோன்றல்
நீரூடு கானற் றோன்ற னிரந்தரம் வெளியிற் றோன்றல்.

இ - ள். ஆரோபமென்றும் அத்தியாசமென்றும் கற்பனையென்றும் ஆவன அனைத்தும் ஒவ்வொருபொருளை வேறான ஒவ்வொரு பொருளென அறிதலாம்; பழுதையினிடத்துச் சர்ப்பந் தோற்றுதல் கட்டையி

னிடத்து மகனைத் தோற்றுதல், கானலினிடத்துச் சலந்தோற்றுதல், ஆகாயத்தினிடத்தில் தாமின்மை தோற்றுதல். எ-று. 20

அ - கை. முற்கூறிய திஷ்டாந்தம்போலச் சுத்த சைதன்னியத்தில் சகசீவபரர் தோற்றமெனல்.

இப்படிப் போல நாம ரூபங்க ளிரண்டு மின்றி
ஒப்பமா யிரண்டற் றொன்று யுணர்வொளி நிறைவாய் நிற்கும்
அப்பிர மத்திற் றோன்று மைம்பூத விகார மெல்லாம்
செப்பிய கற்பி தத்தாற் செனித்தவென் றறிந்து கொள்ளே.

இ - ள். இவைபோல நாமரூபமான இரண்டு தன்மைகள் இன்றி ஒற்றுமையாயும் துவிதம் இன்றி ஏகமாயும் ஞானப்பிரகாச நிறைவாயும் இருக்கின்ற அந்தப்பிரமத்தில் தோற்றுகின்ற பஞ்சபூதம் முதலிய வேறுபாடனைத்தும் சொல்லாநின்ற ஆரோபத்தால் உண்டானவைகளென்று தெரிவாய்.

இ - ம். உள்ளதான சகத்தில் இல்லாததான சகசீவ பரந்தோன்று முறைமை இங்ஙனமெனக் கூறினதாம். 21

அ - கை. பிரமத்தில் கற்பிதமாகச் சீவேஸ்வர சகத்து உண்டான முறையை இருவகையாகக் கூறத்தொடங்கி முன்னர் ஒருவகையைக் கூறுகின்றார்.

அதுதானெப் படியென் றக்கா லநாதியாஞ் சீவ ரெல்லாம்
பொதுவான சுழுத்தி போலப் பொருந்துமவ் வியத்தந் தன்னி
இதுகால தத்து வப்பே ரீசனுட் பார்வை யாலே [ல்
முதுமூல சுபாவம்விட்டு முக்குணம் வியத்தமாமே.

இ - ள். அக்கற்பனை சிருஷ்டி எப்படி உண்டாயிற்றெனின், அநாதியாயுள்ள சித்துருபமான சீவகோடிகள் யாவும் சகலருக்கும் சாதாரண அநுபவமான சுழுத்தியைப்போல சூனியமாயிருக்கும் மூலப்பிரகிருதியா

கிய மாயையின் கண்ணே அமையும்; இம்மாயையானது காலதத்துவ மென்னும் நாமமுடைய ஈசுரனுடைய திருஷ்டியினாலே முன்னிருந்த காரணத்தன்மையை யொழித்து மூன்றுகுணங்களாக வெளிப்படும். 22

அ - கை. முக்குண இயல்பு கூறல்.

உத்தம வெளுப்பு நீல முபயமாஞ் சிவப்பு மாகும்
சுத்த சத்துவந் தமத்தோ டசுத்ததத் துவப்பேர் சொல்லும்
சத்துவ மழுக்கி ருட்டாய்ச் சாற்றுமுக் குணமு மூன்றாய்
ஒத்துள வெனினுந் தம்மு ளொருகுண மதிக மாமே.

இ - ள். முதலாவதான வெண்ணிறமும், இரண்டாவதான செம்மைநிறமும், மூன்றாவதான கருநிறமும் ஆகாநின்ற தூய்தான சத்துவகுணமும் ரசோகுணமும் தமோகுணமும் என நாமங்கூறப்பெறும்; சத்துவமான சுத்தமும் அழுக்கும் இருட்டுமாகச் சொல்லப்பட்ட இம்மூன்று குணங்களும் மூன்றாகி ஒத்திருப்பவைகளாயினும், அவைகளுள் இரண்டடங்கி யொருகுணம் விசேடித்துநிற்கும். எ-று.

இ - ம். வித்தைவடிவமான சீவர்கள் பந்தப்பட்டிருக்குந் தங்கள் மறதியான அவ்வியத்தத்தில் காலதத்துவமு முக்குணங்களும் வியத்தமாயின வென்பதாம். 23

அ - கை. மற்றொருவகைச் சிருட்டியின் மாபு கூறத் தொடங்கல்.

ஒருவழி யிதுவா மித்தை யொருவழி வேறாச் சொல்வார்
மருவுமவ் வியத்தந் தானே மகதத்வ மாகு மென்றும்
அருண்மக தத்து வந்தா னகங்கார மாகு மென்றும்
கருவகங் கார மூன்றாய்க் காட்டிய குணமா மென்றும்.

இ - ள். ஒருமார்க்க மிதுவாம்; இதையே மற்றொரு மார்க்கமாகச் சொல்லுவார்கள்; அஃது எங்ஙனமெனின், பொருந்திய அவ்வியத்தமே மகதத்துவமாம் எனவும், சொல்லிய மகதத்துவமே அசங்காரதத்துவமாம்

எனவும், கருவாகிய அகங்காரமே மூன்றாத் தெரிவித்த குணங்களாம் எனவுஞ் சொல்லப்படும். எ-று.

இ-ள். சுத்த சைதன்னியமான தன்னை எதிரிட்டறிய உதயமான அறிவுக்கு முன்புண்டான மறதியே அவ்வியத்தமான பிரகிருதி எனவும், அவ்வறிவு பகிர்முக உன்முகமான இடமே மகத்தத்துவமெனவும், அஃது தன்னிடத்துப் பிரதிபலனமான ஆரோபத்தைத் தான் என்பதே அகங்கார தத்துவம் எனவும், அதனிர்ச்சலமே சத்துவம் எனவும், அதன் சலனமே ரஜசு எனவும், அதன்மக்கினமே தமம் எனவும் உண்டான உகபற் சிருட்டியைத் தனதனுபவத்திற் காண்க. 24

அ-கை. மேற்கூறிய குணங்களிற் சகசீவபர உற்பவத்தியைக் கூறுவான் தொடங்கி முன்னர்ப்பரன் உற்பத்தியைக் கூறுகின்றார்.

இக்குணங் களிதே விண்போ னிருக்குஞ்சிற் சாயைதோன்று
முக்குணங் களினுந் தூய்தா முதற்குண மாயை யாகும் [ம்
அக்குணம் பிரமச் சாயை யந்தரியாமி மாயை
எக்குணங் களும்பற் றேதோ னிமித்தகா ரணமா மீசன்.

இ-ள். இம்மூன்று குணங்களில் ஆகாயம்போல நிரவயமா யிருக்கின்ற சித்சாயை பிரதிபலிக்கும்; மூன்று குணங்களிலும் சுத்தமாகிய சத்துவகுணம் மாயையாம், அந்தச் சத்துவத்திற் பிரதிபலித்த பிரமப்பிரதி பலனமே அந்தரியாமியாம். மாயாசம்பந்தமான எந்தக்குணங்களும் பற்றாத வினை பஞ்சபூத பவுதிக முதலிய சிருட்டிக்கு நிமித்தகாரணமாகிய ஈசனாம். 25

அ-கை. ஈசனது காரணசரீர உற்பத்தியையுஞ் சீவனது உற்பத்தியையுங் கூறல்.

ஈசனுக் கிதுசுழுத்தி யிதுவேகா ரணசரீரம்
மேதசமா னந்தமாகுங் குணமிரா சதமிகுந்தைத்

தேசறு மவித்தை தோறுஞ் சிற்சாயை சீவகோடி
நாசமா முயிர்கட் கப்போது நாமமும் பிராஞ்ஞனாமே.

இ - ள். இவ்வீஸ்வரனுக்கு இம்மாயையே சுழுத்தி யவத்தையாம்; இஃதே காரண சரீரமாம்; இதுவே ஆனந்த மயகோசமாம்; ரசோ குணம் அவித்தையாம்; விளக்கமில்லாத அவித்தைகள் தோறும் பிரதி பலித்த ஞானப்பிரதி பலனமே சீவராசிகளாம் யாவையும் இறந்த சுழுத்தியை அபிமானிக்கும் சீவர்களுக்கு அவ்வவசரத்தில் பெயர் பிராஞ்ஞனும். 26

அ - கை. சீவனது காரணசரீர உற்பத்தியைக் கூறுகின்றார்.

அழுக்கொடு பற்றுஞ்சீவர்க் கதுவேயா னந்தகோசம்
சுழுத்திகா ரணசரீரஞ் சொன்னவிம் மட்டுமோகம்
முழுக்குணத் திரண்டால்வந்த மூலவாரோபஞ் சொன்னோம்
வழுத்துசூக் குமவாரோப வழியுநீ மொழியக் கேளாய்.

இ - ள். அவித்தையைச் சேர்ந்திருக்கின்ற சீவர்களுக்கு அவ்வவித்தையே ஆநந்தமயகோசமாம்; அஃதே சுழுத்தி அவத்தையாம்; அஃதே காரணசரீரமாம்; சொல்லிய இதுபரியந்தம் மயக்கமாகத் தோற்றிய பிரகிருதியின் முழுதுமான சத்துவ ரசோகுணத்திலுண்டான காரணசரீர அத்தியாசத்தை உரைத்தோம்; சொல்லப்பட்ட சூக்கும சரீர அத்தியாசமுண்டான மார்க்கத்தையும் யாஞ்சொல்ல நீ கேட்பாய். எ-று.

ப - ம். சுத்த சைதன்னியைச்சாயை அதிஷ்டானமாதலின் அதனைப் பிரமகூடஸ்தரெனவும், அஃது சத்துவரசோகுணத்தில் தங்குதலின் அக்குணங்களை மாயை அவித்தையெனவும், அவற்றில் பிரதி பிம்பித்த சாயை ஆரோபமாதலின் அவற்றைச் சீவேஸ்வரரெனவும், அம்மாயை அவித்தைகள் மேல்விளைவுக்குக் காரணம் ஆதலின் அவைகளைக்காரணசரீரமெனவும், அவைகளில் அனைத்தும் அடங்கி நிற்றலைச் சுழுத்தி அவத்தையெனவும், அவைகளில் அன்புற்று நிற்றலை ஆநந்தமயகோச

மெனவும், அவைகளை அபிமானித்து நிற்பவரை அந்தரியாமி பிராஞ்ஞனெனவுங் கொள்க.

இ - ம். ஜீவேசுவர உற்பத்தியும் அவர்களுக் குண்டான காரண சரீர அத்தியாசமும் கூறினதாம். 27

அ - கை. ஜீவேசுவரர்களுக்குச் சூட்சுமசரீரம் உண்டான முறைமையைக் கூறுவான் தொடங்கி முன்பு சத்திகளின் தோற்றம் உரைத்தல்.

ஏமமா யாவிநோத வீசனா ரருளினாலே
பூமலி யுயிர்கட் கெல்லாம் போகசா தனமுண் டாகத்
தாமத குணமி ரண்டு சத்தியாய்ப் பிரிந்து தோன்றும்
வீமமா மூட லென்றும் விவிதமாந் தோற்ற மென்றும்.

இ - ள். மோகமாகிய மாயையை விளையாட்டாகவுடைய ஈசுவரனுடைய கிருபையினால் பொலிவு மிகுந்த ஜீவர்களனைவர்க்கும் அநுபோக சாதனம் உண்டாகும்பொருட்டுத் தமோகுணமானது பயங்கரமான ஆவரணமெனவும், நாநாவிதமாகும் விக்ஷேபமெனவும் இரண்டு சத்திகளாய்ப் பிரிந்து தோன்றும். எ-று.

ப - ம். உயிர்கட்கெல்லாம் போகசாதனம் உண்டாக என்பதனால் ஜீவர்கள் சமஷ்டியே ஈசுவரனாதலின், அவ்வீசுவரனுக்குங் கொள்க.

இ - ம். தமோகுணப் பிரதிபலமான சிற்சாயையின் அறிவின்மை ஆவரணம், அறிவு விக்ஷேபமும் என இரண்டு சத்திகளாயின என்பதாம். 28

அ - கை. விக்ஷேபசத்தியில் தன்மாத்திரையான சூட்சும பூத உற்பத்தி கூறல்.

தோற்றமாஞ் சத்தி தன்னிற் சொல்லிய விண்ணும் விண்ணில்
காற்றதாங் காற்றிற் றீயாங் கனலினீர் நீரின் மண்ணும்

போற்றுமிவ் வைந்து நொய்ய பூதங்க ளென்றும் பேராம்
சாற்றுமற் றிவற்றிற் போக சாதன தனுவுண்டாகும்.

இ - ள். விக்ஷேபசத்தியில் சொல்லப்படுஞ் சத்ததன்மாத்திரையான ஆகாயமுண்டாகும்; அவ்வாகாயத்தில் பரிச தன்மாத்திரையான வாயுவுண்டாகும்; அவ்வாயுவில் ரூபதன்மாத்திரையான அக்கினியுண்டாகும்; அவ்வக்கினியில் ரசதன்மாத்திரையான அப்புவுண்டாகும்; அவ்வப்புவில் கந்ததன்மாத்திரையான பிருதிவி யுண்டாகும்; போற்றப்பட்ட இத்தன் மாத்திரைகளைந்தும் சூக்கும பூதங்களென்று பெயர்பெறும்; சொல்லப்பட்ட இத்தன் மாத்திரைகளில் அனுபோகத்துச் சாதனமான சூக்குமசரீரந் தோன்றும். எ-று.

அ - கை. தன்மாத்திரை சத்துவ குணத்தில் அந்தக்கரண ஞானேந்திரிய உற்பத்தி கூறல். 29

ஆதிமுக் குணமிப்பூத மடங்கலுந் தொடர்ந்து நிற்கும்
கோதில்வெண் குணத்தி லைந்து கூறுணர் கருவியாகும்
ஓதிய பின்னை யைந்து முளம்புந்தி யிரண்டா ஞான
சாதன மாமிவ் வேழுஞ் சற்குணப் பிரிவி னாலே-

இ - ள். முன் உண்டான மூன்று குணங்களும் இத்தன்மாத்திரைகள் ஐந்திலும் கூடியிருக்கும் குற்றமற்ற சத்துவகுணத்தில் வியஷ்டியான ஐந்துபங்கும் ஞானேந்திரியங்களாம்; சொல்லப்பட்ட சமஷ்டியான ஐந்துபங்கும் மனம் என இரண்டாகும் சததுவகுண அம்சம் ஆதலால் இந்த ஏழும் அறிகருவிகளாம். எ-று. 30

அ - கை. தன்மாத்திரையின் ரசோகுணத்தில் வாயு கன்மேந்திரியங்களின் உற்பத்தி கூறல்.

இராசத குணத்தில் வேறிட் டெடுத்தகூ றைந்துமைந்தும்
பிராணவாயுக்களென்றும் பெருந்தொழிற் கன்மமென்றும்

பாவிய பெயரா மிந்தப் பதினேழு மிலிங்க தேகம்
சுராசுரர் நரர்வி லங்காய்த் தோன்றிய வுயிர்கட் கெல்லாம்.

இ-ள். ரசோகுணத்தில் எடுத்து ஒன்றாகவைத்த பஞ்ச ஐந்தும் பிராணாதி பஞ்சவாயுக்களெனவும், தனித்தனியே எடுத்த பஞ்ச ஐந்தும் பெரிய கிரியையைச்செய்யுங் கன்மேந்திரியங்களெனவும், பாவிய நாமங்களாம்; இப்பதினேழு தத்துவங்களும் தேவர்களும் அவுணர்களும் மனிதர்களும் மிருகங்களுமாகி உண்டான சீவர்களை அனைவர்க்கும் ஸூக்கும சரீரங்களாம். எ-று.

சில நூலாசிரியர் ஸூக்குமதேகம் இருபத்துநான்கு தத்துவம் என்றதை இந்நூலாசிரியர் விடயம் ஐந்தையும் ஞானேந்திரியத்தில் அடக்கியும், அகங்காரத்தையுஞ் சித்தத்தையு மனம் புத்தியில் அடக்கியும் பதினேழாகக் கூறினாரெனக்கொள்க.

இ-ம். சீவேஸ்வரருக்கு உண்டான ஸூக்குமசரீர அத்தியாசங் கூறினதாம். 31

அ-கை. ஸூக்குமதேகத்தினால் வருங் கற்பனா நாமங்களைக் கூறல்.

இவ்வுடன் மருவுஞ் சீவர்க் கிலிங்கதை சதனென் றாகும்
இவ்வுடன் மருவு மீசர்க் கிரணிய கருப்ப னாகும்
இவ்வுட லிரண்டும் பார்க்கி லிங்கஸூக் குமசரீரம்
இவ்வுடற் கோச மூன்று மிதுகனா வவத்தை யாமே.

இ-ள். இவ்வியஷ்டி ஸூக்குமதேகத்தைச் சேர்ந்து அபிமானிக்குஞ் சீவர்களுக்கு விளங்காநின்ற அபிமானி நாமம் தைசதன் என்பதாம்; ஸமஷ்டி ஸூக்குமதேகத்தைச் சேர்ந்து அபிமானிக்கிற ஈஸ்வரனுக்கு அபிமானி நாமம் இரணிய கருப்பனென்பதாம்: இச்சரீரம் சீவேஸ்வரர்களிருவர்க்கும் ஸூக்கும சரீரமாம்; இச்சரீரத்துக்குப் பிராணமயம் மனோமயம் விஞ்ஞானமயம் எனக் கோசங்கள் மூன்றாகும்; இது சொப்பனாவஸ்தையாம். எ-று.

தன்மாத்திரைகள் சூக்குமம் ஆதலின் அவற்றைச் சூக்கும பூதமெனவும், அவற்றின் தழைப்பைச் சூக்கும தேகமெனவும், அதை அபிமானிப்பவர்களை இரணிய கருப்பன் தைசதனெனவும், அது மனோராச்சியஞ் செய்தலைச் சொப்பனவஸ்தை யெனவும், அஃது பிராண மனோ புத்திகளாகத் தன்னை மறைத்தலைக் கோசங்க ளெனவுங் கொள்க. 32

அ - கை. பாஞ்சபூத பௌதிகமான சகத்து உற்பத்தியைக் கூறுவான் தொடங்கி அஃது துண்டாகுதற் கேது கூறுகின்றார்.

சூக்கும சகமிம் மட்டுஞ் சொல்லினோ மிப்பாற் றூலம்
ஆக்குமா றேபந்தானு மடைவினின் மொழியக் கேளாய்
தாக்குமிவ் வுயிர்க்குத் தூல தனுவும்போ கமுமுண்டாகக்
காக்குமிவ் வீசன்பஞ்சீ கரணங்கள் செய்தான் றனே.

இ - ள். சூக்கும சரீரப் பிரபஞ்சத்தை இது பரியந்தஞ் சொன்னோம்; மேல் தூலபூதமும் தூலதேகமு முண்டாக்கும் அத்தியாசத்தையும் கிரமமாகச் சொல்லக்கேட்பாய்; சூக்குமசரீரத்திற் சேர்ந்திருக்கின்ற இச்சீவர்களுக்குத் தூலதேகமும் அனுபோகமும் உண்டாகும்படி சீவர்களைப் பாதுகாக்கும் இவ்வீசுவரன்பஞ்சீகரித்தலைச் செய்தனன் எ-று.

தனுவும் போகமும் என்ற உம்மையால் அண்டமும் புவனமுங் கொள்க. 33

அ - கை. பஞ்சீகரணமும் அவற்றினுல் ஆய காரியமுங் கூறல்.

ஐந்துபூத மும்பத் தாக்கி யவை பாதி நந்நான் காக்கி
நந்துதன் பாதிவிட்டு நாலொடு நாலுங் கூட்ட
வந்தன தூலபூத மகாபூத மவற்றினின்றும்
தந்தன நான்காந் தூல தனுவண்ட புவன போகம்.

இ - ள். தமோகுணப் பங்காகிய சூக்கும பஞ்சபூதங்களைப் பத்துப் பங்கு செய்து, அவற்றிற் பகுத்த பாதியை ஒவ்வொன்றை நான்கு

நான்குசெய்து, கேடில்லாத தன் அம்சமான பாதியை நீக்கி, மற்ற நான்கோடு நான்கையுஞ் சேர்க்கத் தூலபூதமும் உண்டாயின; தூல பூதமாகிய அவைகளினின்று உண்டாக்கப்பட்டன தூலசரீரமும் அண்டமும் புவனமும் போகங்களும் ஆகிய நான்குமாம். எ-று.

அண்டம் என்பது பஞ்சபூத சமஷ்டி எனவும், புவனம் என்பது அவைகளிலுள்ள பதப்பிராப்தி ஸ்தானங்கள் எனவுங் கொள்க.

இ-ம். சூட்சுமபூத பஞ்சீகரிக்கத் தூல பூதமும் அவற்றில் தூல சரீரமுதலிய நான்குந் தோற்றின என்பதாம். 34

அ-கை. தூல தேகத்திலுல் வருங் கற்பனு நாமங்களைக் கூறல்.

தூலமே மருவுஞ் சீவன் சொல்லிய விசுவ னாகும்
தூலமே மருவு மீசன் சூழ்விராட் புருட னாகும்
தூலஞ்சாக் கிரவ பத்தை சொன்னதோ ரன்னகோசம்
தூல்கற் பனையீதென்று தொகுத்தது மனத்திற்கொள்வாய்.

இ-ள். வியஷ்டி தூல தேகத்தைச் சேர்ந்து அபிமானிக்கின்ற சீவனுக் கபிமானிநாமஞ் சொல்லப்பட்ட விசுவன் என்பதாம்; சமஷ்டி தூலதேகத்தைச் சேர்ந்து அபிமானிக்கின்ற ஈசுவரனுக் கபிமானிநாமம் கருதாகின்ற விராட்புருடன் என்பதாம்; இவை இருவர்க்குந் தூலதேகமாம்; இவை இவ்விருவர்க்குஞ் சாக்கிராவத்தையாம்; சொல்லிய தீது இவ்விருவர்க்கும் அன்னமய கோசமாம்; தூலசரீர அத்தியாசம் இதுவென்று தொகுத்துச் சொன்னதை மனதிலுணர்வாய். எ-று.

தன்மாத்திரை மிசிரமானதைத் தூலபூதம் எனவும், அஃதோருருவமானதைத் தூலசரீரம் எனவும், அதை அபிமானிப்பவர்களை விசுவன் விராட்டு எனவும், அதினென்றெதிரிட்டு அறிதலைச் சாக்கிராவத்தை எனவும், அஃது அன்னமயமாதலின், அதனை அன்னமயகோசம் என வுங்கொள்க.

இ-ம். அபிமான நாமமுதலியவைகள் உண்டான அத்தியாசங் கூறினதாம். 35

அ-கை. சீவேசுரர்களுக்கு உபாதி ஒன்ருயின் அவர்கள் பேதமறிவது எங்ஙனம் என்ற விஞவுக்கு உத்தரம்.

சீரிய வீசனுர்க்குஞ் சீவர்க்கு முபாதி யொன்றேல்
ஆரிய குருவே பேத மறிவதெப் படியென் றக்கால்
காரிய வுபாதி சீவன் காரண வுபாதி யீசன்
வீரிய மிகு சமட்டி வியட்டியாற் பேத மாமே.

இ-ள். சிறப்பையுடைய ஈசுவானுக்கும் சீவனுக்கும் உபாதிஒன்ருனல், அறிவுருவான ஆசிரியரே! சீவேசுவரர் என்கிற வேற்றுமையறிவது எவ்வாறு என்பாயாகில், காரியோபாதியுள்ள சீவர்கள் வியஷ்டியிஞலும் காரணோ பாதியுள்ள ஈசுவரன் வீரமிகுந்த சமஷ்டியிஞலும் பேதமாகும். எ-று. 36

இதுவுமது.

மரங்கள்போல் வியட்டிபேதம் வனமெனல் சமட்டிபேதம்
சரங்கடா வரங்கள்பேதந் தனியுடல் வியட்டியென்பார்
பரம்பிய வெல்லாங்கூட்டிப் பார்ப்பது சமட்டியென்பார்
இரங்கிய பலசீவர்க்கு மீசற்கும் பேதமீதே.

இ-ள். தருக்களைப்போல வியஷ்டியின் பேதமாம்; வனம் என்பது சமஷ்டியின்பேதமாம்; சராசரவுயிர்களின் பேதமான தனிமையான தேகத்தை வியஷ்டி என்று சொல்லுவார்கள்; விரிந்த தூலதேக முதலிய அனைத்தையுஞ் சேர்த்துக் காண்பது சமட்டி என்று சொல்லுவார்கள்; இரங்காநின்ற அநந்த சீவர்களுக்கும் ஈசுவானுக்கும் பேதம்இதுவாம். எ-று.

இ-ம். சமட்டியிஞல் ஈசுவானுக்கும் காரணோபாதியும், வியட்டியாற் சீவருக்குக் காரியோபாதியுமாம் என்பதாம். 37

அ - கை. அத்தியாரோப உத்தியினால் தன்னிடத்தில் ஆரோபமாகத் தோற்றின சகசிவபாங்களைக் கூறி அவைகள் உண்டான கிரமப்படி லயிப்பிக்கும் அபவாத உத்தியைக் கூறத் தொடங்கல்.

கற்பனை வந்தவாறு காட்டினேங் காண்பவெல்லாம்
சொப்பனம் போலவெண்ணித் துணிந்தவன் ஞானியாவான்
செற்புதை மழைகா லம்போய்த் தெளிந்தவா காயம்போல
அற்புத முத்திசேரு மபவாத வழியுங் கேளாய்.

இ - ள். ஆரோபமான சிருட்டியுண்டான முறையை அறிவித்தோம்; திரிசியம் அனைத்தையும் கனவைப்போலக் கருதித் தெளிந்தவன் ஞானியாவான்; மேகம் நிறைந்திருக்கின்ற வருஷகால நீங்கிச் சரத்காலத்தில் தெளிந்த ஆகாயம்போல அற்புதமான மோக்ஷமடையும் அபவாத மார்க்கத்தையுங் கேட்பாய். எ-று. 38

அ - கை. அபவாத இலக்கணங் கூறல்.

அரவன்று கயிறென் றாற்போ லாளன்று தறியென் றாற்போல்
குரவன்ற னுபதே சத்தாற் குருநூல் வெளிச்சங் கொண்டு
புரமன்று புவனமன்று பூதங்களன்று ஞானத்
திரமென்றும் பிரமமென்றுந் தெளிவதே யபவா தங்காண்.

இ-ள். சர்ப்பமன்று பழுதையென்றது போலவும், மகனன்று குற்றியென்பது போலவும், ஆசிரியர் உபதேசமென்னு ஞானக்கண்ணினால் தத்துவத்தைச் சொல்லும் ஞானசாஸ்திரங்களாகிய பிரகாசத்தைக்கொண்டு, தேகமுதலிய தத்துவங்களன்று, அவைகட்கு அதிட்டானமான கூடஸ்த சைதன்னியமென்னும் புவனங்களுமன்று, பஞ்சபூதங்களுமன்று, அவைகட்கு அதிட்டானமான ஸ்திரஞானமெனவும் பிரமமெனவும் அனுபவமாய்த் தெளிவதே அபவாதமாம். எ-று.

புவனமென்பது சகளீகரித்திருக்குங் கைலாசமுதலிய ஸ்தானமும், பூதங்களென்பது விராட்டுருவமும் எனக்கொள்க.

இ—ம். ஆரோபத்தை நீக்கி அதிஷ்டானத்தைத் தரிசிப்பித்ததாம். 39

அ—கை. அதிஷ்டானத்தைத் தவிர ஆரோபம் இன்றெனல்.

படமுநூ லும்போற் செய்த பணியும்பொன் னும்போற்
பார்க்கின், கடமுமண் ணும்போ லொன்றாங் காரியகாரணங்
கள், உடன்முதற் சுபாவமீறா யொன்றிலொன் றுதித்த வா
றே, அடைவினி லொடுக்கிக் காண்ப தபவாத வுபாய மாமே.

இ—ள். வஸ்திரமும் நூலும்போலவும், செய்த ஆபரணமும் பொன்னும்போலவும், கலசமும் மண்ணும்போலவும், பார்க்குமிடத்தில் காரிய காரணங்களிரண்டும் ஒன்றேயாம்; தூலதேக முதற்பிரகிருதி பரியந்தம் ஒன்றிலொன் றுண்டான பிரகாரம் முறையாக அடக்கிச் சுத்தப் பிரமத்தைத் தரிசிப்பது அபவாத உத்தியாம். எ—று.

இ—ம். தன்னிடத்தில் கற்பிதமான சகசீவ பரங்களைத் தனது உருவமாக ஒடுக்கிக் காண்பதே அபவாத உத்தியென்பதாம். 40

அ—கை. முற்கூறிய ஆவரணசத்தியின் இலக்கணம் யாதென வினாதல்.

தூடண தமத்தில் வந்த தோற்றமாஞ் சுத்தி செய்யும்
ஈடணை விகாரஞ் சொன்னீ ரிரண்டுசத் திகளென் றீரே
மூடலாஞ் சத்திசெய்யு மோகமுஞ் சொல்லு மையா
கேடறுங் குருவேயென்னக் கிருபையோ டருள்செய்வாரே.

இ—ள். நித்தியமாகிய குருசுவாமியே! தூஷிக்கத்தக்க தமோகுணத்தில் உண்டான விக்ஷேபசத்தி செய்யாநின்ற இச்சாரூபப் பிரபஞ்சம்

உண்டான பேதபாகங்களைச் சொன்னீர்; இரண்டு சத்திகளென்று சொன்னீரே, ஆவரண சத்திசெய்கின்ற மயக்கத்தையும் அருளவேண்டு மென்றுகேட்க, கருணையோடும் ஆசிரியர் அநுக்கிரகிப்பார். எ-று. 41

அ - கை. ஆவரணசத்தியின் தன்மைகூறல்.

தானிகர் தனக்கா மீசன் றனையுந்தங் களைத்தாங் கண்ட
ஞானிக டமையு மன்றி நாஸ்தின பாதி யென்னும்
ஊனிறை யுயிர்க ளுள்ளி னுணர்விழிக் குருடாம் வண்ணம்
வானிலந் திசைகண் மூடு மழைநிசி யிருள்போன் மூடும்.

இ-ள். தனக்குத் தானே சமானமாகிய பிரமமயமான ஈசனையும், தாமாகிய கூடஸ்தரைத் தரிசித்த ஞானவான்களையும் அல்லாமல் பிரம மென்பது வேறு இல்லை; இருக்கிற் காணுமே என்கின்ற இருமுகத்தினால், தேகத்தில் வசிக்கும் சீவர்களின் அகத்தின்விளங்கிய ஞானதிருட்டியானது தெரியாதபடி, விண் மண் திக்குகளை மூடுகின்ற கார்காலத்து இரவின் இருளைப்போல, ஆவரண சத்தியானது மறைக்கும். எ-று.

இ - ம். கூடஸ்த பிரமங்களை மறையாமல் அவைகளின் ஆரோபமான சீவேசுமரர்களை மறைக்கு மென்பதாம். 42

இதுவுமது.

பூர்ணமாம் பிரமத்துக்கும் புறத்துள விகாரங் கட்கும்
ஆன்றகூ டத்தனுக்கு மகத்துள விகாரங் கட்கும்
தோன்றிய பேதஞ் சற்றுந் தோன்றமன் மறைந்து மூடும்
ஊன்றிய பவவியாதி யுண்டாக்கு மாபாதி யீதே.

இ - ள். பூரணமான பிரமஸ்வரூபத்துக்கும், புறம்பிலுள்ள ஈசன் முதலிய பேதபாகங்களுக்கும், மாட்சிமையுள்ள அறிவுருவான கூடஸ்தனுக்கும், அகத்திலுள்ள சீவன் முதலிய பேதபாகங்களுக்கும் உண்டான

சித்சடபேதங்களை எவ்வளவுந் தோற்றுமல் மறைக்கும் ஸ்திரமான பவப் பிணியை விளைவிக்கும் உபாதியானது இவ்வாவரண சத்தியேயாம். எ-று.

இ-ம். அதிஷ்டான ஆரோபங்களின் பேதந் தெரியவொட்டா மல் நாஸ்திநபாதி என்னும் இருமுகத்தால் ஞான திருஷ்டியை மறைக் குதல் ஆவரணசத்தியின் தன்மை என்பதாம். 43

அ-கை. அதிஷ்டான திருஷ்டி சாமானியமாகத் தோற்றிய பின் னர், அஃது மறைபடும்போது மறை படாதபோதும் ஆரோபக் தோன்றக் கணக்கில்லையே என்ற சீடனை நோக்கி, அவ்வதிஷ்டான இலக்கணத்தை இரண்டுவிதமாகக் கூறுகின்றார்.

ஆதார மறைந்து போனு லாரோப மெங்கே தோன்றும்
ஆதார மறையா தாயி னுரோப மிலையே யென்றால்
ஆதாரஞ் சமவிசேட மாமென விரண்டு கூறும்
ஆதாரஞ் சமமா மெங்கு மாரோபம் விசேடமாமே.

இ-ள். பிம்பம் மறையுமாஞல் பிரதிபிம்பம் எங்ஙனந் தோன் றும்? பிம்பம் மறையவில்லை யெனின் பிரதிபிம்ப மில்லையே யெனி ன், ஆதாரமானது சமமாமெனவும் விசேடமாமெனவும் இரண்டு வகை யாம்; சமமானது எவ்விடத்துமுள்ள ஆதாரமாகும்; விசேடமானது கற்பிதமாம். எ-று.

இ-ள். ஆதாரமான சுத்தசைதன்னியம் பூரணமான கூடஸ்த பிரமமாக விளங்குமிடத்தில் சமம் எனவும், அதனிலுதயமான அறிவு சீவேசுவா சகத்தாக விரிந்தொடுங்கு மிடத்து விசேடம் எனவும், இங்ங னம் உதித்தொடுங்கும் அறிவுண்மையாயினும் அக்கிரியைகள் மித்தை யாதலின் அவ்விசேடத்தை ஆரோபம் எனவுங் கொள்க. 44

இதுவுமது.

சகமதி லிதுவென் சுட்டாச் சமானக்கண் மறைந்திடாது
மிகவுரை கயிறும் பாம்பும் விசேடங்கண் மறைந்துபோகும்

அகமெனுஞ் சமானந் தன்னை யஞ்ஞான மறைத்திடாது
பகர்வதோர் விசேடஞ் சீவன் பரனெனு மவரை மூடும்.

இ-ள். உலகத்தின்கண் இதுவென்று சுட்டப்படாத சமமாகிய கண்கள் ஒன்று மறைக்க அதனால் மறைபடா; மிகவுஞ் சொல்லாநின்ற பழுதையுஞ் சர்ப்பமுமாகிய விசேடமாகத் தோன்றினவை என்றும் மறைக்க மறைபடும்; அதனைப்போலத் தானென்றுங் கூடஸ்த பிரமத்தை அறிமையான ஆவரணம் மறைக்கமாட்டாது; சொல்லப்பட்ட ஓர் விசேடமாகிய சீவேசுவரரென்கிற அவர்களை மறைக்கும். எ-று.

ப-ம். 'சீவன் பரனென்னும் அவரைமூடும்' என்றது அவர்களுணர்வை எனவும், 'அஞ்ஞானமறைத்திடாது' என்றது, ஆவரணமறைத்திடாதெனவும், கானலிருக்குமிடத்துச் சலந்தோற்றுதலும், அக்கானலாய்ப் பார்க்குமிடத்து அஃது தோற்றியும் இல்லாதது போல ஆதாரமிருக்குமிடத் தாரோபந்தோற்றுதலும், அவ்வாதாரமாய்ப் பார்க்குமிடத்து அஃது தோற்றியும் இல்லாத தேயாமெனவுங் கொள்க.

இ-ம். ஆரோபமான சீவேசுவரரைத் தமக்கு ஆதாரமான கூடஸ்தபிரமத்தைப் பார்க்கவொட்டாமல் அவரது உணர்வை இவ்வாவரணமறைக்குமே அன்று ஆதாரத்தை மறைக்கமாட்டா தென்பதாம். 45

அ-கை. அவ்வுணர்வை மன முதலாகத் தோன்றின விக்ஷேபகாரியம் மறைத்ததே அன்றி ஆவரண மெங்கே மறைத்த தெனல்.

கேவல நிலைதோன் றாமற் கெடுத்தது பஞ்ச கோசம்
சீவனுஞ் சகத்து மாகிச் செனித்தவி க்ஷேப மன்றோ
ஆவர ணந்தா னேபா ழாக்குமென் றுரைத்த தேதோ
மேவருங் குருவே யென்று வினவின மகனே கேளாய்.

இ-ள். முத்தி நிச்சயந் தோன்றாமல் அழித்தது பஞ்சகோசமும் சிதாபாசனும் உலகமுமாய் உண்டான விக்ஷேபமன்றோ? அங்ஙனமிரு

க்க ஆவரணமே பாழ் எனவும் அனர்த்தம் எனவும் சொல்லிய தென்னை ? அடைதற்கரிய ஆசாரியரே, என்று கேட்ட மாணாக்கனே ? நீ கேட்பாய். எ-று.

ஆனந்தமயகோசமும் சீவனும் விக்ஷேபகாரியங்கள் அல்லாதனவாயிருக்க அங்ஙனங் கூறியது என்னை எனின், அந்தக்கரணப்பிரதி பலன் சீவனும், அவன் அறியாமை ஆநந்தமயகோசமும் ஆதலால், இங்ஙனம் கூறியதெனக் கொள்க.

இ - ம். வெளிப்படை. 46

அ - கை. விக்ஷேபசத்தியினால் உண்டாகும் நன்மையும் ஆவரண சத்தியினால் உண்டாகுந் தீங்கையுங் கூறுகின்றார்.

தோற்றமாஞ் சத்தி தானே துன்பமாம் பவமானாலும்
ஆற்றலான் முத்தி சேர்வார்க் கனுகூல சகாய மாகும்
ஊற்றமாம் பகற்கா லம்போ லுபகார நிசியி னுண்டோ [மே.
மாற்றமென் னுரைப்பேன் மைந்தா மறைப்பதுமிகப்பொல்லா

இ - ள். விக்ஷேபசத்தியே துன்பமயமான ஜநநத்துக்குக் காரணமானாலும் சிரவணாதிமுயற்சியினால் வீடடைபவர்களுக்கு அது மிகவும் சகாயமாம் ; அறிதற் குதவியாகும் பகற்காலம்போலச் சகாய மானது இரவிலுளதோ ? என்ன சொல்வேன் மகனே ! மூடுகின்ற ஆவரணம் மிகவும் பொல்லாததாம். 47

அ - கை. இன்னும் அதனை வற்புறுத்தல்.

சுழுத்தியிற் பிரள யத்திற் தோற்றமாஞ் சகங்கண்மாண்டும்
அழுத்திய பவம்போய் முத்தி யடைந்தபே ரொருவருண்டோ
முழுத்தவி க்ஷேப மெல்லா முத்தியிற் கூட்டு கிற்கும்
கொழுத்தவா வரண முத்தி கூடாமற் கெடுத்த கேடே.

இ-ள். நாள்தோறும் உண்டாகாநிற்கும் பிரளயமாகிய சுழுத்தியிலும் பிரமப் பிரளயத்திலும் உண்டான உலகு முதலியன நசித்தும்; அப்போது தம்மைத் துன்பத்தின் மூழ்கப்பண்ணிய சகாரின்றி வீட்டைப் பெற்றவர்கள் ஒருவருளரோ, இல்லை; முழுதும் விக்ஷேப காரியமான அனைத்தும் வீட்டிற் சேர்க்கும்; அறியாமை யிருந்த ஆவரணமானது வீட்டைச் சேராமல் கெடுத்த கேடாம். எ-று.

ப-ம். மனோநியாமனியால் பரம சுகத்தை அடைதலின் 'விக்ஷேபமெல்லா முத்தியிற் கூட்டுவிக்கும்' என்றார்.

இ-ம். முத்தியை அடைதற்கு அறிதலுள்ள விக்ஷேபம் சாதனமாமே அன்றி அறியாமையான ஆவரணம் ஆகாது என்பதாம். 48

அ-கை. மித்தையான விக்ஷேப சத்தியினால் வெளிப்படும் மித்தையே ஆமெனில் அங்ஙனம் ஆகாது எனல்.

சுத்தியில் வெள்ளி போலத் தோன்றிய தோற்றமான
சத்தியும் பொய்யே யென்றாற் சத்திசா தனமாய் வந்த
முத்தியும் பொய்யா மென்னின் மோகநித் திரை விலங்கால்
நித்திரை தெளியுமாபோ னிருவாண நிலைமெய் யாமே.

இ-ள். சிளிஞ்சிலில் ரசதாரோபம்போல உண்டான விக்ஷேப சத்தியும் மித்தையாயின், அவ்விட்சேபசத்தி ரூபமான குரு சாஸ்திராதி சாதனமாக உண்டான வீடும் மித்தையாம் என்பாயாகில், மோகமான சொப்பனத்திற் கண்ட சிங்கத்தினால் நித்திரைதெளிந்து சாக்கிரம் வருவதுபோல, அச்சத்தியினா லுண்டாகு முத்தி நிலையும் உண்மையே யாம். எ-று.

இ-ம். மித்தையான சொப்பன சிங்கத்தினா லுண்டான சாக்கிரம் சத்தியமானது போல மித்தையான விக்ஷேப சத்தியின் காரியமான நியானிகளா லுண்டான வீடும் சத்தியமேயாம் என்பதாம். 49

அ - கை. இச்சத்திகளின் காரணமான மாயைகளை நீக்கும் எதுக்கூறல்

இம்பரி னஞ்சை நஞ்சா லிரும்பினை யிரும்பா லெய்யும்
அம்பினை யம்பாற் பற்று மழுக்கினை யழுக்கான் மாய்ப்பர்
வம்பியன் மாயை தன்னை மாயையான் மாய்ப்பர் பின்னைத்
தம்பமா யதுவுங்கூடச் சவஞ்சுடு தடிபோற் போமே.

இ - ள். இவ்வுலகத்தில் சர்ப்பந் தீண்டின விஷத்தை ஔஷதமான விஷத்தினாலும், இரும்பை அரமாகிய இரும்பினாலும், விடும்அம்பை அதற்குப் பகையான அம்பினாலும், வஸ்திரத்தில் பிடித்த அழுக்கை அதை நீக்கும் உழமண்முதலிய அழுக்கினாலும் கெடுப்பார்கள்; அங்ஙனமே, அசுத்தமாயையைச் சுத்தமாயையால் கெடுப்பார்கள்; பின்பு பற்றுக்கோடான அச்சுத்தமாயையும் அசுத்தமாயையோடு கூடப் பிரேததகனஞ் செய்யுந் தண்டம் அதனோடு வேவுதல்போலக் கெடும். எ-று.

இ - ம். சகத்துரூபமான அசுத்தமாயை சித்ரூபமான மாயையினால் கெடுத்தவிடத்து, உதயமான பரஞானத்திற் சுத்தமாயையும் அசுத்தமாயையோடு கெடும் என்பதாம். 50

அ - கை. ஆத்மாக்களுக்கு இவ்விருவிதமான மாயைகளால் சத்தாவத்தைகள் வருமாறும் அவற்றின் நாமமுங் கூறல.

இந்தமா யையினாற் சீவர்க் கேழவத் தைகளுண் டாகும்
அந்தவே ழத்தை தம்மை யடைவினின் மொழியக் கேளாய்
முந்தவஞ் ஞான மூடன் முளைத்தல் காணாத ஞானம்
சந்ததங் கண்டஞானந் தழல்கெடல் குளிர்மை யாதல்.

இ - ள். இம்மாயையினால் சீவர்களுக்குச் சத்தாவத்தைகள் உளவாம்; அவ்வேழவத்தைகளின் நாமங்களைக் கிரமமாகச் சொல்லக் கேட்பாய; முன்னம் அஞ்ஞானமும் ஆவரணமும் விக்ஷேபமும் பரோக்ஷஞா

னும் நித்தியாரோப ஞானமும், துக்கநிவர்த்தியும், தடையற்ற ஆனந்த முமாம். எ-று. 51

அ-கை. அச்சத்தா வத்தைகளின் தன்மையைக் கூறல்.

பிரமமாந் தனைமறந்த பேதைமையே யஞ்ஞானம்
பரனிலை காணேனென்று பகர்தலா வரணமூடல்
நரனொரு கர்த்தாற்சீவ னெனனல் முளைத்த றோற்றம்
குரவன்வாக்கியத்தாற் றன்னைக்குறிகொளல் பரோக்ஷஞானம்.

இ-ள். பிரமஸ்வரூபமாகிய தன்னை மறந்த அறியாமையே அஞ்ஞானமாம்; பிரமம் இல்லை இருந்தாற் காணேன் என்று சொல்லுதல் மூடல் என்னும் ஆவரண சத்தியாம்; ஒரு புருடன் ஓர் நினைப்பினால் நான் சீவன் எனல் விக்ஷேபசத்தியாம்; ஆசிரிய ருபதேசத்தினால் பிரமத்தைக் குறிப்பாகத் தெரிந்துகொள்ளுதல் பரோக்ஷஞானமாம் எ-று. 52

இதுவுமது.

தத்துவ விசாரஞ் செய்து சகலமுந் தேகமும் போய்
அத்துவி தந்தா னாக லபரோக்ஷ ஞானமாகும்
சுத்தனாஞ் சீவபேதங் கழிவதே துக்கம் போதல்
முத்தனா யெல்லாஞ் செய்து முடிந்ததா னந்த மாமே.

இ-ள். பிரமவிசாரஞ்செய்து எல்லா ஐயமுநீங்கி, கூடஸ்த பிரம ஐக்கியமான அத்துவித ஸ்வரூபந் தானாக விளங்குதல் அபரோக்ஷ ஞானம்; அகம்பாவமான சீவேஸ்வரபேதம் நீங்கலே துக்க நிவர்த்தியாம்; சகல துக்கங்களினின்று விடுபட்டவனாய்ச் செய்யத் தக்கன வனைத்துஞ் செய்து அடையத்தக்கன வனைத்தும் அடைந்தனம் என்னும் சந்தோஷமே ஆனந்தமாம். எ-று.

இ-ம். அஞ்ஞானம் ஆவரணம் இரண்டும் அசுத்தமாயா சம்பந்தம் விக்ஷேபம் பரோக்ஷம் இரண்டும் சுத்தாசுத்த மாயாசம்பந்தம்; அ

ரோக்ஷ முதலிய மூன்றுஞ் சுத்தமாயா சம்பந்தமாம்; அவைகளில் அப ரோக்ஷ ஞானத்திஞல் பிரோக்ஷமும், விக்ஷேப சத்தியின் காரியமான திரி ஸ்யமும், துக்கநிவர்த்தியிஞல் ஆவரணமும், தடையற்ற ஆநந்தத்தி ஞல் அஞ்ஞானமு நீங்கும்; அவைகள் நீங்கவே, இவைகள் நாமஞ்சூ நிங்கி நிரதிசயாநந்தமாகத் தானே விளங்குமென்பதாம். 53

அ - கை. அச்சத்தாவத்தையை விளக்கு நிமித்தம் தசபுமான் திட் டாந்தங் கூறல்.

இதுநினக் கறியும் வண்ண மிப்படியொழி திட்டாந்தம்
புதுமையாங் கதைகேள் பத்துப் புருடரோ ராற்றை நீந்தி
உதகதி ரத்தி லேறி யொருவ னென்பதுபே ரெண்ணி
அதனெனுந் தசமன் ருனென் றறியாமன் மயங்கி நின்ருன்.

இ - ள். இஃது உனக்குத்தெரியும்படி இவ்வண்ணம் ஒரு திட் டாந்தமாக வியப்பான ஒருகதை கூறுவன் கேட்பாய்; பதின்மர் ஒரு நதியைநீந்தி நதிக்கரையிலேறி ஒரு புருடன் ஒன்பது பெயரை யெண் ணி அவர்களோடும் எண்ணினதான் பத்தாவான் என்று தெரியாமல் பிரமித்து நின்ருன். எ-று. 54

அ - கை திட்டாந்த தாட்டாந்தங்களுக்கு ஒப்புமைகாட்டல்.

அறியாத மயலஞ் ஞான மவனில்லைக் காணே மென்றல்
செறியவா வரண மாகும் பிழைகொண் டழல் விக்ஷேபம்
நெறியாளன றசம னுண்டு நிற்கின்ரு னென்ற சொல்லைக்
குறியாக வெண்ணி நோக்கிக் கொள்வது பரோக்ஷஞானம்.

இ - ள். தன்னைத் தெரியாத மயக்கமே அஞ்ஞானமாம்; அத்த சமகன் இல்லை, இல்லாமையால் காண்கிலோம் எனல் அறியாமை நீங்காத ஆவரணமாம்; தசமனைக்காணேமென்று துன்பமுற் றலால்

விக்ஷேபமாம்; வழிச்செல்வோன் இவன் கருத்தைக் கண்டு பதின்மனானன், இவ்விடத்திருக்கிறான் என்று சொல்லிய வசனத்தைக் குறிப்பாக நினைத்து அறிந்துகொள்வது பரோட்ச ஞானமாம். எ-று. 55

இதுவுமது.

புண்ணிய பதிதன் பின்னும் புருடரொன் பதின்மர் தம்மை
எண்ணிய நீபத் தாவா னென்னவே தன்னைக் காணல்
கண்ணினற் கண்டஞானங் கரைதல்போவது நொய்போதல்
திண்ணிய மனதி லையந் தெளிதலா னந்த மாமே.

இ-ள். புண்ணியவானான நெறிச்செல்வோன் பின்பும் ஒன்பது புருடர்களை எண்ணின நீ பத்தாவானவாய் என்று சொல்லவே, தன்னைத் தசமனாகக் காண்டல் அபரோட்ச ஞானமாம் அழுகை நீங்கினது மிக்க நிவர்த்தியாம்; வன்மையான உள்ளத்தில் சந்தேகம் தீர்தல் தடையற்ற ஆநந்தமாம். எ-று.

இ-ம். தசமன் திட்டாந்தத்தினால் தன்னை மறந்ததனால் வந்த உபாதிகளையுந் தத்தரிசனத்தில் அவைகளின் நீக்கையுங் கூறினதாம்.

அ-கை. தசமன் தன்னைத் தானெனக் கண்டதுபோலத் தன்னைத் தானாகத் தரிசிப்பிக்கவேண்டும் என்ற சீடனை நோக்கி மகாவாக்கியார்த்த நிரூபகத்தினால் அத்துவிதமான தன்னை அறிவிக்கத்தொடங்கல்.

தசபுமான் றனைக்கண் டாற்போற் றேசிகமூர்த் தியேயென்
நிசவடி வினையான்காண நீர்காட்டல் வேண்டுமென்றான்
சசிமொறு மிலக்கியார்த்தந் தொம்பதந் தற்பதங்கள்
அசிபத மைக்கியஞ்செய்யு மதிசய வுண்மைகேளாய்.

இ-ள். ஆசாரியரே! பதின்மனானவன் தன்னைக்கண்டதுபோல, எனது தத்துவரூபமான பிரமத்தை நான் தரிசிக்கும்படி தேவரீர் காண்

பிக்கவேண்டுமென்று கேட்டான், (நீ அது என்னும்) தொம்பத தற்பதங்களின் பரிசுத்தமாகிய இலக்கியார்த்தமான கூடஸ்த பிரமத்தினுள் ஐக்கியத்தை (அது நீயானாய் என்னும்) அசிபதப் பொருளானது காட்டும்; இந்த அற்புதமான உண்மையைக் கேட்பாய். எ-று. 57

அ-கை. ஒன்றான சைதன்னியமே நான்கு சைதன்னியமாகத் தோன்று மெனல்.

விண்ணொன்றே மகாவிண்ணென் றுமேகவிண்ணென் றும் பாரில்
மண்ணென்ற கடவிண் ணென்று மருவிய சலவிண்ணென் றும்
எண்ணுங் கற்பனைபோ லொன்றே யெந்துமாம் பிரமமீசன்
கண்ணுங்கூடஸ்தன் சீவ னென்குசை தன்னியமாமே.

இ-ள். ஆகாயமொன்றே மகா ஆகாயமெனவும், மேகசலப் பிரதிபிம்ப ஆகாயமெனவும், மண்ணென்ற கட ஆகாயமெனவும், அதிற்பொருந்திய கடசலப் பிரதிபிம்ப ஆகாயமெனவும், நினைக்கப்பட்ட கற்பிதத்தைப்போல ஏகமான சுத்தசைதன்னியமே பூரண மாகிய பிரமமெனவும் ஈஸ்வரனெனவும் பொருந்திய கூடஸ்தனெனவும் சீவனெனவும் நான்கு சித்துக்களாம். எ-று.

அ-கை. ஆரோப சைதன்னியத்தை நீக்கி அதிஷ்டான சைதன்னியத்தை அடையவேண்டுமெனல். 58

பூச்சியவீசன்சீவன் புகல்பதமிரண்டினுக்கும்
வாச்சியமிலக்கியந்தான் மலமிலாப்பிரமமாத்மா
காச்சியபாலினெய்போற் கலந்தொன்றுங்கடைந்தெடுக்கும்
ஆச்சியமென்னவுன்னை யறிந்துநீபிறிந்துகொள்ளே.

இ-ள். மகாவாக்கியத்திற் சொல்லும் தற்பதம் தொம்பதமான இருபதங்கட்கும் வாச்சியார்த்தமானவை ஆரோபமான சீவேஸ்வரராம்; இலக்கியார்த்தமானது நிர்மலமான பிரம கூடஸ்தராம்; காச்சினபாலில

வெண்ணெயைப்போலச் சடத்திற்சேர்ந்து ஒருமித்திருக்கின்ற, ஆத்மாவைத் தரிசித்துக் கடைந்தெடுத்து உருக்கிய நெய்போல நீ அநாத்மாவினின்று பிரிவாயாக. எ-று.

இ - ம். தற்பதமொம்பதங்களின் வாச்சியார்த்தமான சீவேஸ்வரன் ஆரோபமெனக் கண்டு அவைகளை நீக்கி இலக்கியார்த்தமான கூடஸ்த பிரம அதிஷ்டானத்தை யொன்றாகக் காணின் அதுவே அசிபதார்த்தமான சுத்தசைதன்னியமாம் என்பதாம். 59

அ - கை. தன்னைத் தரிசிப்பிக்கு நிமித்தம் தானல்லாதவைகளை நியதிகளைதல்.

பிறிவதெப்படியென்றக்காற் பிணமாகுமுடனுனென்னும்
அறிவினைக்கொல்லவேண்டு மைம்பூதவிகாரமன்றே
வெறியதோர் துருத்திமூச்சு விடுவதுபோலமூக்கால்
எறிபிராணனுநீயல்லை யிராசதகுணவிகாரம்.

இ - ம். அநாத்மாவை நீங்குவது எங்ஙனம் எனின், சவமாய்ச்சிதைகின்ற தேகம் பஞ்சபூத விகாரமாதலால், அதை நானெனக் கருதும் பிராந்தியைக் கெடுத்தல் வேண்டும் ; வெறுந்துருத்தியானது காற்றை விடுவதுபோல மூக்கினுல் வீசும் பிராணவாயுவும் ரசோகுணத்தின் விகாரம் ஆதலால் அதுவும் நீ யல்லை. எ-று. 60

இதுவுமது.

கரணமாமனதுபுந்தி கருத்தாவாமவையான்மாவோ
தரமுளவிரண்டுகோசஞ் சத்துவகுணவிகாரம்
வரமறுகணவானந்த மயனையுநானென்னுதே
விரவியதமவஞ்ஞான விருத்தியின்விகாரமாமே.

இ - ள். அந்தக்கரணமான மனமும், அகம்பாவமாகிய புத்தியும், பேதமுள்ள மனோமயகோசமும், விஞ்ஞானமய கோசமும் ஸ்திரமில்

லாத சொப்பனமும், சத்துவகுணவிகாரமாம்: ஆதலால் அவ்விரண்டும் ஆத்மாவோ; அல்ல; பொருந்திய தமோரூபமான அவித்தியா விருத்தியினது விகாரமாம்; ஆதலால் ஆனந்தமயகோசனான சீவனையும் ஆத்மாவென்று கருதாதே. எ - று.

இ - ம். தேகமுதல் அவித்தை பரியந்தமான மூன்று தேகமும் மூன்றவத்தையும் மூன்றபிமானியும் பஞ்சகோசங்களுந் தான் அன்றெனகியதிகளைந்தாம். 61

அ - கை. நியதிகளைந்த நீ அவ்விடத்துள்ள சுத்த சைதன்னியத்தைத் தரிசித்து அதுவாகும் பொருட்டுப் பஞ்சகோச விலக்ஷண னுவாய் எனல்.

சத்தொடுசித்தாநந்தஞ் சமந்திரஞ்சாக்ஷியேகம்.
நித்தியம்வியாபியான்மா நீயதுவாயறிந்து
பொத்தொடுசடந்துக்காதி பொருந்துபேதங்களான்
குத்திரபஞ்சகோசக் குகைவிட்டுவெளியிலாவாய்.

இ - ள். சத்துசித்தும் ஆநந்தமும் சமமும் ஸ்திரமும் சாக்ஷியும் ஏகமும் நித்தியமும் பூரணமும் ஆகி விளங்குவது ஆத்மஸ்வரூபம்; ஆதலால், கூடஸ்தனே பிரமம் பிரமமே கூடஸ்தன் என அத்துவித ஸ்வரூபமாகத் தரிசித்து அனுர்த சடதுக்க முதலியவற்றை அடையாநின்ற வேறுபாடுகளுள்ள வஞ்சகமான பஞ்சகோசமாகிய தேகத்தை நீங்கி வெளிப்படுவாய். எ-று.

இ - ம். பஞ்சகோசங்களைக் கண்டு அவைகட்கு விலக்ஷணனுவாய் என்பதாம். 62

அ - கை. விலக்ஷணமான இடத்தைப் பார்த்து இவ்விருளோ நான் என விஞைதல்.

பஞ்சகோசமும்விட்டப்பாற் பார்க்கின்றபோதுபாழே
விஞ்சியதல்லாமல் வேறொன்றுந்தெரியக்காணேன்
அஞ்சனவிருளையோநா னகமெனவனுபவிப்பேன்
வஞ்சமில்குருவேயென்ற மகன்மதிதெளியச்சொல்வார்.

இ-ள். உண்மையான ஆசாரியரே! ஐந்து கோசமான மூன்று தேகத்தையும் நீக்கி அப்பால் பார்க்கும்பொழுது சூனியமே சேடித்திருக்கின்றது; அச்சூனியமே அன்றி மற்றொன்றும் தோன்றக்காண்கிலேன்; கரிய அந்தகாரத்தையா யான் நான் என்று அநுபவிப்பேன்? என்று கேட்ட சீடனறிவு தெளியும்படி போதிப்பார். எ-று.

அஞ்சன இருளென்பது பிரகிருதி எனக்கொள்க.

இ-ம். நியதிகளைத்தான் இருக்க அதனைக் காணாமல் நியதிகளையப் பட்டவைகள் தோற்றமையைத் தான் தோற்றவில்லை எனக் கலங்கி வினவினதாம்.

அ-கை. பிரகிருதியை நீக்கிச் சுத்த சைதன்னியனான தன்னைத்தரிசிப்பிக்கும் பொருட்டு இருளைக்கண்டவன் பாழா? அவனே நீ எனக் காண்பாய் எனல்.

முன்புகரசமன்புத்தி மோகத்தாலெண்ணியெண்ணி
ஒன்பதுபேரைக்கண்ட லொருவனுந்தனைக்காணாத
பின்பவனிடையிற்கண்ட பெரியபாழவனேபாராய்
அன்புளமகனேகாண்ப தடங்கலுங்காண்பானீயே.

இ-ள். முன் சொல்லிய பதின்மனைவன் புத்தி மயக்கத்தினால் நினைத்து ஒன்பதுபெயர்களைப் பார்த்த ஒருவனாகிய தன்னைப் பாராத பின் தன்னிடத்திலே தன்னைத் தசமனைப் பார்த்த அவனா பெரும் பாழ்? பார்ப்பாய் அன்புள்ள புத்திரா! சூனிய முதலிய திரிசியங்களனைத்தையும் பார்ப்பவன் நீயே ஆவாய். எ-று.

இ - ம். அவ்விருளாகிய அறியாமை நீ அன்று அதனைக்கண்ட ஞானமே நீயென அறிவித்ததாம். 64

அ - கை. அங்ஙனம் அதிஷ்டான சைதன்னியமான தனது சந்நிதியிற் சகலமும் உதித்தொடுங்கு மெனல்.

தூலசூக்குமமஞ்ஞானந் தோன்றுமூன்றவத்தைதாமும்
காலமோர்மூன்றுஞ்சன்மக் கடலெழுங்கல்லோலங்கள்
போலவேவந்துவந்து போனவெத்தனையென்பேனான்
ஆலமர்கடவுளாணை யவைக்கெலாஞ்சாக்ஷிநீயே.

இ - ள். தூலசூக்கும காரணமாகிய சரீரத்திரயங்களும், தோற்றுகின்ற சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி என்னும் அவத் தாத்திரயங்களும் விச்வ தைச பிராஞ்ஞகன் என்னும் அபிமானத் திரயங்களும், திரிகாலங்களும், பிறப்பாகிய சமுத்திரத்தி லுண்டான பேரலைகளைப் போலவே உண்டாகி உண்டாகி அழிந்தன ; யான் எவ்வளவென்று சொல்வேன் ; கல்லாலின் நிழலில் எழுந்தருளிய சற்குருவின் ஆஞ்ஞைப்படிக்கு அவைகளனைத்திற்கும் நீயே சாட்சியாம். எ-று.

இ - ம். ஆரோபமான அவித்தை முதலியவைகளின் ஏகதேசமும் அவைகட்கு அதிட்டானமான ஆத்மஞான வியாபகத்தையுந்தெரிவித்ததாம். 65

அ - கை. அவ்வாத்ம ஞானத்தைத் தவிர மற்றோர் ஞானம் அன்றென்பதை உறுதிப்படுத்தும் நிமித்தந் தன்னையறிவது தானே எனல்.

எல்லாங்கண் டறியுமென்னை யேதுகொண் டறிவேனென்று
சொல்லாதே சுயமாஞ் சோதிச் சுடருக்குச் சுடர்வேறுண்டோ
பல்லார்முந்றசமன் றன்னைப் பார்ப்பதுந் தன்னைக்கொண்டேதான்
அல்லாது பதினொன்றுனு மவனிடத்துண்டோ பாராய்.

இ - ள். அனைத்தையும் பார்த்தறிகின்றவன்னை எதைக்கொண்டு அறிவேனென்று உரையாதே; சுயஞ்சோதியான பிரகாசத்தை அறிவிப்பதற்குப் பிரகாசம் வேறுமுண்டோ? பலர்முன்னர் பதின்மரெனக்கண்டு தம் தன்னைக்கொண்டே அன்றிபதினோராம் புருடனும் அத்தசமனிடத்து உளனோ? பார்ப்பாய் எ-று.

இ - ம். ஆத்ம சைதன்னியம் ஒன்றே என்று அறிவித்ததாம். 66

அ - கை. சர்வஞ்ஞத்துவ கிஞ்சிஞ் ஞத்துவத்தையும் அறிவறியாமையையும் நீக்கிச் சுத்த சைதன்னியத்தைத் தரிசிப்பித்தல்.

அறிவுக்குமறிவுசெய்யு மறிவுவேறுண்டென்றெண்ணும்
அறிவற்றகுதர்க்கமூடர் கனவத்தைபலமாய்த்தீரும்
அறிபடும்பொருணீயல்லை யறிபடாப்பொருணீயல்லை
அறிபொருளாகுமுன்னை யனுபவித்தறிவாய்நீயே.

இ - ள். சுயஞ் சைதன்னியத்துக்கும் அறிவிக்கும் ஞானம் மற்றொன்றிருக்கின்றதென்று நினைக்கின்ற உணர்வற்ற குதர்க்கஞ் செய்யும் அஞ்ஞானிகளுக்கு அனவஸ்தாதோஷம் பிரயோசனமாய் முடியும்; திரிசியவஸ்துக்களும் நீ அல்லை; அறியாமையான அனியவஸ்துக்களும் நீ அல்லை; சைதன்னிய வஸ்துவான உனதாத்ம ஸ்வரூபத்தை நீ அனுபவித் துணர்வாய். எ-று.

இ - ம். துவிதமாகிய அபாவுணர்வை நீக்கி அத்துவிதமான பாவுணர்வு இதுவென உணர்த்தியதாம். 67

அ - கை. அப்பாவுணர்வே தானாக விளங்கிய சிதானந்தமே சர்வமாக விளங்குகின்றதென உணர்த்துதல்.

மதுரமாங்கட்டிசுட்ட மாப்பணியாரமெல்லாம்
மதுரமாக்கியவதற்கு மதுரந்தான்சுபாவமன்றோ

அதனிலே யுன்னுஞ் சடங்க ளறிவாக வறிவைத் தந்தே
அதன்றனி லிரண்டு மொன்றா வகம்பொருளறிவாய் நீயே.

இ-ள். இத்திப்பிய கருப்புக்கட்டி சேர்த்துச் செய்யப்பட்ட மாப் பணியாரங்க ளனைத்தையும் மதுரமாகச்செய்த அவ்வெல்லக்கட்டிக்கு மது ரமானது சுபாவம் அன்றோ? அது என்னுஞ் சமஷ்டியும் இது என்னும் வியஷ்டியுமான திரிவிதவஸ்துக்களை அறியும்படியான ஞானதிருஷ்டி யைக் கொடுத்துச் சேர்க்கைகளை இத்தமாகாத தானறிய அத்துவித வஸ் துவை நீயே தரிசிப்பாய். எ-று.

இ-ம். தனது அம்சத்தைத்தவிர வேறொன்றும் இல்லை எனத் தனது வியாபகத்தை விளக்கியதாம். 63

அ-கை. இவ்வத்துவித நிலை சித்திக்கும் பொருட்டு அதிஷ்டா னத்துக்கு ஐக்கியமேயன்றி ஆரோபத்திற்கு ஐக்கியம் இன்றெ னல்.

இந்நிலைதொம்பதத்தி னிலக்கியப்பொருளாமென்றும்
பந்தமில்பிரமமேதற் பதந்தனிலக்கியார்த்தம்
அந்தமாஞ் சீவனீச னவர்களேவாச்சியார்த்தம்
சந்ததம்பேதமாவார் தமக்கைக்கியங்கூடாதே.

இ-ள். இத்தன்மையுள்ள கூடஸ்தனான நீயே தொம்பதத்தி னுடைய லக்ஷியார்த்தமாம்; எப்பொழுதும் மாயா ரகிதமான பிரமம் என்னும் அதுவே தத்பதத்தினுடைய லக்ஷியார்த்தமாம் தோன்றி அழி யும் சீவ ஈசுவரர் ஆன அவர்களே வாச்சியார்த்தமாம்; என்றும் பேத மான சீவ ஈசுவரர்களுக்கு ஏகமாதல் கூடாதாம். எ-று.

பேதமானவர்க்கு ஐக்கியங் கூடாதென்றதனால் அபேதமானவர்க்கு ஐக்கியங் கூடுமென்றாயிற்று.

இ-ம். மகாவாக்கியத்தின் இலக்கியார்த்தமான கூடஸ்த பிரமம் அபேதமாதலின் அவர்கட்கு ஐக்கியம் கூடுமென்பதாம். 69

இதுவுமது.

பேதமான துவுங்கேளாய் பேராலுமிடங்களாலும்
ஓதருரூபாதியாலு முடலாலுமுணர்வினாலும்
பாதலம்விசும்புபோலப் பலதரமகன் றிருப்பார்
ஆதலாலிவர்க்கொன்றாகு மைக்கியமென்பதுகூடாதே.

இ-ள். சீவ ஈஸ்வரர்களுக்குண்டான பேதத்தைக் கேட்பாயாக: சீவ ஈஸ்வரர்கள் என்னும் தங்கள் நாமங்களினாலும், அண்டபிண்டங்களா யிருக்கின்ற ஸ்தானங்களினாலும், சொல்லுதற்கரிய காரண காரியமாகிய உபாதிகளினாலும் சமஷ்டி வியஷ்டியாகிய தேகங்களினாலும், சர்வஞ்ஞத்துவம் என்னும் ஞானத்தினாலும் அவர்கள் பாதாளமும் விண்ணுலகமும் போலவும் நாநாவிதத்தினாலும் பேதமுற்று நிற்பார்கள்; ஆதலால், இத்தன்மையுள்ள சீவேஸ்வரர்களுக்கு எப்பொழுதும் கலந்த லென்பது கூடாதாம். எ-று.

இ-ம். மகாவாக்கியத்தின் வாச்சியார்த்தமான சீவேஸ்வரர் இங்ஙனம் பேதமாதலின் அவர்கட்கு ஐக்கியங் கூடாதென்பதாம். 70

அ-கை. மகாவாக்கியார்த்தப்படி கூடஸ்த பிரமம் ஏகம் என்னும் பொருள்தோன்ற மூவித இலக்கணையைக் கூறுகின்றார்.

வடநூல்வல்லவர்கள்சொல்லும் வாசகப்பொருள்சேராமல்
இடராகிற்பொருளாம்வண்ண மிலக்கணை யுரையாற்கொள்வர்
இடமானவதுவுமூன்றாச் செப்புவார்விட்டதென்றும்
விடல்விடாதென றும்விட்டும விடாததென்றும்பேராமே.

இ-ள். வடநூலாசிரியர் சாஸ்திரங்களிற் சொல்லாநின்ற வாச்சியார்த்தத்தினுல் பொருள் விளங்காது தடைபடின், அர்த்தமாகும் பொரு

ட்டு இலக்கியார்த்தத்தினால் பொருள் கொள்வார்கள்; நிரமாக அவ்வி லக்கணையையும் மூன்று விதமாகச் சொல்லுவார்கள்; அவற்றிற்கு விட்ட இலக்கணை எனவும், விடாத இலக்கணை எனவும், விட்டும் விடாத இலக்கணை எனவும் நாமங்களாம். எ-று.

இ-ம். இலக்கணையின் நாமங்களைக் கூறினதாம். 71
அ-கை. அவற்றிற்கு உதாரணங் கூறல்.

கங்கையிற்கோஷமென்றுங் கறுப்புச்சேப்போடுமென்றும்
தங்கியசோயந்தேவ தத்தனென்றுஞ்சொல்வார்கள்
இங்குதாரணங்களாக்கி யிந்தமூன்றுரைகளாலே
துங்கநூல்விரோதமான சொல்லெலாம்பொருளாந்தானே.

இ-ள். கங்கைக்கண் இடைச்சேரி எனவும், கருமை செம்மைகள் செல்லுகின்ற எனவும், தங்காநின்ற அவனே யிவனான தேவதத்தனென்னும் ஓர் புருடன் எனவும் உரைப்பார்கள்; இவ்விடத்து உதாரணங்களாகக் கொண்டு இம்மூன்று இலக்கணைப் பொருள்களினால் மேலான சாஸ்திரங்களில் அர்த்தம் பொருந்தாமல் வேறுபடுகின்ற வாக்கியங்களனைத்தும் அருத்தமாம். எ-று.

ப-ம். கங்கைக்கணிடைச்சேரி யென்னுமிடத்து, கங்கையினிடத் திடைச்சேரி யிருக்குமா? அதன்கரையி லிருக்குமென்று அதை விட் டிதைக்கொள்வது விட்ட இலக்கணை யென்பார் 'கங்கையிற் கோஷம்' எனவும், கருமை செம்மை செல்லுகின்றன என்னுமிடத்து அவைகள் தனியேசெல்லுமா? கருமை நிறமாகிய பசுவும் செம்மை நிறமாகிய குதிரையுஞ் செல்லுகின்றன என்று அந்நிறத்தை விடாமல் அவ்வான்மாக்களைக் கொள்வது விடாத இலக்கணைஎன்பார் 'கருப்புச் சேப்போடும்' எனவும், அவ்விடமும் அக்காலமும் அவ்வேடமும் உள்ள அவனே இவ்விடமும் இக்காலமும் இவ்வேடமும் உள்ள இவன் என அவைகளை நீக்கி இப்புருடனை மாத்திரங் கொள்ளும்போது, அவ்விடம் முதலா

ணவைகள் நீங்கி இப்புருடன்மாத்திரம் இருக்கின்றதை விட்டும் விடாத இலக்கணையென்பார் 'தந்நியசோயந் தேவதத்தன்' எனவும், இவ்வி லக்கணை வாக்கியப்படி பொருள்கோடலே நூல்களனைத்திற்குமுள்ள அவி ரோதமான பொருள்கோடலென்பார். இந்த மூன்றுரைகளாலே நூல்க ளால் விரோதமான சொல்லெலாம் பொருளாம்' எனவுங் கூறினர்.

இ - ம். தொம்பதார்த்தத்தைவிட்ட இலக்கணையால் தரிசிக்கவேண் டுமென்பது தூலமுதல் அவித்தைபரியந்தமான சரீரத்திரயங்களைவிட்டு, அவைகட்கு விலக்ஷணமான கூடஸ்த சைதன்னியத்தைத் தரிசிப்பதும், தற்பதார்த்தத்தை விடாத இலக்கணையால் தரிசிக்கவேண்டு மென்பதும், சைதன்னியம் ஆனந்தானுபூதியின்றி விளங்காமையால், இச்சைதன்னி யத்தை விடாமல் ஆநந்தாப் பிரமத்தைத் தரிசிப்பதும், அசிபதார்த்தத் தை விட்டும் விடாத இலக்கணையால் தரிசிக்கவேண்டுமென்பது, ஆனந்த மின்றி யறியவும், அறிவின்றி ஆநந்தமுமின்மையால், அவைகளின் பே தமானது துவிதத்தைவிட்டு, அபேதமான அத்துவிதவஸ்துவை விடா மல் தரிசிப்பதுமாம்.

இதுவுமது.

பன்னியசோயமென்னும் பதங்களின்வாச்சியார்த்தம்
அன்னியதேயங்கால மவனிவனென்பவெல்லாம்
சொன்னவிவ்விரோதம்விட்டுத் தொகையிலக்கியம்விடாமல்
உன்னிடற்றேவதத்த னொருவனைவெளியாக்காட்டும்.

இ - ள். முன்சொன்ன அவனே இவனென்னும் பதங்களுக்கு வாச்சியார்த்தமானது வேறானதேசமும் காலமும் அவன் இவனென்பன வாகச் சொல்லப்பட்ட விரோதமாயுள்ள இவ்வனைத்தையும் விடுத்து முடி வில் இலக்கியார்த்தத்தை விடாமல் சிந்திக்கில் தேவதத்தனென்னு மொரு புருடனையே பிரத்தியக்ஷமாகக் காண்பிக்கும். எ-று.

இ - ம். இவ்விலக்கணையின் பொருளொருமையை நன்றாக தெரி வித்ததாம். 73

அ - கை. இத்திஷ்டாந்தப்படி தாஷ்டாந்தத்தை விளக்குதல்.

தத்துவப்பதங்கடாமுஞ் சாக்ஷியாய்ப்பிரமமான
வத்துவைவிடாமற்பேத வாச்சியார்த்தத்தைவிட்டு
நித்தமுமதுநீயாகு நீயதுவாகுமென்னும்
அர்த்தமுமகண்டமென்றே யசிபதவைக்கியங்காட்டும்.

இ - ள். மகாவாக்கியமான அது நீ என்னும் பதங்கள் பிரமமாயும் சாக்ஷியுமாயு முள்ள சேதனபாகமான இலக்கியார்த்தத்தை விடாமல் பேத தர்மங்களையுடைய வாச்சிய பாகங்களை விடுத்து, சர்வகாலமும், பிரமமே நீயாம், நீயே பிரமமாம் என்று சொல்லும் அசிபதத்தின் பொருளும் ஏகமே என்று ஐக்கியத்தை யுணர்த்தும். எ-று.

இ - ம். ஆசிரியர் உபதேசப்படி வேத நிச்சயம் இருப்பது தோன்ற அதின் முடிவான மகா வாக்கியத்தின் இலக்கியார்த்தமான கூடஸ்த பிரமத்தின் ஒருமையை உணர்த்தியதாம். 74

அ - கை. இவ்வத்துவிதமான சுவானுபூதியே தானாக விளங்குவாய் எனல்.

கடநீரின்மேகநீரிற் கண்டவானிரண்டும்பொய்யே
குடவானும்பெரியவானுங் கூடியொன்றுமெப்போதும்
இடமானபிரமஞ்சாக்ஷி யிரண்டுமெப்போதுமேகம்
திடமாகச்சுவானுபூதி சிவோகமென் றிருந்திடாயே.

இ - ள். கடசலத்திலும் மேகசலத்திலும் தோற்றுகின்ற பிரதி பிம்ப ஆகாயமான இரண்டும் மித்தையேயாம்; கடாகாயமும் மகாகா யமும் எக்காலமும் கலந்து ஏகமாகும்; (அதுபோல) வியாபகமான பிர

மமும் கூடஸ்தனும் ஆகிய இரண்டு சைதன்னியமும் எக்காலமும் ஒன்றேயாம்; ஆதலின் ஸ்திரமாகச் சுவானுபூதியிலிய சிவோகம் என்று இருப்பாய். எ-று.

இ-ம். சுருதிகுரு வாக்கியார்த்தம் ஒன்றுபட்ட அத்துவிதமான சுத்த சைதன்னியமே தானாக விளங்குவாய் என, மௌன நிலையை உணர்த்தி, ஆசிரியர் மௌனமாயிருந்தா ரென்பதாம். 75

அ-கை. குருவாக்கியப்படி சமாதியில் தன்னைத் தரிசித்தல்.

தஞ்சமாங்குருவுஞ்சொன்ன தத்துவவழிதப்பாமல்
பஞ்சகோசமுங்கடந்து பாழையுந்தள்ளியுள்ளில்
கொஞ்சமாமிருப்பும்விட்டுக் கூடஸ்தபிரமமென்றும்
நெஞ்சமுநழுவியொன்றாய் நின்றபூரணத்தைக்கண்டான்.

இ-ள். தனக்கு உயிர்த்துணையான ஆசிரிய னனுக்கிரகஞ்செய்த தற்பத தொம்பத சோதனைசெய்த மார்க்கங்கள் தவறாமல் ஐந்துகோசங் கட்கும் விலட்சணனாய் அங்ஙனங்கண்ட சூனியத்தையும் நீக்கி, உள் ளத்தில் அற்பமாகத் தோற்றியிருக்கின்ற ஸ்மரணத்தையும் விடுத்து, கூடஸ்தபிரமம் என்கின்ற நினைவும் இறந்து, அத்து விதமாயிருந்த பரிபூரண ஸ்வரூபத்தைத் தரிசித்தான். எ-று. 76

அ-கை. சமாதிகூடி சுவானுபூதி மயமாதல்.

அநுபவாநந்தவெள்ளத் தழுந்தியேயகண்டமாகித்
தனுகரணங்களாதி சகலமுமிறந்துசித்தாய்
மனதுபூரணமாய்த்தேக மானசற்குருவுங்காண
நனவினிற்சுழுத்தியாகி நன்மகன்சுபாவமானான்.

இ-ள். சுவானுபவமாகிய நிரதிசயாநந்த சமுத்திரத்தில் மூழ்கி அகண்டாகாரமாய்த் தேகேந்திரிய அந்தக்கரணம் முதலிய அனைத்தும் நசித்து, சின்மாத்திராநுபவத்தினால் மனம் பூரணமாகி, பூரணமே

திருவுருக்கொண்ட ஆசிரியரும் பார்க்கும்படி நனவிற் சுழுத்தியை அடைந்து, நற்சீடன் தனதியல்பான ஸ்வரூபமாக விளங்கினான் எ-று.

இ-ம். சுருதி குருவாக்கியப்படி சுவானுபவம் விளங்கிற் றென்பதாம். 77

அ-கை. சமாதியினின்றும் வெளிப்படல்.

அளிமகனெடும்போதிவ்வா றுனபின்மனது மெல்ல
வெளியில்வந்திடவுணர்ந்தான் விமலதேசிகனைக்கண்டான்
துளிவிழிசெரியப்பாதந் தொழுதுவீழ்ந்தெழுந்துசூழ்ந்தான்
குளிர்முகச்சுவாமிகேட்கக் கும்பிட்டுநின் றுசொல்வான்.

இ-ள். கனிவுள்ள சீடனானவன் வெகுநேரம் இவ்வண்ணமாக விளங்கினபின்பு, ஸ்வரூப சமஸ்காரமான மனது மெள்ள அச் சமாதியினின்றுந் துரிதமாய் வெளிப்பட, அறிந்தவனாய் நிர்மலமான ஆசாரியரைப் பார்த்துக் கண்கள் ஆநந்தபாஷ்பம் பொழிய அவரது பாதத்தில் சாஷ்டாங்க நமஸ்காரஞ் செய்து, மீண்டெழுந்து வலம்வந்து பிரகாசந் தம் விளங்குகின்ற முகத்தையுடைய ஆசாரியர் கேட்கும்படி சிரசின் மேல் அஞ்சலியோடு நின்று துதிப்பான். எ-று.

இ-ம். சமாதி அனுபவ சமஸ்காரத்தோடு சகநிட்டைக்கு வெளிப்பட்டதாம். சகநிட்டை=சதாநிட்டை. 78

அ-கை. கைம்மாறு காணேன் எனக் குருவைத் துதிசெய்தல்.

ஐயனேயெனதுளேநின் றனதுசென்மங்களாண்ட
மெய்யனேயுபதேசிக்க வெளிவந்தகுருவேபோற்றி
உய்யவேமுத்திகல்கு முதவிக்கோருதவிநாயேன்
செய்யவேறொன் றுங்காணேன் றிருவடிபோற்றிபோற்றி.

இ - ள். ஆசாரியரே! எனதுள்ளத்தினின்று அளவிறந்த ஜனங்கள் தோறும் ஆளாநின்ற கர்த்தனே! அநுக்கிரகிக்கும் நிமித்தம் மானிடவடிவுகொண் டெழுந்தருளிய ஆசிரியரே! வணங்குகின்றேன்; அடியேன் ஈடேறும்பொருட்டு வீடளித்த சகாயத்திற்கு ஒரு கைம்மாறு அடியேன் செய்ய மற்றொன்றுங் காண்கிலன்: ஆகையால் தேவரீர் அழகிய பாதங்களைத் துதிக்கின்றேன். எ-று.

அ - கை. சமாதி அனுபவம் பெற்ற சீடனைநோக்கிச் சகசிட்டை அநுபவம் உதயமாம்பொருட்டு உனதநுபவந் தடையின்றி விளங்குமெனில் அஃதே கைம்மாறு எனக் கூறுதல்.

சிட்டனிவ்வாறுசொல்லத் தேசிகர்மகிழ்ந்துநோக்கிக்
கிட்டவாவெனவிருத்திக் கிருபையோடருளிச்செய்வார்
துட்டமாந்தடைகண்மூன்றுந் தொடராமற்சொரூபஞான
நிட்டனாயிருப்பாயாகி னீசெய்யுமுதவியாமே.

இ - ள். சீடனானவன் இவ்வண்ணந் துதித்துரைக்க, ஆசிரியரானவர் மகிழ்ச்சியுடன் பார்த்து, சமீபத்தில் வாவென்று அழைத்து இருக்கச்செய்து, கருணையோடும் அநுக்கிரகஞ் செய்வார்; பொல்லாதனவாகிய பிரதிபந்தங்கள் மூன்றும் தொடர்ந்து வாராமல் ஸ்வரூப சைதன்னிய சமாதியை உடையவனாய் இருப்பாயானால் இஃதே நீ எனக்குச் செய்யுங் கைம்மாறாகும். எ-று.

இ - ம். தானென அநுபவமான சுகபோகத்தைத் தவிர வேறு கருதாமல் இருக்கவேண்டுமென்பதாம். 80

அ - கை. அநுபவமான அத்துவிதஞானந் தடைகளினால் நீங்குமோ? சீடனை நோக்கி அவைகளுண்டான அநுபவந் திடமாக விளங்காது எனல்.

நீநானென்றிரண்டில்லாம னிறைந்தபூரணமாயெங்கும்
நானாகத்தெளிந்தஞான நழுவுமோகுருவேயென்றான்

தாஞகும்பிரமரூபஞ் சற்குருநூலாற்ரேன்றும்
ஆஞலுந்தடைகளுண்டே லனுபவமுரைத்திடாதே.

இ - ள். நீ எனவும் நான் எனவும் துவிதமின்றி அத்துவிதமாக வியாபித்த பரிபூரணமாய் எவ்விடத்தும் தாஞகவறிந்த சைதன்னிய மானது, ஆசாரியரே! நழுவுமோ? என்று கேட்டான்; தன்மயமான பிரமஸ்வரூபமானது உபதேசத்திஞலும் வேதாந்த சாஸ்திரங்களிஞ லும் உதிக்குமாஞலும் பிரதிபந்தங்க ளிருக்குமாஞல் அவ்வனுபவம் ஸ்திரப்படாது. எ-று.

நீ என்பது முன்னிலையிற் குருவாக விளங்கிய ஆனந்தமெனவும், நான் என்பது தன்மையிற் சீடஞக விளங்கிய அறிவெனவுங்கொள்க. 81

அ - கை. தடைகளையும் அவற்றை நீக்கும் உபாயங்களையுங் கூறல்.

தடைகளே தெளிலஞ் ஞானஞ் சந்தேகம் விபரீதங்கள்
படர்செயு மிந்த மூன்றும் பலசன்மப் பழக்கத்தாலே
உடனுடன் வரும் வந்தக்கா லுயர்ஞானங் கெடுமிவற்றைத்
திடமுடன் கெடுப்பாய் கேட்டல் சிந்தித்த றெளிதலாலே.

இ - ள். அத்தடைகள் யாவையென்ருல், அஞ்ஞானமும் சந்தேக மும் விபரீதங்களுமாம்; துன்பஞ்செய்யும் இம்மூன்று தடைகளும் அநந்தசென்மப் பழக்கத்திஞல் அடிக்கடிவரும்; அங்ஙனம் வருமாகில் மேலான ஞானம் மறைபடும்; இத்தடைகளைத் திடமாகச் சிரவணத் திஞலும் மனனத்திஞலும் நிதித்தியாசனத்திஞலும் நீக்குவாய். எ-று.

அ - கை. தடைகள் உளவாயின் அனுபவம் விளங்காது எனத் திருஷ்டாந்த முகத்தால் அறிவித்தல்.

அக்கினிகட்டுப்பட்டா லற்பமுஞ்சுடமாட்டாது
மக்கினஞான த்தாலே வந்தபந்தமும்வேவாது

சித்தெனப்பழகிக்கேட்டல் சிந்தித்தறெளிதலாலே
விக்கினமடஞ்சந்தேகம் விபரீதம்போக்குவாயே.

இ - ள். மந்திரத்தினால் நெருப்பானது ஸ்தம்பனமானால் சற்றும் எரிக்கமாட்டாது; அதுபோல, அஞ்ஞானம் சந்தேகம் விபரீதங்களால் தடையுண்ட தத்துவஞானத்தால் வரப்பட்ட திரிசிய வாசனையும் கெடாது; ஆதலால் இடைவிடாமற் பழக்கஞ்செய்து சிரவணத்தினால் ஞானத்துக்குத் தடையாகிய அஞ்ஞானத்தையும், மனனத்தினால் சந்தேகத்தையும், சுபானுபவமாய்த் தெளிதலினால் கற்பிதமான திரிசியத்தையும் நீக்குவாய். எ-று. 83

அ - கை. அத்தடைகளின் இயல்பு கூறல்.

பிரமபாவனையைமூடிப் பேதங்காட்டுவதஞ்ஞானம்
குரவன்வாக்கியநம்பாமற் குழம்பினமனஞ்சந்தேகம்
திரமறுசகமெய்யென்றுந் தேகநானென்றுமுள்ளே
விரவியமோகந்தானே விபரீதமென்பர்மேலோர்.

இ - ள். திருக்கு ஸ்மரணத்தை மறைத்துத் திரிசியத்தைக்காண்பிப்பது அஞ்ஞானமாம்; ஆசாரியர் உபதேச வாக்கியார்த்தத்தை நம்புதல் செய்யாமல் மனக்கலக்கமுறுதல் சந்தேகமாம்; நிலையில்லாத சகம் சத்தியமெனவும் சரீரம் யானெனவும், மனத்தின்கண் பொருந்தின மயக்கமே விபரீதம் என்றுஞ் சொல்லுவார்கள் மகான்கள். எ-று. 84

அ - கை. அத்தடைகளைக் கெடுக்குங் கேட்டல் முதலியவைகளின் இயல்பு கூறல்.

தத்துவவனுபோகந்தான் சாதித்தல்கேட்டலென்பார்
ஒத்துளபொருளுகத்தா லுசாவல்சிந்தித்தலென்பார்
சித்தமேகாந்தமான தரிசனந்தெளிதலென்பார்
நித்தமிப்படிசெய்தக்கா னிர்வாணம்பெறுவாயே.

இ - ள். மகாவாக்கியார்த்தமான பிரமோபதேசத்தைக் குருமுகமாகப் பெறுதலைக் கேட்டல் என்றுரைப்பார்கள்; அதன் ஐக்கியார்த்தத்தை விசாரித்தலைச் சிந்தித்தல் என்று சொல்லுவார்கள்; மனமானது தனிமையான சுவானுபூதியைத் தரிசித்தலைத் தெளிதல் என்று சொல்லுவார்கள்; எப்போதும் இவ்வண்ணம் அனுசந்தத்தினால் நீ முத்தியையடைவாய். எ-று.

இ - ம். அஞ்ஞானம் முதலிய தடைகளைக் கேட்டல் முதலிய உபாயங்களால் கெடுக்கிற் சுவானுபவந் தடையின்றி விளங்கும் என்பதாம். 85

அ - கை. அக்கேட்டல் முதலியவைகள் வேண்டுங் கால அளவு கூறல்.

எத்தனைநாண்ஞாதாவு ஞானமுமிருக்குமுன்பால்
அத்தனைநாளும்வேண்டு மப்பாலோர்செயலும்வேண்டா
நித்தமும்வெளிபோற்பற்று ஞேயமாத்திரமாய்ச்சீவன்
முத்தரானவர்விதேக முத்திபெற்றிருப்பரென்றும்.

இ - ள். எவ்வளவுகாலம் காண்பானும் காட்சியும் இருக்குமோ அவ்வளவு காலமும் இக்கேட்டல் முதலிய மூன்றும் வேண்டும்; அதற்குமேல் ஓரனுஷ்டானமும் வேண்டுவதில்லை; எப்போதும் நான்கு பூதத்தினாலுந் தாக்கற்றிருக்கின்ற ஆகாயத்தைப்போலத் திரிசியங்களிற் பற்றுது நிற்கும் ஆத்மஸ்வரூபமாய் சீவன்முத்தியையடைந்தவர்கள் எப்பொழுதும் விதேக கைவல்யத்தை அடைந்திருப்பார்கள். எ-று.

இ - ம். காண்பானுங் காட்சியும் நீங்கி ஸ்வரூபந் தானாகிறபரியந்தம் கேட்டல் முதலியவைகளைப் பழகல்வேண்டும் என்பதாம். 86

அ - கை. அச்சீவன்முத்தர்கள் தொகையும் நாமமுஞ்சொல்லி அவர்களின் இயல்பு கூறத் தொடங்கல்.

ஞானமார்சீவன்முத்தர் நால்வகையாவர்தேனாய்
வானிகர்பிரமவித்து வரன்வரியான்வரிட்டன்
ஆனவர்நாமமீதா மவர்களிற்பிரமவித்தின்
தானமுமற்றைமூவர் தாரதம்மியமுஞ்சொல்வேன்.

இ-ள். ஞானநிறைந்த சீவன்முத்தர்கள் நான்குவிதமாவார்கள்; அவர்களது பெயர், ஆகாயத்துக்கொப்பான பிரமவித்து, பிரமவான் பிரமவரியான், பிரமவரிட்டன் ஆகிய இவையாம்; அவர்களுக்குள் பிரமவித்தின் நிலையையும் ஏனைய மூவருடைய தாரதம்மியத்தையுஞ் சொல்வேன் கேட்பாயாக. எ-று.

இ-ம். வெளிப்படை. 87

அ-கை. சீவன்முத்தர்களில் பிரமவித்தியின் இயல்பு கூறல்.

தீரராய்ப்பிரமவித்தாய்த் தெளிந்தவர்தெளியுமுன்னம்
வாரமாயிருந்ததங்கள் வருணமாச்சிரமஞ்சொன்ன
பாரகாரியமானாலும் பலர்க்குபகாரமாக
நேரதாச்செய்வார்தீர்ந்த நிலைவிடாச்சீவன்முத்தர்.

இ-ள். தீரமுள்ளவர்களாய்ப் பிரமவித்தாய்த் தெளிந்த சீவன்முத்தர்கள் இங்ஙனந் தெளிவதற்கு முன்பு உரிமையாயிருந்த தங்களுடைய வர்ணாச்சிரமங்களைக் குறித்துக் கன்மநூலாற் சொல்லப்பட்டவைகள் வருத்தமான கருமங்களாயினும் யாவர்க்கும் அனுகூலமாகக் கிரமமாக அவற்றைச் செய்வார்கள், முடிவான நிச்சயத்தைவிட்டு நீங்கார்கள். எ-று.

இ-ம். பிரமவித்து லோகோபகார நிமித்தம் சற்கருமத்தை அனுஷ்டிப்பான் என்பதாம். 88

இதுவுமது.

காமமாதிகள்வந்தாலுங் கணத்திற்போமனத்திற்பற்றார்
தாமரையிலைத்தண்ணீர்போற் சகத்தொடுங்கூடிவாழ்வார்

பாமரரெனக்காண்பிப்பார் பண்டிதத்திறமைகாட்டார்
ஊமருமாவாருள்ளத் துவகையாஞ்சீவன்முத்தர்.

இ - ள். காம முதலியவைகள் ஒருபோது நேரிட்டாலும் அநிச்சா பிராரத்தமாகக் கணத்தில் நீங்கும்; மனத்தில் வையார்கள்; தாமரையிலைத் தண்ணீர்போல உலகத்தாருடன் சேர்ந்து வாழ்வார்கள்; அஞ்ஞானிகளைப்போலக் காட்டுவார்கள்; வித்துவத் திறத்தைக் காண்பியார்கள்; உள்ளத்தின்கண் நித்தியாநந்தத்தையுடைய பிரமவித்தானவர்கள் மௌனமாயு மிருப்பார்கள். எ-று.

காமமாதிகள் வந்தாலும் என்றவும்மை அவைகள் வாரா என்பதை உணர்த்தியதாம்.

ப - ம். பிராரத்தம் அனுபவித்துத் தீரும்படியான இச்சையாதிகள் ஒருபோது ஏகதேசமாக உதிக்கினும் அவைகள் ஆத்ம சுகத்தை விளக்குதற்கு வெஞ்சகமா நின்று விளக்கித் தான் உடனே நசித்தலின் "காமமாதிகள் வந்தாலுங் கணத்திற்போம்" எனவும் மனம் பூரணாநந்தமாகத் தெளிந்திருத்தலின் "மனத்தில் பற்றார்" எனவும், உலகருடன் மனம் ஒவ்வாமல் வாக்குங் காயமும் ஒத்திருத்தலே, "தாமரையிலைத் தண்ணீர்போற் சகத்தோடுங் கூடிவாழ்வார்" எனவும், எவரெவர் எங்ஙனம் எங்ஙனம் வஸ்து நிச்சயங்கூறினும் அந்நிச்சயங்கள் அனைத்தும் தமது சுவானுபவத்திற் கொத்தலின் அவைகளை மறுக்க அறியாத பேதையர்கள்போலக் காட்டுதலே, "பாமரரெனக் காண்பிப்பார்" எனவும், அங்ஙனம் நிச்சயித்த நிச்சயங்கள் அனைத்துந் தமது அனுபவ வியாபகத்திற்கு அங்கமாகத் தாம் அவைகளின் அங்கியாகவிளங்கும் அனுபவத்தை அறிவியாதிருத்தலே, "பண்டிதத் திறமைகாட்டார்" எனவும், துரியாதீதமான மகாமௌனமா யிருத்தலே "ஊமருமாவார்" எனவும், மனஞ்சென்ற இடமெல்லாஞ் சிதாநந்தமாக விளங்குதலே, "உள்ளத்துவகையாம்" எனவுங் கூறினார்.

இ - ம். பிரமவித்தின் அனுபவ விலாசத்தைக் கூறினதாம்.

இதுவுமது.

பேதகன்மத்தால்வந்த பிராரத்தநாநாவாகும்
ஆதலால்விவகாரங்க ளவரவர்க்கானவாகும்
மாதவஞ்செயினுஞ்செய்வர் வாணிபஞ்செயினுஞ்செய்வர்
பூதலம்புரப்பரையம் புகுந்துண்பர்சீவன்முத்தர்.

இ-ள். அறிவின்மையான சஞ்சித கன்மத்தால் உண்டான பிராரத்த கன்மம் பலவிதமாம்; ஆதலினால், விருத்திகள் அவரவர்களுக்கு நியமித்தவையாம்; பிரமவித்தானவர்கள் மா தவத்தைச் செய்தாலுஞ் செய்வார்கள்; வியாபாரஞ் செய்தாலுஞ் செய்வார்கள்; பூமிபாலனஞ் செய்தாலுஞ் செய்வார்கள்; பிக்ஷை வாங்கிப் புசித்தாலும் புசிப்பார்கள். எ-று.

இ-ம். பிரமவித்து எத்தொழிலைச் செய்யினும் அவைகள் பிராரத்தகன்மமே அன்றி அவர்க்கில்லை என்பதாம். 50

இதுவுமது.

சென்றதுகருதார்நாளைச் சேர்வதுநினையார்கண்முன்
நின்றதுபுசிப்பார்வெய்யி னிலவாய்விண்விழுந்துவீழ்ந்தும்
பொன்றினசவம்வாழ்ந்தாலும் புதுமையாவொன்றும்பாரார்
நன்றுதீதென்னார்சாட்சி நடுவாணசீவன்முத்தர்.

இ-ள். முன் நீங்கினவைகளை நினைத்து வாடார்கள்; எதிர்காலத்தில் வரும் பொருளை நினைத்து மகிழார்கள்; நிகழ்காலத்துள்ள பொருளைப் பிராரத்தமென்று அநுபவிப்பார்கள்; உஷ்ண கிரணமானது அமிர்த கிரணமாய் ஆகாயத்தினின்று விழுதாக இறங்கினாலும், மரித்த பிரேதஞ் சீவித்தாலும், அதிசயமாக ஒன்றையுங்காணார்கள்; இது நன்றென்றுந் தீதென்றுஞ் சொல்லார்கள்; சாக்ஷியாய் மத்தியஸ்தமாய் விளங்கிய பிரமவித்துக்கள். எ-று.

ப-ம். முன்புள்ள அறிவின்மையையும் பின்புள்ள திரிசிய உணர்வையுங் காணாது நடுநிலையாகிய பரவுணர்விற் சுகித்திருத்தலின் "சென்றது கருதார் நாளைச்சேர்வது நினையார் கண்முன் நின்றது புசிப்பார்" எனவும், சகல விசித்திரமும் தமது லீலையாகக்கருதி அவைகளில் வியப்புறாதிருத்தலின் "வெய்யனிலவாய்விண் விழுநாவீழ்ந்தும் பொன்றினசவம் வாழ்ந்தாலும் புதுமையா யொன்றும் பாரார்" எனவும், சர்வமுந் தமது சித்துருவமாக விளங்குதலின் "நன்று தீதென்னார்" எனவும் மத்தியகத சர்வசாக்ஷியான தாம் அத்துவிதமாக விளங்குதலின் "சாட்சி நடுவான சீவன் முக்தர்" எனவுங் கூறினார்.

இ-ம். பிரமவித்து மனம் அடங்கி அனுபவமாய் நிற்றலின் ஒன்றைக் கருதலும் வியப்புறுதலும் இலன் என்பதாம். இந்நான்கு செய்யுளில் முந்தின பிரமவித்தின் இயல்பைக் கூறினதெனக்கொள்க. 91

அ-கை. மற்றமூவர் இயல்பு கூறல்.

பின்னைமூவரிலிரண்டு பேர்களுஞ்சமாதியோகம்
அன்னையுற்றிருப்பார்தேக சஞ்சாரநிமித்தந்தானாய்
உன்னுவோன்வரன்வேற்றோரா லுணர்பவன்வரியானாகும்
அன்னியர்தம்மாற்றன்னா லறியாதோன்வரிட்டனாமே.

இ-ள். மற்ற மூன்றுபேர்களில் பிரமவரன் பிரமவரியான் என்னும் இரண்டுசீவன் முத்தர்களும் சமாதி ஞானத்தை அடைந்திருப்பார்கள்; தேகஞ் சஞ்சரிக்கும்பொருட்டுத் தானாய் உணவுமுதலியவற்றை நினைப்பவன் பிரமவரனும்; அன்னியராகிய சீடர் முதலியோரால் உணவு முதலியவைகளைக்கொள்ள வறிபவன் பிரமவரியானும்; பிறராலும் தன்னாலும் அவ்வுணவு முதலியவைகளைக்கொள்ள வறியாதவன் பிரமவரிட்டனும். எ-று.

பிரமவரிட்டன் சமாதியில் அதிதமானவன் எனக்கொள்க.

இ-ம். பின்னுள்ள பிரமவரன் பிரமவரியான் பிரமவரிட்டன் இவர்கள் இயல்பைக் கூறினதாம். 92

அ-கை. இந்நால்வர் பயன்களைக் கூறல்.

அரிதாகுமிவர்களிவ்வா றநேகராலுமுத்தி
சரியாகும்பாடுபட்ட சமாதிக்குப்பலனேதென்றால்
பெரிதானதிட்டதுக்கம் பிரமவித்தனுபவிப்பான்
வரியானும்வரனுமற்றை வரிட்டனுஞ்சுகமாய்வாழ்வார்.

இ-ள். திரிலோகத்திலுங் கிடைத்தற்கரிய இச்சீவன் முத்தர்கள் இவ்வண்ணம் அநேகராலும், அவரடைந்த ஞானத்தில் தாரதம்மிய மின்மையால் வீடு ஒரு தன்மைத்தாம்; வருத்தமுற்றுச் செய்த நிஷ்டைக்குப் பிரயோசனம் யாதென்னில், பிரமவரியானும் பிரமவரனும் பிரமவரிட்டனும் நிரதிசயாநந்தமாக வாழ்வார்கள்; ஏனைய அச்சமாதியில் பாடுபடாத பிரமவித்தானவன் பிராரத்த வசத்தால் நேரிடும் பெருந்துன்பங்களை அனுபவிப்பான். எ-று.

இ-ம். இச்சீவன் முத்தர்கள் பிராரத்தத்தினால் வருஞ் சுகதுக்கானுபவத்தில் தாரதம்மியராயினும் பிரமாநந்த கைவல்யப்பேற்றில் அஃதிலர் என்பதாம். 93

அ-கை. பெத்தமுத்தர்களின் இயல்பு கூறல்.

பிரமஞானிகளுங்கன்மப் பேதையர்போலேவாழ்ந்தால்
திரமுறுமஞ்ஞானம்போய்ச் செனியாதவழியேதென்னின்
பரவுமாகாயமொன்றிற் பற்றறாமற்றைநாலும்
விரவினதோடுங்கூடும் விதத்திருவோருமாவார்.

இ-ள். ஸ்வரூபஞானிகளும் கன்மிகளான அஞ்ஞானிகளைப்போலச் சீவித்திருந்தால், நிலையாகத் தோற்றிய அறியாமை ஒழிந்து ஜனிப்பிறவாத மார்க்கம் யாதென்றால் வியாபித்திருக்கும் ககனமானது ஒன்றி

னுக் தோயாது நிற்க, மற்றை நான்கு பூதங்களும் ஒன்றுடனொன்று கலக்கும், இவ்விதமாக ஞானி அஞ்ஞானிக ளிருவரும் ஆகுவர். எ-று.

இ - ம். ஞானி அஞ்ஞானிகளின் கிரியை ஒன்றாயினுங் கருத்து வேறு என்பதாம். 94

அ - கை. சீவன் முத்தர்களின் தரிசனமகிமை சொல்லி அவர்கள் விதேகமுத்தரான வழி சொல்லத்தொடங்கல்.

சீவன்முத்தரைச்சேவித்தோர் சிவனயனெடுமாலான
மூவருமகிழநோன்பு முழுவதுஞ்செய்துசன்ம
யாவனமாஞரென்று பலமறைமுழங்குமிப்பால்
மேவருஞ்சீவன்முத்தர் விதேகமுத்தியுநீகேளாய்.

இ - ள். சீவன் முத்தர்களைத் தரிசித்தவர்கள் சிவனும் பிரமனும் திருமாலும் ஆகிய மும்மூர்த்திகளு மிகமகிழத் தவங்க ளனைத்து முடித்துப் பவம் பரிசுத்தமானார்களென்று அநந்த வேதங்கள் முறையிடுகின்றன; இனி அறிதற்கரிய சீவன் முத்தர்களுடையும் விதேக முத்திப் பலத்தையும் நீ கேட்பாயாக. 95

சன்மபாவன மானாரென்பது ஞானதனுவாயினா ரெனக் கொள்க.

அ - கை. கன்மத்திரய ஒழிபு கூறல்.

பஞ்சினையழித்தீப்போற் பலசன்மவிதவித்தாம்
சஞ்சிதமெல்லாஞானத் தழல்சுட்டுவெண்ணீறாக்கும்
கிஞ்சிலாகாமியந்தான் கிட்டாமல்விட்டுப்போகும்
விஞ்சினபிராரத்தத்தின் வினையனுபவத்துத்தீரும்.

இ - ள். பஞ்சை வடவைத் தீ எரிப்பதுபோல அநந்த பவங்களுண்டாவதற்குப் பலவித விதைகளான சஞ்சித கன்மங்கள் அனைத்தையும் ஞானக்கினியான எரித்து வெண்மையாகிய சாம்பலாக்கும்;

ஆகாமிய கன்மமானது அற்பமும் நெருங்காமல் நீங்கும்; சேடித்த பிராரத்தகன்மமானது மூன்றுவிதமாக அநுபவித்து நீங்கும். எ-று. 96

சஞ்சிதம்—சென்ற செனனங்களிற் செய்யப்பட்டு பலனனுபவிக்காமல் நின்ற கருமம் பிராரத்தம்—சென்ற சனனங்களிற் செய்யப்பட்டு வர்த்தமான சனனத்துக்கு ஏதுவாகிய கருமம் ஆகாமியம்—வர்த்தமான சனனத்திற் செய்யப்பட்டு மறுசனனத்துக்கு ஏதுவான கர்மம்.

மூவிதமான இச்சை அனிச்சை பரவிச்சை என்பனவாம்.

அ - கை. இருவினை நீங்கும் வகை கூறல்.

பொறுமையாற் பிராரத்தத்தைப் புசிக்குநாட்செய்தகன்மம்
மறுமையிற்றொடர்ந்திடாமன் மாண்டுபோம்வழியேதென்னின்
சிறியவ ரிகழ்ந்துஞானி செய்தபாவத்தைக்கொள்வார்
அறிபவ ரறிந்துபூசித் தறமெலாம் பறித்துண்பாரே.

இ - ள். சாந்தத்தினால் பிராரத்த கன்மத்தை அநுபவிக்குங் காலத்தில் சீவன் முத்தர்கள் செய்யுங் கருமங்கள் மேற்பிறவியைக் கொடுப்பதற்குத் தொடர்ந்துவாராமல் நசிக்கும் மார்க்கம் யாதென்றால் மூடர்கள் நிந்தித்து ஞானவான் செய்யும் பாவகன்மத்தைப் பெற்றுக் கொள்ளுவார்கள்; விவேகிகள் சிவசொரூபமென் றறிந்து ஆராதித்து அவர்கள் செய்யுந் தருமங்களனைத்தையும் கவர்ந்து அனுபவிப்பார்கள்.

அ - கை. சரீரத்திரய நீங்கு கூறல்.

அரியமெய்ஞ்ஞானத்தீயா லவித்தையாமுடனீறாமே
பெரியதூலமுங்காலத்தாற் பிணமாகிவிழுமந்நேரம்
உரியசூக்குமசரீர முலைப்பிரும்புண்டநீர்போல்
துரியமாய்விபுவாய்நின்ற சொரூபத்திலிறந்துபோமே.

இ - ள். அரிதரிய ஞானாக்கினியினால் காரண சரீரம் நசிக்கும்; பருத்த தூல சரீரமும் காலவசப்படி பிரேதமாம்; அப்போது சாத

னத்துக்குரித்தான சூக்குமதேகமானது கொல்லன் உலையிற் காய்ந்த அயமானது கிரகித்த சலத்தைப்போலத் துரியமாகவும் வியாபகமாகவும் இருந்த பிரமஸ்வரூபத்தில் நசிக்கும். எ-று.

இ-ம். சஞ்சிதவினையுங் காரண சரீரமும் பர ஞானத்தினால் கெடுதலும், ஆகாமியவினையுஞ் சூக்குமதேகமும் அந்த ஞானத்தில் லயமாகுதலும், பிராரத்த கன்மமுந் தூலதேகமும் நியமித்தகால அளவில் நீங்குதலும் ஆம் என்பதாம். 98

அ-கை. விதேகமுத்தியின் இயல்பு கூறல்.

கடமெனுமுபாதிபோனாற் ககனமொன்றானாற்போல
உடலெனுமுபாதிபோன வுத்தரஞ்சீவன்முத்தர்
அடிமுடிநடுவுமன்றி யகம்புறமின்றிநின்ற
படிதிகழ்விதேகமுத்திப் பதமடைந்திருப்பரென்றும்.

இ-ள். குடமென்கிற உபாதி நீங்கினால் கடாகாய முதலிய நான்கும் ஏகமானதுபோல, மூன்று தேகமென்கிற உபாதி நீங்கின க்ஷணம் சீவன முத்தரானவர் ஆதிமத்தியாந்த ரகிதமாய் உட்புறமின்றி எப்போது மிருந்த வண்ணம் விளங்குகின்ற விதேகமுத்திப் பதத்தைப் பெற்றிருப்பார். எ-று. 99

அ-கை. இவ்வனுபவம் என்றும் விளங்குவது எனல்.

சொல்லியமகனேயெங்குஞ் சூழ்வெளியிருக்கமண்ணைக்
கல்லியபின்புதோன்றுங் கிணற்றினாகாயம்போல
ஒல்லையாம்பிரமநூலா லுற்றதுபோலேதோன்றும்
எல்லையினெப்போது மேகமென்றிருந்திடாயே.

இ-ள். முன் அனுபவஞ்சொன்ன புத்திரா! எவ்விடத்தும் சூழ்ந்த ஆகாயம் இருக்கப் பூமியை அகழ்ந்தபின்பு உண்டானது போலத் தோற்றுகின்ற கூப ஆகாசம்போல, அநாதியாய் விளங்குகின்ற

பிரமஸ்வரூபமானது ஆத்மஞான சாஸ்திரங்களால் உதித்தது போலத் தோன்றும்; பிரமானு நிதமான சுத்த சைதன்னிய ஸ்வரூபமான பரம் எக்காலமும் ஒன்றே என்றிருப்பாய். எ-று.

இ-ம். இப்போது உதித்ததுபோலத் தோற்றிய அநுபவஞ் சிருட்டிக்கு முன்னும் பின்னும் நடுவுமான எப்போதும் இருந்த நித்திய நிருத்தியாக விளங்கிய சச்சிதாநந்தமேயன்றி இப்போது உதித்தது அன்றென்பதாம். 100

அ-கை. சத்து அசத்து இவைகளின் உண்மையைத்தெரிவித்தல்.

கானனீர்கிளிஞ்சில்வெள்ளி கந்தர்ப்பநகர்கனவூர்
வானமைகயிற்றிற்பாம்பு மலடிசேய்முயலின்கோடு
பீனமார்தறிபுமானிப் பிரபஞ்சமெல்லாம்பொய்யே
ஞானமெய்மகனேயுன்னை நம்மாணைமறந்திடாதே.

இ-ள். கானற்சலம்போலவும், சுத்திகா ரசிதம்போலவும், கந்தர்ப்பநகரம்போலவும், சொப்பன நகரம் போலவும், ஆகாய நீலம்போலவும், ரச்சு சர்ப்பம்போலவும், வந்தியா புத்திரன்போலவும், சச விஷாணம்போலவும், பருத்தகட்டை சோரனைப்போலவும், பிரமத்தில் கற்பிதமாகத் தோற்றுகின்ற இச்சகத்து அனைத்தும் மித்தையேயாம்; சுத்த சைதன்னியம் ஒன்றே உண்மையாம்; மாணாக்கனே! இங்ஙனம் விளங்கிய உனது ஸ்வரூப சைதன்னியத்தை நமதாக்கினைப்படிக்கு மறவாமல் அறிவாய் விளங்குவாய். எ-று.

இ-ம். எப்போதுஞ் சத்தான சுகபோதம் இருக்கின்றதே அன்றி அசத்தான திரிசியங்கள் இல என்பதாம். 101

தத்துவவிளக்கப்படலம்

முற்றிற்று.

---

இரண்டாவது

# சந்தேகந்தெளிதற்படலம்.

அவதாரிகை:—முன் படலத்தில் தத்துவமாகிய ஆநந்த பிரமத்தை நிஷ்டா பிரமையால் விளக்கி, இனிச்சொரூப பிரமையினல் முன் கற்பனையாகத் தோற்றிய சர்வேஸ்வரசகம் சிற்சுகாகாரமாக விளங்குவதை விளக்கும்பொருட்டுச் சந்தேகந் தெளிதலைக் கூறுகின்றார்.

நார்குழிபறித்துமெள்ள நாட்டியநெடியகம்பம்
உரமுறக்குத்திகுத்தி யுரப்பிக்குமுபாயம்போலப்
ப்ரமமாஞ்சொரூபந்தன்னிற் பற்றியமனோவிருத்தி
நிரநிலைபெறச்சந்தேகந் தெளிதலைமொழிகின்றேனே.

இ-ள். மானிடர்கள் பள்ளங் கல்லி மெல்ல எடுத்து நட்ட நீண்ட ஸ்தம்பமானது அசைவின்றி ஸ்திரமாக நிற்கும்பொருட்டுக் குத்திக் குத்திப் பலப்படுத்துகின்ற யுத்தியைப்போலப் பிரமஸ்வரூபத்தில் பொருந்திய சித்தவிருத்தியானது ஸ்திரநிலையை அடையும் பொருட்டுச் சந்தேகந் தெளிதலைச் சொல்லுகின்றேன் எ-று.

இத்திட்டாந்தம் தூணு கநநியாயமெனக்கொள்க. தூணு—ஸ்தம்பம், கநநம்—புதைத்தல், நியாயம்—திருஷ்டாந்தம்.

ப-ம். தானல்லாத விஷயங்களை நீக்கித் தானாகிய பிரமத்திற் கலந்த மனம் அப்பிரமவியாபகமான பூரணவிருத்தியில் சஞ்சரிக்குமிடத்தில் சர்வம் பிரமமயம் என்னுஞ் சாக்ஷாத்காரானுபவந் தடையின்றி விளங்குவதே விவகரித்தும் விவகரியாத நிலையாதலின், அதற்குத்தடையாய் உள்ளவைகளைக் களைதல் வேண்டுமென்பார் "சொரூபந்தன்னிற் பற்றிய மனோவிருத்தித் திறநிலைபெறச் சந்தேகந் தெளிதல்."

இ - ம். சித்தினிடத்து உதயமாய்ப் பகிர்முகம் இன்றி அச்சித்தில் கரைந்த மனமானது சென்ற இடமெல்லாம் சொனந்தமாக ரமிக்கும்பொருட்டுச் சந்தேகந் தெளிதலைக் கூறத் தொடங்கினதாம். 1

அ - கை. குரு குலவாசஞ் செய்யும் தன்மையைக் கூறல்.

நற்கருத்துடையோனாகி ஞானவானாகிநின்றோன்
மர்க்கடநியாயம்போல மகாபூதவிகாரந்தொட்டு
நிர்க்குணவிதேகமுத்தி நிலைபரியந்தஞ்சொன்ன
சர்க்குருவினைவிடாமற் சந்ததமனுசரித்தான்.

இ - ள். பேரானந்தமான சிந்தையை யுடையவனாய்ச் சைதன்னிய ஸ்வரூபியாகி இருந்த சீடனானவன் மர்க்கட நியாயத்தைப்போலப் பஞ்சபூத காரியமான தூலதேகமுதல் நிர்குணரகிதமான விதேக கைவல்யமட்டும் அருளிய ஆசாரியனைவிட்டு நீங்காமல் சதா காலமும் தொடர்ந்து நின்றான். எ-று.

மர்க்கடநியாயம்—குரங்கின்குட்டி தன் தாய்க்குரங்கு எங்கேதாவினும், தான் அதனைவிடாதுபற்றி நிற்றல். மார்ச்சால நியாயம்—தாய்ப்பூனை தன்குட்டிகள் கிடக்குமிடந்தேடிக் காப்பாற்றுதல்.

இ - ம். வெளிப்படை.

அ - கை. ஆசிரியர் சீடனை அனுபவம் வினாதல்.

சந்ததம்புருடன்றன்னைச் சாயைபோல்விடாமலன்பாய்
மைந்தனைநோக்கிச்சாக்ஷி மாத்திரமாய்நின்றாயோ
சிந்தையிலையமெல்லாந் தீர்ந்ததோதெளிவினுள்ளே
அந்தரங்கலந்ததுண்டோ வனுபவமுரைசெய்வாயே.

இ - ள். எப்பொழுதும் ஓர் புருடனைவிட்டு நீங்காதசாயைபோல ஆசாரியனைவிட்டு நீங்காமல் அன்புருவமாய் நிற்கின்ற சீடனை அருட்கண்சாத்திப் பிரத்யேகாத்ம ஸ்வரூபமாக நிற்கின்றாயா? மனத்தின்

கணுள்ள சமுசயங்களனைத்தும் நீங்கினவோ? தெளிவின் கண் சீவேஸ்வா சகத்பேதம் சேர்ந்ததுமுளதோ? உன தனுபவத்தைச் சொல்வாய். எ-று.

இ - ம். பேதமின்றித் தெளிவாகச் சுவானுபவமாய் விளங்குகின்றாயா? என மூவகையாக வினவினதாம். 3

அ - கை. முன்வினு மூன்றற்கும் விடைகூறல்.

எனவுரைத்தருளுமாசா னிருபதம்வணங்கியெந்தாய்
சனனவன்காட்டின்மோகத் தமத்தெழுபேதப்பேய்கள்
உனதருளுதயவெற்பி லுபதேசவருக்கன்றோன்றி
மனவிழிதெரியஞான வான்கதிர்பரந்தாலுண்டோ.

இ - ள். என்று கேட்டருளிய தேசிகருடைய உபயபாதங்களைப் பணிந்து, என்னுடைய பிதாவே! வலிமையாகிய சனன ஆரண்யத்திலிருக்கும் அஞ்ஞானமாகிய இருளில் தோன்றுகின்ற பேதங்களென்னும் பிசாசங்கள், தேவரீரது கருணை என்னும் உதயகிரியில், பிரமோபதேசம் என்னும் சூரியனுதித்து, அகக்கண் விளங்க மேலான சிற்பிரகாசமானது வியாபித்தால் இருக்குமோ. எ-று.

ப - ம். சாக்ஷிமாத்திரமாய் விளங்குகின்றது என்பார். "உபதேச வருக்கன் றோன்றி" எனவும், சிந்தையில் ஐயமெல்லாந் தீர்த்ததென்பார். "மன விழிதெரிய" எனவும், அந்தரமானபேதம் உதிக்கவில்லை என்பார், "ஞானவான்கதிர் பரந்தாலுண்டோ" எனவுங் கூறினார்.

இ - ம். தனது அனுபவத்தில் சந்தேகவிபரீதம் இன்றென்பதை அறிவித்ததாம். 4

அ - கை. சமாதியில் தடை இன்றாயினம் சகசத்தில் அவையின்றி நிற்பதற்கு வினை வேண்டுவது உண்டெனல்.

மந்திரமூர்த்திதன்னான் மாற்றியபேய்போனாலும்
எந்திரமெழுதிக்கட்டி யினிவராவகைசெய்வார்போல்
முத்தியன்னுபதேசத்தால் மோகம்போனாலுமையா
புத்திநின் றுறைக்கவின்னும் புகலும்விண்ணப்பமுண்டே.

இ-ள். எனதாசிரியரே! மாந்திரிகனால் நீக்கப்பட்ட பிசாசமானது நீங்கினாலும், எந்திர ஸ்தாபனஞ்செய்து மேல் வாராத வண்ணஞ் செய்பவர்களைப்போல, முன்னமே தேவரீரனுக்கிரகத்தினால் மயக்கம் நீங்கினாலும், அறிவு நிலைபெறும் பொருட்டு மேலும் அடியேன் கேட்கும் விண்ணப்பமுளது. எ-று.

இ-ம். சகசத்துக்குத் தடையாயுள்ள சந்தேகங்களை நீக்கும் பொருட்டு வினவத் தொடங்கினதாம். 5

அ-கை. சீடன் தனக்கு அனுபவமான பிரமஸ்வரூபம் மனோவாக்குகளுக்கு அகோசரமா? கோசரமா? என அறியும் நிமித்தமும் அன்னவர் கூறும் சுருதி வாக்கியத்தை இரண்டு சங்கையாக வினாதல்.

ஆகமப்பிரமாணத்தா லறிவென்றும்வாக்குக்கெட்டா
தேகமாம்பிரமமென்று மிதயத்தா லுணர்வாயென்றும்
சோகமாமனத்திற்கெட்டாச் சயஞ்சோதியென்றுஞ்சொன்னீர்
மோகமாமிரண்டுசங்கை முளைத்தனபறித்திடீரே.

இ-ள். அத்துவிதப் பிரமத்தை வேதமுடிவான மகாவாக்கியப் பிரமாணத்தினால் அறிவாய் எனவும், இவ்வேத வாக்கியத்துக் கெட்டப்படாது எனவும், இச்சுயம்பிரகாசத்தை மனதினா லறிவாய் எனவும், நாம்பமான மனத்திற்கு அறிதற் கரியது எனவும் அருளினீர்; மயக்கமான இரண்டு சங்கைகள் உளவாயின, அவைகளைக் களைந்திடீர். எ-று.

பிரமவஸ்து மனோவாக்குகளுக்கு அகோசரமுங் கோசரமும் ஆம் என வேதங்கூறினதை ஆசிரியர் கூறினதாகக்கொண்டு வினாவினது என்க. 6

இ - ம். வெளிப்படை.

அ - கை. முதற்சங்கையில் பிரமம் சுருதிக்கு அகோசரமாம் என்றதற்கு உத்தரங் கூறல்.

மற்றைமுப்பிரமாணத்தால் வஸ்துநிர்ணயங்கூடாதே
உற்றதோர்விடயம்பூத முபாயமன்றுதலாலே
குற்றமாங்குணவிசேடங் கூடாமலிருக்கையாலே
இத்ததுவாக்குக்கெட்டா தென்பதையறிவாய்நீயே.

இ - ள். பரப்பிரமமானது, பஞ்சேந்திரியங்களுக்கு விஷயமானசத்தம் பரிசம் ரூபம் ரசம் கந்தம் ஆகிய ஐந்தும், பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாயம் என்னும் பஞ்சபூதங்களும், உபமான வுபமேயங்களாகிய இரண்டும், அன்ற ஆகவான் பிரத்தியக்ஷம், அநுமானம், உபமானம் என்னும் மூன்று பிரமாணங்களாலும் பிரமசொரூப நிச்சயஞ்செய்தல் கூடாது இத்தன்மைத்தான பரப்பிரமம், குற்றமுள்ள குணவிசேஷங்களைப் பொருந்தாமல் இருத்தலாலே, சத்தரூபமாகிய வேதத்துக் கெட்டாது என்று நீ அறியக்கடவாய். எ-று.

இ - ம். பிரமம் அகோசரம் என்பதை உறுதிப்படுத்தும் நிமித்தம் ஆகமமுதலிய நான்கு பிரமாணங்களினாலும் அறியக்கூடாதது என அறிவித்தாம். 7

அ - கை. அச்சங்கையின் பிரமம் சுருதிக்குக் கோசரமாம் என்றதற்கு உத்தரம்.

வாக்கியந்தனக்கெட்டாத வஸ்துவென்றுரைத்தவேதம்
வாக்கியவிருத்தியாலவ் வஸ்துவைக்காட்டிற்றன்றோ

வாக்கியங்களிலேமான மாவதேதென்றாயாகில்
வாக்கியமிரண்டுமெய்யே மறைகள்பொய்யாநீகேளாய்.

இ - ள். வாக்குக்கு எட்டாத பொருளென்று சொன்ன வேதமானது மகாவாக்கிய விசாரத்தால் அப்பிரமப்பொருளைக் காட்டியது ; இவ்விரண்டு வாக்கியங்களில் பிரமாணமாவது யாது? என்று கேட்பாயாகில் இவ்விரண்டு வாக்கியமும் உண்மையே! வேதங்கள் அசத்தியம் உரையா, ஆகையால் அதை நீ கேட்பாய். எ-று.

அன்றே என்பது அசை.

இ - ம். வெளிப்படை. 8

அ - கை. பிரமம் சுருதி வாக்கியங்களுக்கு அகோசரமும் கோசரமும் ஆமெனக் கூறுதல்.

தன்பதியல்லாப்போக டமையல்லனல்லனென்றாள்
அன்பனைக்கேட்டநேர மவள்வெட்கிமௌனமானாள்
என்பதுபோலநீக்கி யிதன்றிதன்றெனச்சேடித்த
பின்பரப்பிரமந்தன்னைப் பேசாமற்பேசும்வேதம்.

இ - ள். தன் நாயகன் அல்லாதவர்களை இவன் அல்லன் இவன் அல்லன் எனக் கூறின தலைவி, நாயகனைக் காட்டிக் கேட்டபோது அத்தலைவியானவள் வெட்கமுற்றுப் பேசாதிருந்தாள் என்பது போல, இது அன்று இது அன்று என்று தள்ளிப் பின்பு சேஷித்து நின்ற பரப்பிரமவஸ்துவை வேதமானது சொல்லாமற் சொல்லும். எ-று.

இ - ம். சுருதி சத்தரூபத்தால் அறிவிக்காமல் அருத்தரூபத்தால் அறிவிக்கும் என்பதாம். 9

அ - கை. இரண்டாஞ் சங்கையில் பிரமம் மனத்திற்கெட்டும் எட்டாது என்பதற்கு உத்தரங் கூறுவான் தொடங்கி மனோற்பத்தியின் காரணங் கூறுகின்றார்.

முந்தியசங்கைதீர மொழிந்ததையறிந்துகொள்வாய்
பிந்தியசங்கைதீரப் பேசுமுத்தரநீகேளாய்
இந்தியங்களுக்கிராச னிதயமாமதினெண்ணங்கள்
புந்தியுமனமுமென்றே புறத்தகத்துலாவியாடும்.

இ-ள். முதற்சங்கை தீரும்படி சொன்னதைத் தெரிந்துகொள் வாயாக; இரண்டாஞ்சங்கை தீரும்படி சொல்லும் உத்தரத்தையும் நீகேட்பாய்; மனமுதலிய இந்திரியங்களுக்குத் தலைவன் ஞானமாம்; அதின் நினைவுகள் புத்தி எனவும் மனம் எனவும் புறம்பிலும் உள் ளிலும் சஞ்சரிக்கும். எ-று.

இ-ம். ஞானஸ்மரணமே மனமும் புத்தியுமாம் என்பதாம்.

இதுவுமது.

உன்முகம்போற்கண்ணாடிக் குள்ளொரு முகங்கண்டாற்போல்
சின்மயவடிவின்சாயை சித்துப்போற்புத்திதோன்றும்
நின்மலவிருத்தியந்த நிழல்வழியாயுலாவும்
தன்மநன்மகனேயித்தைத் தானன்றேஞானமென்பார்.

இ-ள். தர்மவடிவாகிய சற்புத்திரா! உன்னுடைய முகம்போல எதிரிட்ட கண்ணாடிக்குள்ளே ஓர்முகங் கண்டதுபோலச் சைதன்னிய ஸ்வரூபச்சாயையே அறிவைப்போலப் புத்தியில் பிரதி பலிக்கும்; நின்மல விருத்தியானது அச்சாயையின் மார்க்கமாகச் சஞ்சரிக்கும், இவ்விருத்தியை அன்றே அறிவென்று சத்துக்கள் சொல்லுவார் கள். எ-று.

ப-ம். அந்தக்கரணப் பிரதிபலனம் சிதாபாச னென்பார், "சித் துப்போற் புத்திதோன்றும்" எனவும், புத்தியில் தங்குஞ் சிற்சா யையே விருத்தியென்பார், 'நின்மலவிருத்தி' எனவும், அவ்விருத்தி சிதாபாசனுக்கு இடமாக விளங்குமென்பார் "அந்த நிழல்வழியாயுலா

வும்'' எனவும், லோகாந்த குந்தம்போலச் சிதாபாசாந்த விருத்தியே ஞானமென்பார், "இதைத் தானன்றோ ஞானமென்பார்'' எனவுங் கூறினர்.

இ-ம். விருத்திஞானமும் சிதாபாசனும் இத்தன்மையவெனக் கூறினதாம். 11

இதுவுமது.

உருக்கியாதாரநீர்நாநா வுருவங்களானாற்போல
விருத்திகள்கடபடாதி விடயமாய்ப்பரிணமிக்கும்
அருப்பலவிடயமெல்லா மாபாசன்றோற்றுவிக்கும்
இருட்டினில்விளக்குக்கண்ணு மில்லாமற்பொருள்காணுதே.

இ-ள். குகையில் வைத்துருக்கிய தாராரோனது பல் வடிவமா னது போல, அந்தக்கரண விருத்திகளானவை கடபட முதலிய ஆகா ரங்களாக வேறுபடும்; விடயங்க ளனைத்தையும் அரும்பல மென்னப் பட்ட சிதாபாசன் தெரிவிக்கும்; தீபமும் விழியும் இன்றி இருளிலி ருக்கும் வஸ்து தெரியமாட்டாது.

இ-ம். சிற்சாயையே சகத்தாகத் தோற்றுதலின், "விருத்தியே கடபடாதி விடயமாய்ப் பரிணமிக்கும்'' என்றார்.

இதுவுமது.

எரிகின்றவிளக்காற்கண்ணு விருட்பொருள்காணவேண்டும்
தெரிகின்றபரிதிகாணச் சென்றிடிற்கண்ணேபோதும்
விரிகின்றசகத்தைக்காண விருத்தியுப்பலமும்வேண்டும் [க்கே.
புரிகின்றவிருத்தியொன்றேபோதுமெய்ப் பொருள்காண்போர்

இ-ள். பிரகாசிக்கின்ற தீபத்தினாலும் விழியினாலும் இருட் டின்கண் உள்ள வஸ்துவைப் பார்க்கவேண்டும்; தெரியாநின்ற சூரிய

ணைப் பார்க்கச்சென்றால் நேத்திரமொன்றுமே போதும்; அவைபோலப் பரந்த உலகத்தைப்பார்க்க விருத்தியும் பலமும் வேண்டும்; உண்மையான பிரமவஸ்துவைத் தரிசிப்பவர்களுக்கு முன் சொல்லிய விருத்தியொன்றுமே போதும். எ-று.

ப-ம். விஷயாஞ்ஞானத்தைப் போக்குதற்கு விருத்தி ஞானமும், அதை அறிதற்குப் பலரூபமான சிதாபாசனும் வேண்டுமென்பார், "சகத்தைக்காண விருத்தியும் பலமும் வேண்டும்" ஆத்மாவைத் தரிசித்தற்கு விசாரரூபமான விருத்திஞானம் வேண்டுமென்பார், "விருத்தியொன்றே போதுமெய்ப்பொருள் காண்போர்க்கு" என்வுங் கூறினர்.

இ-ம். லோகாந்த குக்தம்போல ஆதாரமான விருத்தி ஞானமும் ஆதேயமான சிதாபாசனுமாகிய இவ்விரண்டி னிலக்கணமுங் கூறியுதாம்.

அ-கை. மனத்தின் உருவங் கூறல்.

விருத்தியும்பலமுங்கூடும் விகாரமேமனமென்பார்கள்
கருத்தெழும்விருத்திவேண்டுங்கணக்கினன் மனத்திற்கெட்டும்
இருத்தியபலமாமிந்த மனத்திற்கெட்டாதுகண்டாய்
அருத்தமிப்படியென்றைய மகன்றுந்தெளிந்திடாயே.

இ-ள். விருத்தியும் பலமுஞ் சேர்ந்த விகாரரூபமே மனம் என்று சத்துக்கள் சொல்லுவார்கள்; பகுத்தறியும் நினைவில் உண்டாகும் விசார ஞானமானது சித்தை அறிதற்கு ஒருதலையாக வேண்டுதலின், அவ்விருத்தி ரூபமான மனத்திற்குச் சித்து எட்டும்; வருத்துகின்ற விடயத்தை அறியும் பலரூபமான இம்மனத்திற்குச் சித்து எட்டாது, முன்சொல்லிய இரண்டிற்கும் பொருள் இவ்வண்ணமென்றறிந்து சந்தேக நீங்கி நீ தெளியக்கடவாய். எ-று.

சித்து சம்பந்தஞானம் விருத்தியும், சடசம்பந்த ஞானம் பலமும் எனக்கொள்க.

ப-ம். சித்சடரூபமனம் என்பார், "விருத்தியும் பலமுங் கூடும் விகாரமே மனம்" எனவும், சித்தம் சமானவிருத்தியினால் சித்தை அறியலாமென்பார், "விருத்திவெண்டுங் கணத்தினான் மனதிற்கெட்டும்" எனவும், சடாம்சமான மனத்தினாற் சித்தை யறியக் கூடா தென்பார், "பலமாயித்த மனதிற் கெட்டாது" எனவுங் கூறினர்.

இ-ம். அகமுகமுள்ள மனதிற்கு பிரமம் அறியப்படும் எனவும், பகிர்முகமுள்ள மனதிற்கு அறியப்படாதெனவுந் தெரிவித்ததாம். 14

அ-கை. முற்கூறிய கடாவிடைகளால் கோசரா கோசரம் இன்றி சுத்தப் பிரமமான சுவானுபூதியே தானென் றறிந்து அதில்உதிக் குமனதை அதிற் கரைக்கும் பொருட்டு ஒரு சங்கை வினாதல்.

வஞ்சகமில் பரமார்த்த குருவேசொன்ன வழிகளறிந்தே
னினியோர் வசனங்கேளீர், சஞ்சலமற் றகண்டபூ ரணமாய்ச்
சித்தந் ததாகார மாவதன்றோ சமாதியோகம், உஞ்சலையொத்
தலைவதுதன் சுபாவமாகி யொருகணத்திற் பலவுலகா வுதிக்கு
மிந்த, நெஞ்சகம்வஸ் துவிலசையா நிவாததீபநிலையடைவதெப்
படியோ நீர்சொல்வீரே.

இ-ள். வஞ்சனை யின்றி யதார்த்தமாக விளங்கிய ஆசாரியரே! தேவரீ ரனுக்கிரகித்த மார்க்கங்களைத் தெரிந்துகொண்டேன்; இன்னு மொரு விண்ணப்பங் கேட்கவேண்டும்; மனமானது சலன மின்றி அகண்ட பரிபூரண ஸ்வரூபமாய்த் தன்மய மாவதன்றோ நிஷ்டையி லுதிக்கு ஞானம்? ஊசலைப்போலச் சஞ்சலப்படுவது தன தியல்பாய் ஒருக்ஷணத்தில் நாநாவுலகமாய்த் தோன்றுகின்ற இந்த மனம்பிரமத் தில் சலனமின்றிக் காற்றில்லாத விளக்கைப்போல நிலை பெறுவது எவ்வண்ணம்? தேவரீ ரருள்செய்வீராக. எ-று.

இ-ம். வெளிப்படை. 15

அ-கை. மனத்தின் முக்குணமும் அவைகளால் உண்டாகும் பயனுங் கூறல்.

கருதுமனே குணமூன்று மூன்றிலொன்று கதித்தெழுந் தான் மற்றிரண்டுங் கரந்துநிற்கும், தருமமிகு சத்துவமே லானபோது சன்மார்க்க மானதெய்வ சம்பத்துண்டாம், மருவுமிரா சதமாகி லுலகதேவ வாதனையாஞ் சாத்திரவா தனையுமாகும், அருமகனே தாமதமே லானபோதி லசுரசம்பத்துண் டாகு மறிந்துகொள்ளே.

இ-ள். நினைக்கின்ற மனத்திற்குத் திரிகுணமாம்; அம்மூன்று குணங்களில் ஒன்று மிகுந்தெழுமாயின் மற்ற இரண்டு குணங்களும் மறைந்திருக்கும்; சற்கருமத்திற் கேதுவாகிய உயர்ந்த சத்துவ குணமானது மிகுந்தபோது சன்மார்க்கமாகிய தெய்வ சம்பத்துண்டாகும்; பொருந்திய ரசோகுண மிகுமாயின் லோகவாதனையும் தேகவாதனையும் சாஸ்திர வாதனையும் உண்டாகும்; தமோகுண மிகுந்த போதில் அசுரச் செல்வமுண்டாகும்; தெரிந்துகொள்வாயாக. எ-று. 16

அ-கை. சித்தம் சமானசத்துவஞ் சேடிக்கின் மனஞ்சித்தில் அசைவின்றி நிற்கும் எனல்.

மனதுசத் துவசொரூப மற்றிரண்டும்வந்து கலந்தனவற் றைமாற்றி னற்போம், தனதுசன் மார்க்கம்விடா திருந்தபோது தாமதமு மிராசதமும் சமிக்கும் பின்னைக், கனபரிணா மஞ் சலனம் போம்போனக்கா ற் களங்கமற்று நின்றவா காயம்போலும், நினதுளமப் படியாமப் பிரமத்தொன்றாய் நிருவிகற்ப சமாதியிலே நிற்குந்தானே.

இ-ள். மனமானது சத்துவ வடிவமாம்; மற்ற ரசோதமோ குணங்களாகிய இரண்டும் வந்து சேர்ந்தவைகளாம்; அவ்விரண்டு

குணங்களையும் நீக்கிடின் நீங்கும்; தனது சன்மார்க்கமான சத்துவகுண த்தை விடாமலிருந்தபோது தமோகுணமும் ரசோகுணமு நசிக்கும்; பின்பு க்ஷணமான திரிசியமாதலும் அதிற் சலனமடைதலும் நீங்கும்; அவை நீங்கினால் நிர்மலமாயிருந்த ஆகாயத்தைப் போலும் உன்மனை யானது அவ்வண்ணமாம்; அப்பிரம ஸ்வரூபத்தில் ஏகமாய் நிருவிகற்ப சமாதியிலே நிலைபெற்றிருக்கும். எ-று. 17

இதுவுமது.

களங்கமற்றகண்ணாடி தன்முன்வேறோர்களங்கமற்றகண்
ணாடி காட்டும்போது, விளங்கியதன்மயமாகி யபேதமாகிவிகற்
பமின்றி நிருவிகற்ப மானாற்போல, அளந்தறியப் படாவிபுவா
ய்ச் சத்தாய்ச்சித்தா யாநந்தமாம்பிரமத் தைக்கியமான. உளக்
தெளிந்த படியிருந்த வுலகமெங்கே யுலைவெங்கே யென்றுசங்
கையொழித்திடாயே.

இ-ள். நிர்மலமாகிய கண்ணாடிமுன் மற்றொரு நிர்மலமாகிய கண்ணாடியைக் காண்பிக்கும்போது பிரகாசியாநின்ற தனது ஸ்வரூப மாய்ப் பேதமிறந்ததாகி வேறுபாடின்று ஒன்றானதுபோல, அளவிட் டறியக்கூடாத வியாபகமாகியும் சத்தாகியும் சித்தாகியும் ஆநந்தமாகி யும் விளங்குகின்ற பிரமஸ்வரூபத்தில் கரைந்த மனமானது பிரமமா கத் தெளிந்தவண்ணம் விளங்கிநின்றால் திரிசியமான சகத்து இன்று; அதைப்பற்றிய சஞ்சலம் இன்று என்று சங்கையை நீக்குவாய். எ-று.

இ-ம். சித்தம் சமானமனஞ் சித்தாகவே விளங்கின் சகமாத லும் அதிற்சலனம் அடைதலும் அதற்கு இன்றென அறிவித்ததாம்.

அ-கை. முற்கூறிய உத்தரத்தினால் சித்தம் சமானமனஞ் சித்தே ஆயிற்று என அறிந்து, மேற்சடாம்சமான மனமும் அதன்தொழி லும் எவ்விதமாயின வென்பதை அறியும் நிமித்தம் மனஞ் சித் தில் இறக்கில் சீவன் முத்தர் எங்ஙனஞ் சஞ்சரிப்பாரென்ன.

ஏகமாய் மனமிறந்தாற் சீவன்முத்த ரிருக்கு மட்டும்பிரா ரத்த மெதினு லுண்பார், போகமா னதுபுசித்துத் தொலேப்ப தன்றோ புசித்தாலு மனந்தானும் போனதன்றே, சோகமாமன மிறந்தாற் போகமில்லே தோன்றுமெனின் முத்தரென்றுசொ லக்கூடாதே, மோகமாமிதுதெளியக் குருவேயன்றாய் மொழிந் தருள வேண்டுமென்றான் முழுதுமானேன்.

இ - ள். ஆசாரியரே ! பிரமஸ்வரூபமாகி மனம் நசிக்கின் சீவன் முத்தர்கள் இருக்குமளவும் பிராரத்த கன்மங்களே யாதினு லனுபவிப் பார்கள் ? போகங்களே அனுபவித்து நீக்கவேண்டுமன்றோ ? அனுப விக்கின் மனமிறந்த தன்றே ? துன்பமாகிய மனமிறக்கின் போகானு பவமில்லே ? மனமுதிக்குமாயின் சீவன் முத்தரென்று உரைத்தல் கூடாதே ; மயக்கமான இச்சங்கை தெளியுமாறு யாவுமான சீடன் தெளிவாகச் சொல்லவேண்டுமென்று கேட்டான். எ-று.

இ - ம். வெளிப்படை. 19

அ - கை. அச்சங்கைக்கு உத்தரங் கூறுவான் தொடங்கி மனோ நாசம் இருவிதமாகக் கூறுகின்றார்.

மனநாசஞ் சொரூபமென்று மரூபமென்றும் வகுத்துரை ப்பா ரிருவகையாய்வருமிவற்றில், வினவாத சீவன்முத்தரிடத் திலொன்றும்விதேகமுத்தரிடத்திலொன்றுமேவுமைந்தா, தன தான சத்துவமாய் மனஞ்சேடித்துத் தாமதம்ரா சதநசித்தல் சொரூபநாசம், அனகாசத் துவந்தானுமிலிங்கதேக மடங்கும் போ தடங்குவதே யரூபநாசம்

இ - ள். மாணுக்கனே ! மனோ நாசமானது உருவநாச மெனவும் அருவநாச மெனவும் வகுத்துச் சொல்வார்கள் ; இரண்டு விதமாக வருகின்றவைகளில் சங்கையறத் தெளிந்த சீவன் முத்தர்க ளிடத்து

உருவநாச மொன்றும், விதேக முத்தர்களிடத்தில் அருவ நாசமொன்றும், உண்டாகும்; தனது சுபாவமான சத்துவகுண மாக மனம் சேவித்து, தமோ ரசோகுணங்கள் தாமே நசிக்கும், அப்படி நசித்தலே உருவ நாசமாம்; அச்சத்துவகுணமும் சூக்கும சரீர நசிக்கும்போது ஒக்க நசிக்கும், அப்படி நசித்தலே அருவ நாசமாம். எ-று.

இ-ம். மனம் உருவ நாசமாயின் சீவன் முத்தியும், அருவநாசமாயின் விதேகமுத்தியும் ஆமெனக் கூறினதாம். 20

அ-கை. உருவம் இன்றி யருவமாய் அறிவுருவமான மனதினால் யாவும் அனுபவிக்கலாம் எனல்.

சுத்தமாட் சத்துவமே யுண்மையாகுந் துகளிருபோன் ஞன்மமென் சொல்லும்போம்போம், வர்த்தமானத்தில்வந்த வுணவையுண்பார் வருவதும் போவதுநினைந்து மகிழார்வாடார், சுத்தராமகந்தையைவிட் டகர்த்தராகிக் காணவிருத்திக ளவத்தை காண்பாராகி, முத்தராயிருக்கலுமாம் புசிப்புங்கூடு முட்டிலையென் றறிந்துசங்கை மோசிப்பாயே.

இ-ள். களங்கமற்ற சத்துவகுணமே தத்துவமாம்; ரசோதமோ குணங்கள் நீங்கினால் மனம் என்று உரைப்பது நீங்கும்; நிகழ்காலத்தில் கிடைத்த உண்டியைப் புசிப்பார்கள்; எதிர்காலத்துவரும் பொருளையும் கருதி மகிழார்கள்; செல்காலத்தில் போனபொருளையும் கருதி வாடார்கள்; யான் எனது என்னு மகந்தையை நீக்கி, அகர்த்தராய் அந்தக்கரண விருத்திகளையும் அவஸ்தாத் திரயங்களையும் பார்ப்பவர்களாகிச் சீவன் முத்தருமாயிருக்கலுமாம்; எல்லாவற்றையு மனுபவிக்கவுங் கூடும்; தடையில்லை யென்றறிந்து சங்கையை நீக்குவாய். எ-று.

இ-ம். சத்துவமான மனதினால் எவற்றைப் புசிக்கினும் அவைகளால் வருஞ் சுகதுக்கம் இவர்க்கில்லை என்பதாம். 21

அ - கை. மனஞ் சத்துவமாக விவகரிக்கின் சமாதி எங்ஙனங்கூடும் என்ற வினாவிற்கு உத்தரம்.

விவகார வேளையெலாஞ் சமாதியென்றால் விகற்பமன்றே மனமலைந்து விடாதோவிட்டால், அவதான நழுவுமன்றோ வென்றுயாகி லதற்கொருதிட் டாந்தங்கே ளாசைகொண்டு, நவமாகப் பரபுருடன் றன்னைக்கூடி நயந்துசுக மனுபவித்த நாரி நெஞ்சம், தவமான மனைத்தொழில்கள் செய்யும்போதுந் தழுவியனுபவித்த சுகந்தனைவிடாதே.

இ - ள். விவகரிக்குங் காலங்களனைத்தும் சமாதி என்றுசொன்னால் அவ்விவகாரந் திரிசிய வேறுபாட்டைத் தோற்றுவிக்கும் அன்றோ ? அங்ஙனம் ஆயின் மனஞ் சஞ்சலத்தை அடையாதோ ? அங்ஙனஞ் சஞ்சலத்தை யடையுமாயின் ஞான கழுவுமன்றோ ? என்று கேட்பாயாகில், அத் தாட்டார்த்தத்திற்கு யாம் ஒரு திட்டாந்தஞ் சொல்லுவோம் கேட்பாய் : காமமுற்று நூதனமான சோரபுருடனை இன்புற்றுப் புணர்ந்து விடயானந்தத்தை அனுபவித்த பெண்ணின்மனமானது தவத்துக்குரிய இல்வாழ்க்கைக்குத் தக்க செயல்களைச் செய்யுங்காலத்தும் முன்கூடியனுபவித்த விடயாநந்தத்தை நீங்காது.

நெஞ்சஞ் சுகந்தனை விடாதென்பதைச் சுகம் நெஞ்சந்தனை விடாதென்பொருள்கொள்க மனத்தை விழுங்குவது சுகமாதலின்.

இ - ம். விவகாரங்களைச் சத்துவத்தின் உதயமான சுகபோதம் விழுங்கிக்கோடலின் அவ்விவகாரஞ் சமாதியே ஆம் என்பதாம். 22

அ - கை. விவகாரங்களில் அகம்பாவம் நீங்குதற்பொருட்டுச் சிற்சுகமான சீவன்முத்தாது சத்துவமான மனதிற்கு அகங்கூடுமோ ? என்ற வினாவிற்கு உத்தரமாக விரதத்திரயங் கூறல்.

தேகத்தனலனாகி யகர்த்தனாகிச் சிவனின்றிப் பிரமமாய்த் தெளிந்தமுத்தன், போகத்தை யுண்பனென்றாற் கர்த்தாவாமே பூரணமா மகர்த்தனுக்குப் போகமுண்டோ, சோகத்தை யறுத்தருளுங் குருவேயிந்தத் தகளறுக்க வேண்டுமென்று சொன்னாயாகில், மாகர்த்தன் மாபோகி மாத்தியாகி வகைமூன்றா யவரிருக்கு மகிமை கேளாய்.

இ-ள். துன்பத்தைக் கெடுத்து இன்பத்தைக் கொடுக்கின்ற ஆசாரியரே! உடலை நான் என்பதல்லாதவனாய் அகர்த்தாவாய்ச் சீவேவ்வாத்துவம் இல்லாமல் கூடஸ்த பிரம ஐக்கியமாகித் தெளிந்த சீவன் முத்தனானவன் விடயபோகங்களைப் புசிப்பானென்றால் யான் என்பவனாமே பரிபூரணமான அகர்த்தாவுக்கு விடயபோக முளவோ! இக்குற்றத்தை நீக்கவேண்டுமென்று கேட்பாயாகில், மாகர்த்தனும் மாபோகியும் மாத்தியாகியும் ஆகிய மூன்றுவிதமாக அச்சீவன் முத்தர்கள் இருக்கின்ற பெருமையைக் கேட்பாய். எ-று.

இ-ம். கர்த்தத்துவம் இன்றி அகர்த்தத்துவமான சீவன்முத்தருக்குப் போகங் கூடுந்தன்மை எங்ஙனம் என்ற வினாவிற்கு உத்தரங் கூறத் தொடங்கினதாம். 23

அ-கை. மாகர்த்தன் இலக்கணங் கூறல்.

செய்கையுஞ் செய்விக்கையுமற் றிருக்குங் காந்தச் சிலைமுன் னிரும்புகள்சேட் டிக்குமாபோல், செய்கையுஞ் செய்விக்கையுமற் றிருக்குமென்முன் சடமான வுலகமெல்லாஞ் சேட்டைசெய்யும், மெய்கலந்த விந்திரிய விகாரரூப விவகார விருத்திக்கு விருத்திதானும், மெய்கலந்த சமாதிக்குஞ் சாக்ஷியேநான் வெயில்போலென் றுரைத்தவனே விபுமாகர்த்தன்.

இ - ள். தொழில் செய்தலும் தொழில் செய்வித்தலும் இல்லா திருக்கின்ற காந்தக்கல்லின்முன் இரும்புகள் அசையுமாறு போலப் பிரேரகப் பிரேரியங்கள் இல்லாதிருக்கின்ற என்முன் சடமாய் உள்ள சகங்கள் அனைத்தும் அசைந்துகொண்டிருக்கும்; தேகத்திற் சேர்ந்த ஞானேந்திரிய கன்மேந்திரிய பேதரூபங்களான பிரேரகம் பிரேரியமான விருத்திகளுக்கும் அவ்விருத்திகள் அடங்கித் தன்மயமான உண்மை கலந்திருக்கும் ஸ்வரூபசமாதிக்கும் சூரியகிரணத்தைப்போலச் சர்வசாக்ஷியே நானென்று ஸ்திரமானவனே சர்வவியாபகமாகிய மாகர்த்தனும். எ-று.

இ - ம். அத்துவிதமான எனது சந்நிதியில் நடக்குந் தேகமுதலிய விவகாரங்களுக்கும் இவைகள் இறந்து நின்ற ஞானசமாதிக்கும் சாக்ஷி நானே என்று அவைகளோடுங் கூடாமல் கூடி யிருப்பவனே மாகர்த்தன் என்பதாம். 24

அ - கை. மாபோகி மாத்தியாகிகளின் இலக்கணங் கூறல்.

அறுசுவையின் குணங்குற்ற மசுத்தஞ்சுத்த மபத்தியம்
பத் தியமெனவு ணுய்ந்திடாமல், பொறுமையுடன் கிட்டின
தைக் காட்டுத் தீப்போற் போகங்கள் புசிப்பவன்மா போகியா
கும், சிறிதுவலி துகடனதன், னியங்கணன்மை தீமைகள்சே
ரினும்படிகச் செயல்போற் சித்தம், வெறிதிருக்கு மவனே மா
த்தியாகி யாவன் விரதமிம்மூன் றுள்ளவரே விடுள்ளோரே.

இ - ள். அறுவகை ரசங்களின் குணதுணங்களைச் சுத்தாசுத்தங்கள் பத்தியாபத்தியங்கள் என உணவை ஆராய்ந்து பாராமல் சாந்தத்தோடும் நேரிட்டதைக் காட்டுத்தீப்போலப் போகங்களை அனுபவிப்பவன் மாபோகியாம்; அற்பமும் மகத்துமானவைகளும், தன்னுடையதும் பிறருடையது மானவைகளும் புண்ணிய பாவங்களும் ஆகிய இவைகள் அடைந்தாலும்படிகத்தின் தன்மையைப்போலச் சித்தமானது பற்றின்றி யிற்பவ

னே மாத்திரயோகியாவான் ; இம்மூன்றுவிதங்களும் உடையவர்களே முத்தியையுடைய சீவன் முத்தர்கள். எ-று.

இ - ம். உணவின் ரசாரசங்களைப் பாராமல் தனது ரசமாக யாவையும் புசிப்பவனே மாபோகி எனவும், தன்னிடத்தில் தனக்கு அன்னியமானவைகளை யாதுபற்றினுந் தான் பற்றின்றிச் சுயமா விளங்குகின்றவனே மாத்தியாகி எனவுங் கூறினதாம். 25

அ - கை. சீவன்முத்தன் விவகரித்துக்கொண்டிருக்க அஃதின்றிக் கிருத கிருத்தியனானது எங்ஙனம்? எங்ஙனம் என வினாதல்.

மெய்யுங்கொண்டுபிராரத்தந் தருவிதிவழிநின்றிடவும்
உய்யுங்கன்மிகளுக்கனு குணமாவுறுதொழில்செய்திடவும்
செய்யுஞ்செய்கைமுடிந்தனனென் றுரைசெப்புவதெப்படியோ
கையுந்துன்பமகற்றியகுருவே நலமாமருள்வீரே.

இ - ள். வருந்தும் பவத்துன்பத்தை நீக்கிய ஆசாரியரே! தேகத்தைத் தாங்கிக்கொண்டு பிராரத்த கன்மங் கொடுக்கின்ற நியதிமார்க்கத்தில் நிற்கவும், முமூட்சுக்களுக்கு அனுகூலமாகப் பொருந்திய சிரவணாதிகளைச் செய்துகொண் டிருக்கவும், கிருத கிருத்தியனென்று சொல்லுவது எவ்வண்ணம்? நன்றாகச் சொல்வீர். எ-று.

இ - ம். வெளிப்படை. 26

அ - கை. மேல்வினாவிற்கு உத்தரங் கூறல்.

ஆடவர்செய்தொழின் மூவகையாகு மவித்தைவசத்துறுகாலீ
டணைமமதை யகந்தையுளார்க்கே யிகபரவிவகாரம்
வீடணுகுவமெனு மிச்சையுளார்க்கே வித்தைபடிப்பவெலாம்
பாடன்மிகுந்தொழிலாற் பலனுண்டோ பரிபூரணமானால்.

இ - ள். புருடர்கள் செய்கின்ற கிரியையானது மூன்றுவிதமாம் அஞ்ஞான வசமாய்ச் செல்கின்ற காலத்தினால் ஈடணாத்திரயமும் மம

தையும் அகந்தையும் உள்ளவர்களுக்கே இகலோக பரலோக விவகாரங்களுளவாம்; முமூட்சுகளுக்குச் சடசித்தைப் பகுத்தறியுஞ் சாஸ்திரங்களனைத்தையும் அப்பியாசித்த லுளவாம்; பரிபூரணமானவர்களுக்கு மிகுந்த சாஸ்திராப்பியாசத்தினுல் பயனுளதோ? எ-று.

இ-ம். அஞ்ஞான திசையில் உலக விவகாரங்களும் முமூட்சு திசையில் சிரவணுதி விவகாரங்களும் உளவாம்; முத்தித்திசையில் பல வியாப்தியின்றி விர்த்தியாப்தியாக விவகாரங்களைச் செய்தலின் அவையுஞ் செய்துஞ் செய்திலர் என்பதாம். 27

அ-கை. சீவன் முத்தர்க்கு உலக விவகாரங்கள் இலவாயினும் சிரவணுதி விவகாரங்கள் வேண்டாவோ? என வினுதல்.

குரவர்சிகாமணியே நீர்கேளிர் கூறினவழி யொக்கும், பரமுடனிகமு மிழந்தவரன்றோ பழகுவர் மெய்ஞ்ஞானம், விரவு முயற்சியின் மீண்டவரதையினி வேண்டுவரோ வேண்டார், சிரவணமன னுதிகள் வேண்டாவோ சித்த முறைத்திடவே.

இ-ள். தேசிக சிரோரத்தினமே! கேட்டருள்வீர்; தேவரீர் அருளிச்செய்த முறை சரியே; பரலோக இச்சையோடும் இகலோக இச்சையையும் நீங்கின முமூட்சுக்கள் அன்றோ உண்மைஞானத்தை அப்பியாசிப்பார்கள்? கலக்கின்ற முயற்சியில் நின்று நீங்கினவர்கள் அவ்விகலோக பரலோக இச்சையை விரும்புவார்களோ? விரும்பார்கள்; ஆயினும், மனம் நிலைபெறும்பொருட்டுச் சிரவண மனனமுதலிய ஐந்தும் வேண்டாவோ? எ-று.

இ-ம். வெளிப்படை. 28

அ-கை. மேல்வினுவிற்கு உத்தரங் கூறல்.

கிளர்மகனேகேள் தத்துவமறியார்கேட்டல்செயக்கடனே
தளர்வறுசிந்தித்தலின்முயல்வார்சிலர்சந்தேகங்களுளார்

தெளிதலினிற்பார்விபரீதப்பேய்திராவா தனையோர்
வெளியுருவாயறிவாய்நிறைவாயினர்வேண்டுவதொன் றுண்டோ

இ - ள். விளங்காநின்ற புத்திரனே! கேட்கக் கடவாய்; உண்மை ஞானத்தைத் தெரியாதவர்கள் சிரவணஞ் செய்ய வேண்டியது கடமையாம், கேட்ட வஸ்துநிச்சயத்தில் சந்தேகமுள்ளவர்களாகிய சிலர் தளர்வற்றிருக்கும்படி மனனஞ் செய்தலின் முயற்சி செய்வார்கள், ஒன்றை ஒன்றாக அறியும் நீங்காதவாதனையை உடையவர்கள் நிதித்தியாசனத்தைக்கொண்டு சமாதியிலிருப்பார்கள்; பரமாகாசமாய் அபரோட்சஞானமாய்ப் பரிபூரணமானவர்கள் விரும்புவதொன்றுளதோ; எ-று.

இ - ம். கேட்டல்முதலிய மூன்று விவகாரங்களும் அஞ்ஞான முதலிய மூன்றும் உள்ளமட்டும் வேண்டுமேயன்றி மேல் வேண்டப் படுவன அல்ல என்றதாம். 29

அ - கை. விவகார நீங்கில் சீவன் முத்தர்க்கு எங்ஙனம் அகம்பாவம் உண்டாதல் கூடும்? என வினாதல்.

ஐயாகேளீர்தத்துவஞானியு மஞ்ஞானிகள்போலச்
செய்யாநின்றேன் கண்டேனுண்டேன் சென்றேனெனலாமோ
பொய்யாம்விபரீதங்க ளவர்க்குப்போயின வென்றீரே
மெய்யாம்பிரமவிசார மிதென்றே வெளியாயுரையீரே.

இ - ள். எனதாசிரியரே! கேட்டருள்வீர்; மெய்யுணர்வுடைய சீவன்முத்தனும் அஞ்ஞானிகளைப் போல இதைச் செய்கிறேன், இதைப்பார்த்தேன், இதைப்புசித்தேன், இங்ஙனம் சென்றேன் என்று சொல்லலாமா? அச்சீவன் முத்தர்களுக்கு அசத்தியமான பேதபாவனைகள் நீங்கினவென் றருளினீரே, தத்துவமான பிரம விசாரமானது இஃதன்றே? நன்றாகத் தெரியும்படி சொல்வீர் எ-று.

இ - ம். சீவன் முத்தர் அஞ்ஞானிகளைப்போல விவகரிக்கின் அவர்களுக்கு விபரீதம் எங்ஙனம் நீங்கிற்று ? என வினவினதாம். 21

அ - கை. மேல்வினவிற்கு உத்தரங் கூறல்.

ஓய்ந்தகனவிற்கண்ட பழங்கதை யோதுவன்வாதனையால்
ஆய்ந்தறிவுற்றவனப்படி செப்புவனு பாசனுமாகான்
மாய்ந்ததனுடல்வேமளவும்விண்ணவன்மனிதனெனப்படுவான்
வீழ்ந்தசிதாபாசன் போமளவும் விவகாரந்தொடரும்.

இ - ள். இந்திரியங்களொழிந்த சொப்பனத்தில் கண்டபழங்கதையை வாசனையால் சாக்கிரத்தில் ஒருவன் சொல்லுவன்; வேதமுடிவானு மகாவாக்கியார்த்தத்தை ஆராய்ந்து தன்னையறிந்த சீவன்முத்தன் அத்தன்மையாகவே பூர்வ அஞ்ஞான வாசனையாய் இதைச் செய்கிறேன் இதைப் பார்த்தேன், இதைப் புசித்தேன், இங்ஙனஞ் சென்றேன் என்று சொல்லுவான் ; அப்படிச் சொல்லுவனாயினும் சிதாபாசனுவாகான் ; தேவனாயினேன் தேவதத்துவ மடைவோமென்று அக்கினியிற் பிரவேசமாய் மாய்ந்த தன் தேகம் வெந்து நீறுகுமளவும் மனிதனென்று சொல்லப்படுவான் ; சித்துருவமாக நசித்த சிதாபாசன் விதேகமுத்தியை அடையுமளவும் விவகாரந் தொடர்ந்துவரும். எ-று.

அரசனாயுள்ளோன், நித்திரா மோகத்தாற் சொப்பனத்தில் பிட்சையேற்பவனாகத் தன்னைக்கண்டு விழித்தபின், அம்மோகம் நீங்கி அரசனா யிருந்துகொண்டு, முன்னே சொப்பனத்திற்கண்ட வாசனையால் தன்னைப் பிட்சகனாகச் சொல்லினும் உண்மையாகத் தான் பிட்சகனென்பது அவனுக்கு உள்ளே இல்லாமைபோல, ஞானியும் பூர்வ வாசனையால் சிதாபாசனாகத் தன்னை வியவகாரத்திற் சொல்லினும் அவனுள்ளே அகங்காரக் கிரந்தியின்மையின் அவன் சிதாபாசனல்லன்

தான் தேவனாக வேண்டுமென்று அக்கினியிற் புக்கிறந்தோன் உடனே தேவனானாலும் அவன்தேகம் தகிக்குமளவும் மநுடனாக அந்நி யரால் எப்படி வியவகரிப் படுவனோ அப்படித் தத்துவ ஞானத்தால் ஞானியும் உடனே பிரமமானாலும் பிராரத்த தேக தகிக்கு மளவும் அந்நியருடைய திருஷ்டிக்குச் சிதாபாசனாக வியவகரிக்கப்படுவன்; அவ் வியவகாரம் விதேக கைவல்ய மளவுந் தொடரா நிற்கு மென்பது கருத்து.

இ-ம். சொப்பனத்தில் கண்ட கற்பிதத்தைச் சாக்கிரத்தில் சொல்வதுபோல அஞ்ஞான திசையில் கற்பிதமாயுள்ள உலக விவகா ரத்தை ஞானதிசையில் சொல்வதேயன்றி உண்மை அன்றெனினும் அவை விதேகமுத்தி பரியந்தந் தொடரும் என்பதாம். 31

அ-கை. சகத்விவகார நீங்கச் சமாதிசெய்யின் அச்செயலும் ஒரு விவகாரம் ஆதலின் அவன் எங்ஙனம் நிர்விவகாரியாவான்? எனல்.

ஆனாலையா குருவே காண்பதசத்திய மென்றாலும்
நானாவிவகாரந் துயரலவோ ஞான சுகந்தருமோ
போனாலன்று நன்றாநிட்டை புரிந்திடல் வேண்டாவோ
தானாநிட்டை புரிந்தாற்செய்கை தவிர்ந்தவ னெப்படியோ.

இ-ள். அப்படி வியவகாரம் விதேககைவல்ய மட்டுந் தொடரு மானால், ஐயா ஆசிரியரே! திரிசியம் பொய்யாயினும், அதைப் பற் றிய பலதொழில்கள் துன்பத்தைத் தருபவைக ளல்லவா? சிதாநந் தத்தைக் கொடுக்குமா? அத்தொழில் நீங்கினால் அல்லவா நன்மை யாம்? அவை நீங்கும்பொருட்டுச் சமாதிசெய்யவேண்டாவோ? தன் மயமாகுஞ் சமாதிசெய்தால் எவ்விதம் தொழில் விட்டவன். எ-று.

இ-ம். வெளிப்படை, 32

அ-கை. மேல்வினாவிற்கு உத்தரங் கூறல்.

தெரிதருமகனேயாரம் பத்தொடுதீரும்விவகாரம்
உரியசமாதியும்விவகாரங்களுமுள்ளத்தொழிலன்றோ [டோ
துரியபரம்பொருளானவர் வேறொருதொழில் செய்வதுமுண்
அரியசமாதிகள்பழகுவ னேலவனாரூடனுமன்றே.

இ - ள். உண்மையை அறிகின்ற புத்திரா ! தனக்குரிய நிட்டையும் சகத்தொழில்களும் மனோ விவகாரங்களாதலால், பிராரத்த கர்மத்துடனே அத்தொழில்களும் சிரவணாதிகளால் தீரும்; துரியமான பிரமவஸ்துவானவர்கள் மற்றொரு கிரியையைச் செய்வதும் உளதோ? அருமையான ஞான நிட்டைகளை அப்பியாசிப்பானாகில் அவ்வப்பியாசி அனுபவியல்லன். எ-று.

சகத்விவகாரஞ் சமாதியினுஞ் சமாதிவிவகாரஞ் சாக்ஷாத் காரத்தினும் நீங்குமெனக் கொள்க.

இ- ம். சித்து விவகாரமான சமாதியும் அப்பியாசிக்கேயன்றி ஆரூடனுக்கு இன்று என்பதாம். 33

அ - கை. ஆரூடர்களிலுஞ் சிலர் சமாதி முதலியவற்றைச்செய்துஎன்னை? என வினாதலுக்கு உத்தரம்.

உத்தமகுருவேயாரூ டருமாயொருதொழிலற்றவருள்
சித்தமடங்குதியானாதிகள் சிலர்செய்குவதென்னென்றால்
இத்தலமருவுபிராரத்தப் பிறிவெப்படியப்படியே
முத்தரும்வெகுவிதமாகுவரென்பது முன்னேசொன்னேனே.

இ - ள். மேன்மைதங்கிய தேசிகரே ! சுவானுபவம் உள்ளவர்களுமாய், ஒரு கிரியையும் இல்லாதவர்களுக்குள் மனமடங்குகின்ற சமாதிமுதலியவைகளைச் சிலர் செய்வது என்னென்று கேட்பாயாகில், இப்பூமியிற் பொருந்தும் பிராரத்த கன்மப் பகுப்பு எவ்விதமோ அவ்விதமேயாம்; சீவன் முத்தரும் நானாவிதமா யிருப்பார்களென்பதை முந்திய தத்துவ

விளக்கப் படலத்தில் (பேதகன்மத்தால்வந்த) என்னும் 90-வது பாட்டி
ல் சொன்னேன். எ-று.

இ - ம். ஆரூடன் தொழில் பிராரத்த கன்மமென அறிக என்பதாம். 34

இதுவுமது.

நல்லவினைகேளுலகுபகார ஞானிகள்விவகாரம்
அல்லதுவேறொருபெறுபேறு மில்லையதனாற்பிணியுமில்லை
வல்லசிருட்டி முதற்பல தொழிலால்வருபுண்ணியபாவம்
எல்லவருக்குமனுக்கிரகஞ் செயுமீசனடைந்திலனே.

இ - ள். நல்ல மாணாக்கனே! கேட்பாய், ஞானவான்கள் செய் தொழில் லோகோபகார நிமித்தமேயன்றி, அதனால் தாங்கள் வேறே அடையக்கடவதாய பயன் ஒன்றும் இல்லை; அக்கிரியையினால் துன்பமும் இல்லை; அஃதெங்ஙனமெனின், வல்லமையான சிருட்டியாதிநானாவித கிருத்தியங்களினால் வாராநின்ற தருமா தருமத்தை யாவருக்கும் அனுக்கிரகஞ் செய்கின்ற ஈசன் அடைகிலன். எ-று.

இ - ம். ஆரூடன் செய்யுந் தொழில் ஈசனைப்போல் உலகோபகார நிமித்தமே யன்றித் தன்னிமித்தம் அன்று என்பதாம். 35

அ - கை. "வஞ்சகம் இல்" என்ற செய்யுள் முதல் இதுகாறுஞ் சித்தில் உதித்தமனம் சலனமின்றிச் சித்தாக விளங்குகிறதென்பதைவிளக்கி, இனிச்சித்து வியாபகத்தை விளக்கும் பொருட்டு அம்மனமுள்ள ஞானவான் ஈசனுக்கு ஒப்பாவான் என்ற வினாவுக்கு உத்தரம் கூறல்.

ஈசனுமாயருவாயுருவாகி யெழுந்தருளுங்குருவே
ஈசனுஞானியுமொப்பென்றீரே யெப்படியொப்பென்றால்
ஈசனுஞானியுமமதை யகந்தையிகந்ததினாலொப்பாம்
ஈசனுமாப்பலசீவரு மாமூலக்கெல்லாமினனுமே.

இ-ள். நிஷ்களமாய் மும்மூர்த்தியுமாய் மானிட வடிவுமாய் எழுந்தருளிய ஆசிரியரே! மாயாரகிதமான மும்மூர்த்திகளும் ஞானவானும் சமானம் என்றீரே, எவ்விதம் சமானம் ஆவர்? என்று கேட்பாயாகில், ஈஸ்வரனும் ஞானவானும் மமதையும் அகந்தையும் நீங்கி நிற்றலால் சமானமாவர்; இந்த ஞானி மும்மூர்த்தியுமாவன், அநந்த சீவர்களுஞ் சகங்களனைத்து மாவன். எ-று.

இ-ம். அறிஞன் ஈசனுக்கு ஒப்பாவன் என்பதற்கு ஏது கூறி மற்றுஞ் சீவேஸ்வர சகத்தாகவும் விளங்குவான் எனக் கூறினதாம். 36

அ-கை. அறிஞன் எங்ஙனஞ் சீவர்களாக விளங்குவான்? என வினுதல்.

எல்லாச்சீவருமிவனுமென்றீ ரிவன்றான்முத்தியடைந்
தெல்லாச்சீவருமுத்திபெறும லிருப்பானேனையா
எல்லாச்சீவரும்வெவ்வேறுன லிவனெல்லாமவனே
எல்லாப்பொருளுமுரைத்தருள் குருவேயிதைநீர்மொழியீரே.

இ-ள். ஆசிரியரே! சகல சீவர்களும் இந்த ஞானி யாவன் என்று சொன்னீர்; இந்த ஞானி வீடடையச் சகல சீவர்களும் வீடடையாமல் இருப்பதென்னை? சகல சீவர்களும் தனித்தனியா யிருப்பாராயின், இந்தஞானி அனைத்தும் ஆகானே? சர்வார்த்தங்களையும் அருளுகின்ற தேசிகரே! இச்சங்கைக்கு உத்தரந் தேவரீர் அருள் செய்வீராக. எ-று.

முத்தி அடைய என்பது அடைந்தெனத் திரிந்து நின்றது.

இ-ம். ஞானவானாகிய ஒருவன் பெற்றபேறு ஏனைய உயிர்கள் பெறாமையால், இவனே எல்லாமாவன் என்பது எங்ஙனங்கூடும்? என வினவினதாம். 37

அ-கை. மேல்வினவிற்கு உத்தரங் கூறல்.

அகமெனு மான்மா பூரண மேமக நேகவிதஞ் சீவன்
அகமெனு மந்தக் காரணவுபாதிக ளளவில்லை யாதலினால்
சகமுழு துங்குளிர் சந்திரனேகஞ் சலசந்திரர் பலவாம்
சகமதி லேரிகுளஞ்சிறு குழிசால் சட்டிகுடம் பலவால்.

இ-ள். நான் என்னும் ஆத்மாவானது பரிபூரணமான ஒன்றாம், நான்என்கிற மனோவுபாதிகள் மட்டில்லை, ஆதலால், சிதாபாசன் அநேகவிதங்களாம்; உலகமனைத்தும் குளிர்ச்சி செய்கின்ற மதி ஒன்று; உலகத்தின்கண் ஏரிகளும் தடாகங்களும் சிறிய பள்ளங்களும் சால்களும் சட்டிகளும் குடங்களும் பல ஆதலால், சலப்பிரதிபிம்பமான சந்திரர்களும் அநந்தமாம். எ-று. 38

இதுவுமது.

சட்டிகுடங்களி லொன் றநசித்திட வதனுட் சலசந்திரன்
ஒட்டுமுதற் சந்திரனொடு கூடுமொழிந் தவைகூடவே
கட்டுமுபாதி நசித்திடுசீவன் காரண வான்மாவில்
கிட்டுவைக்கியமு பாதிகெடா தவர் கேவல மாகாரே.

இ-ள். சட்டி கடம் முதலியவைகளில் ஒன்று கெட; அதற்குள் தோன்றிய பிரதிபிம்ப சந்திரன்தான் பொருந்துதற்குரிய முதற் காரண சந்திரனோடுஞ் சேரும்; ஏனைய பிரதிபிம்பசந்திரர்கள் அங்ஙனம் ஏகமாகக் கூடாவாம்; அதுபோலப் பந்தித்திருக்கும் அறியாமை இறந்த சீவன் தனக்கு ஆகாரமான ஆத்மஸ்வரூபத்தில் ஐக்கியமாய்; அவித்தை நீங்காத சீவர்கள் கைவல்லியத்தை அடையமாட்டார்கள். எ-று.

இ-ம். ஒரு கடசலம் நசிக்கில் அதில் பிரதிபிம்பித்த சந்திரன் பிம்பசந்திரனானவனன்றி, ஏனைய பிரதிபிம்ப சந்திரர்கள் ஆகான்; அதுபோல ஓரவித்தை நசிக்கில் அதிற்றோன்றிய சீவன் சிவமானவனே அன்றி ஏனைய சீவர்கள் ஆகான் என்பதாம். 39

அ - கை. முன்பு அறிஞன் ஈசனுக் கொப்பென்றீர் ; அங்ஙனமா யின் அவர் மகிமை இவனுக்கே இன்று ? என வினுதல்.

இவனயன்மால்சிவனுகிய வீசரொடெப்படி யொப்பாகும்
சிவன்முதன் மூவருமகிலசிருட்டி திதிநாசங்கள்செய்வார்
அவர்பிறர்மதிகளு முக்காலங்களு மறிவார்விபுவாவார்
தவமிகுகுருவே யிவனுக்கவைபோற் சற்றுங்காணேனே.

இ - ள். தவத்தின்மிகுந்த ஆசிரியரே! இந்த ஞானி பிரம விஷ்ணு ருத்திராகிய மும்மூர்த்திகளுடன் எவ்விதஞ் சமானமாவன்? உருத்திரன் முதலிய மும்மூர்த்திகளும் சகத்தை உண்டாக்குதலும் இரட்சித்தலும் அழித்தலும் செய்வார்கள் ; அவ்வீஸ்வரர் பிறரறிவை யும் திரிகாலங்களையும் தெரிவார் ; வியாபகமாவார்கள் ; இந்தஞானிக்கு அவற்றைப்போல எவ்வளவும் பார்த்திலேன். எ-று.

இ - ம். வெளிப்படை. 40

அ - கை. மேல்வினுவிற்கு உத்தரம்.

தடத்துநீர்நிலாத்திரியெரி யுபயமுந்தழுவு மூர்தனைக்கா க்கும், குடத்துநீர்விளக்கினிலொளி யிரண்டுமோர்குடும்பமாத் திரங்காக்கும், அடுத்தமைந்தனே ஞானியு மீசனுமறிவினுற்பிறி வில்லை, கெடுத்தமாயையின் குணங்களான்மேலென் றுங் கீழெ ன்றும் பிரிவாமால்.

இ - ள். சத்துக்களை யடைந்த புத்திரா! தடாகத்துச் சலமும பகல்வர்த்தியுமாகிய இரண்டும் பொருந்திய ஊரைக் காக்கும் ; கடத் துச் சலமும் தீப்பிரகாசமுமாகிய உபயமும் ஒரு குடும்பத்தை மாத்தி ரம் காக்கும் ஞானவானும் ஈஸ்வரனும் ஞானத்தினுல் வேறுபாடிலர் ; ஒன்றுபடாமற் கெடுத்த மாயையின் தன்மைகளால் உயர் வென்றும் தாழ்வென்றும் வேருகும். எ-று.

இ-ம். எரிநீர் ஊரையும் குடிநீர் இல்லத்தையும் அந்த விடத்தில் செறித்துவைப்பினும் தொழிற்பேதமே யன்றிச் சுத்தத்தன்மை ஒன்றாவதுபோல, ஈசனுக்கும் ஞானிக்கும் மாயை அவித்தைகளால் தாரதம்மிய மிருக்கினும் அறிவின்தன்மையில் பேதமின்று என்பதாம். 41

இதுவுமது.

நரரின்மன்னனைச்சித்தரைப்போலவே நாரணன்முதலான
சுரர்கண்மாயைவல்லவரணிமாதிகளொக்கமாதவமிக்கோர்
தரணிமானிடர்க்கவைகளில்லாமையாற்றாழ்வுளராலும்
பிரமபாவனையாலிவரவரெனும்பேதமொன்றிலராய்.

இ-ள். மானிடரில் அரசனும் சித்தபுருடனும் எங்ஙனம் அதிகாரத்தானும் மகிமையானும் பேசப்பட்டார்களோ, அவர்போலவே திருமால் முதலிய தேவர்களும், மாயையில் வல்லமை உடையவர்களாதலால் அணிமாமுதலிய அட்டசித்திகள் நிறைந்த மகாதவத்தின் மிக்கவர்களாவர்; பூமியிலுள்ள மனிதர்களுக்கு அவைகள் இல்லாமையால் தாழ்வை உடையவர்களானாலும், பிரமதிருஷ்டியினால் இவர்கள் மானிடரெனவும் அவர்கள் தேவர்களெனவும் வேறுபாடொன்றிலர் எனக் காண்பாய். எ-று.

அட்டமாசித்திகளாவன:—அணிமா, மகிமா, இலகிமா, கரிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம், என்பவைகளாம், அவற்றுள்.

அணிமா—மிகவுஞ் சிறிய வுயிர்கள்தோறும் தான் மிகவு நுண்ணிய அணுவளவாய்ச் சென்றிருக்கும் அதிநுண்மை.

மகிமா—பிருதிவிமுதல் சிவமீறான முப்பத்தாறு தத்துவமும் உள்ளும் புறமும் வியாபித்து நீங்காதிருக்கும் பெருந்தகைமை.

இலகிமா—மேருமலைபோலக் கனமாக விருப்பினும் பரமாணுக் கள்போல் எடுத்தற்கெளிதாய் இருப்பது.

கரிமா—பரமாணுப்போன்ற வடிவுடையதாயினும், மேருமலைபோல எடுத்தற்கரியதாய் இருப்பது.

பிராத்தி—பாதாளத்திலிருந்து பிரமலோகம் போய்ச் சஞ்சரித்து மீண்டும் பாதாளத்துக்கு வரத்தக்கது.

பிராகாமியம்—பரகாயப் பிரவேசஞ்செய்தலும், விண்ணுலகத்திற் சஞ்சரித்தலும், விரும்பிய போகமனைத்தையும் நினைத்தபடிக்கெல்லாம் இருக்குமிடத்திலேயே வருவித்து அனுபவித்தலு முதலிய வல்லது.

ஈசத்துவம்—சிருட்டியாதி முத்தொழில்களை நடாத்தவும், சூரியன் முதலாய கிரகங்களைத் தன்னேவற்படி நடக்கச்செய்யவும் வல்லது.

வசித்துவம்—அரசர், பக்ஷி, மிருகம், பூதம், மனிதர் இந்திரன் முதலிய அஷ்டதிக்குப் பாலகர் இவர்களெல்லாரையும் தன்வசமாக்கிக் கொள்ள வல்லது.

இ - ம். மானிடரில் சித்தருக்குள்ள மகிமைகள் மற்றவர்களுக்கு இன்றாயினும் அம்மானிடத் தன்மையில் ஒப்பாவதுபோல சித்துருவமான திரிமூர்த்திகளும் சீவன்முத்தர்களும் தேவத்தன்மை மானிடத் தன்மைகளால் வேற்றுமையுள்ளோராயினும் சித்துத்தன்மையில ஒப்பாவர் என்பதாம். 42

அ - கை. அணிமாதிகள் ஈசனதாயின் அறிஞனுக்கு எங்ஙனம் உண்டாயிற்று? எனில், அவரைநோக்கி உபாசனை செய்ததினால் ஆம் எனக் கூறல்.

முத்திநல்கியசற்குருவேபலமுனிகளுக்கணிமாதி
சித்திபூமியிற்கண்டிருக்கவுமந்தச் செல்வமீசனதென்றிர்
புத்தியொத்திடவுரைத்தருளென்றிடிற்புகழுமீசனைவேண்டிப்
பத்திசெய்திடுந்தவத்தினல்யோகத்தாற்பலித்ததென்றறிவாயே

இ - ள். வீடருளிச்செய்த ஞானதேசிகரே! வியாசர் முதலாய பல இருடிகளுக்கு அணிமாமுதலிய அஷ்டமா சித்திகள் உண்டாயி

ருப்பதை இவ்வுலகத்திற் பார்த்திருக்கவும், அச்செல்வமானது ஈஸ்வர னதென்று சொன்னீர்; அச்செல்வம் அவர்களுக்கெவ்வா றுற்றனவா யின வென்பதை என்புத்தி ஒத்திருக்கும்படிக்குச் சொல்லவேண்டும் என்றும் கேட்பாயாகில், துதியாநின்ற ஈஸ்வரனை நாடி மனமொழிமெய் களாற் செய்யாநிற்கும் வழிபாட்டினாலும், சாந்திராயணாதி தவங்களா லும், அஷ்டாங்க யோகத்தினாலும் கிடைத்ததென் றறிந்து கொள் வாய். எ-று.

சாந்திராயணம்—சந்திரன் கலைதேயத்தேய உணவில் ஒவ்வொரு கவளமாய்க் குறைத்துண்டு, அது வளரவளர ஒவ்வொன்றாய் உயர்த்தி யுண்பதாகிய தொருவிரதம்; சந்திர அயகம் எனப்பிரியும்; அயகம்= ஓட்டம், சந்திரனுடைய கதியைப்பற்றியதெனப் பொருள்படும்.

அஷ்டாங்க யோகமாவது:—இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, ஸ்தம்பனம், சமாதி என்பனவாம்.

இ-ம். வெளிப்படை. 43

அ-கை. முன்புள்ள ஞானிகளைப்போல இவர்களுக்கு அணிமாதிகள் என் இல்லை? என வினாதல்.

சிவசொரூபமாந் தேசிகமூர்த்தியே சித்திமுத்திகளிரண்டும்
தவமுளோரடைகுவரெனிலவர்கள்போற் சகலருமடைவாரோ
அவர்கள் பூருவசித்தியு ஞானமு மடைந்ததுங்கண்டோமே
இவர்கண்ஞானிகளென் றிடிற்சித்திகளிவர்க்கிலாவகையேதோ.

இ-ள். சிவாகாரமாகிய குருமூர்த்தியே! அணிமாதி சித்தியும் மோக்ஷமும் ஆகிய இரண்டையும் தவத்தை உடையவர்கள் அடைவார்கள் என்றால், வியாசர் முதலான தவத்தரைப்போல இக்கால த்துள்ள ஞானிகளனைவரு மடைவார்களா? அத்தவமுடையவர்கள் மு ன்புள்ள அணிமாதி சித்தியும் முத்தியும்பெற்றது ஆகமப் பிரமாணத்

தால் பார்த்தோம்; இவர்களை ஞானவான்களென்று சொன்னால் அணிமாதிசித்திகள் இவர்களுக்கில்லாத விதம் யாது? எ-று.

இ - ம். வெளிப்படை. 44

அ - கை. மேல் வினாவிற்கு உத்தரம்.

காமியத்தவங்காமியமொன்றையுங் கருத்திடாத்தவமென்றும்
பூமியிற்றவமிருவகைச்சித்தியும் போதமுந்தருமைந்தா
ஆமிவற்றிலொன்றியற்றினரொன்றையே யடைகுவரிதுதீர்வை
யாமுரைத்தவவ்விரண்டையு மியற்றினரன்றுளபெரியோரே.

இ - ள். மாணாக்கனே! இச்சிக்கப்படும் பொருளை யடையக் கருதுவதான காமியத்தவம் எனவும். அப்படி இச்சிக்கப்படும் பொருளொன்றையும் அடையக் கருதாததான நிஷ்காமியத்தவம் எனவும், உலகத்தில் தவம் இரண்டுவிதமாம்; அவற்றுள் காமியத்தவஞ் சித்தியையும் நிஷ்காமியத்தவம் முத்தியையுங் கொடுக்கும்; ஆகிய இவ்விரண்டில் ஒன்றை யப்பியாசஞ் செய்தவர்கள் அவ்வொன்றினையே அடைவார்கள்; இது நிச்சயமாம்; பூர்வத்திலுள்ள வியாசர்முதலான மகான்கள் நாம் சொன்ன அக்காமியத்தவம் நிஷ்காமியத்தவம் என்னும் இரண்டிலு முயற்சிசெய்தார்கள். எ-று.

இ - ம். முன்புள்ள ஞானவான்களில் சிலர் இரண்டு தவத்தையும் அநுசந்தித்ததனால், சித்திமுத்திகள் இரண்டனையும் பெற்றார்கள் என்பதாம். 45

இதுவுமது.

அனகமைந்தனே முத்திஞானத்தையே யடைந்தனரல்லாமல்
செனகன்மாவலி பகிரதன்முதலினோர் சித்திகள்படித்தாரோ
இனியசித்தியை விரும்பினர் சிலர்சிலரிரண்டையுமுயன்றார்கள்
முனிவர்சித்திகள் விநோதமாத்திரந்தரு முத்தியைத்தராவே

இ-ள். ஞானமுற்ற மகனே! சனகராசன், மகாபலிச் சக்கரவர்த்தி, பகீரதராசன் முதலானவர்கள் ஞானத்தை அப்பியசித்து மோட்சத்தைப் பெற்றார்களேயன்றி, அணிமாதி சித்தியை அப்பியாசஞ் செய்தார்களா? சில முனிவர்கள் இனிமையான அணிமாதி சித்தியைமாத்திரம் விரும்பினார்கள்; சில முனிவர்கள் சித்திமுத்திகள் இரண்டையும் அப்பியாசித்தார்கள்; முனிவர் அப்பியசித்த அணிமாதி சித்திகளானவை காலம்போக்கும் விளையாட்டைமாத்திரங் கொடுக்கும், மோட்சத்தைக் கொடுக்கமாட்டா. எ-று.

இ-ம். யோகத்தினால் அணிமாதிகளைப் பெற்றும் அவைகளால் பயன்படாமல் பின்னர் ஞானப்பேற்றினால் முத்தியைப் பெற்றார்கள்; ஆதலால், அச்சித்திகளை ஞானிகள் விரும்பவில்லை என்பதாம். 46

அ-கை. சித்திகளில் பயன் இன்று என்பது தெரிந்தும் சிலஞானிகள் ஏன் அதை விரும்புகிறார்கள்? என வினாதலுக்கு உத்தரம்.

யோகஞானமே முத்தியைத்தருமெனி னொழிந்தசித்திக
ள்வேண்டி, மோகமாயுடல் வருந்தினா சிலசில முத்தர்களேனெ
ன்றால், போகமாய்வரும் பிராரத்தகன்மங்கள் புசித்தன்றோ
சிதமேதகும், ஆகையாலந்தச் சித்திகள்பிராரத்த மாகுமென்ற
றிவாயே.

இ-ள். ஐக்கியமான அத்துவித ஞானமே மோட்சத்தைக் கொடுக்குமாயின், அது நீங்கிய அணிமாதி சித்திகளை விரும்பிச் சிலசீவன் முத்தர்கள் தேகவருத்த முற்றார்கள்; அவ்வாறு வருந்தியது யாதினாலென்னில், அனுபோகமாய் வருகின்ற பிராரத்த கன்மங்களானவை புசித்தல்லவா கெட்டுப்போம்? ஆதலால், அவர்கள்பெற்ற அணிமாதி சித்திகள் இச்சாப்பிராரத்தமாகுமென்று அறிந்து கொள்வாயாக. எ-று.

இ-ம். சித்தியை விரும்புவது பிராரத்த கன்மம் என்பதாம்.

அ - கை. ஐயந் தெளிவித்த ஆசிரியரை அன்பின் வியந்து துதித்தல்.

இலக்கமாயிரஞ் சுருதியாவாகத்தா லென்மனசையாமல் பிலக்கவேண்டுமென் றருள்குருவேயகப் பிராந்திபோய்த் தெளிவானேன், றுலக்கமானகண் ணடியையடிக்கடி துலக்கினுற் பழுதன்றே, அலக்கண்மாற்றிய தேவரீரெனக்குரையமுதங்க டெவிட்டாவே.

இ - ள். அளவிறந்த வேதங்களினாலும் யுத்தியினாலும் என் மனமானது சலனமின்றி ஸ்திரமாயிருக்கவேண்டும் என்று எனது சங்கைகள் தீரும்படி உத்தரம் அருளிய தேசிகரே! எனது மனதின்கண்ணுள்ள மயக்க நீங்கித் தெளிவையடைந்தேன்; விளக்கமான கண்ணாடியை மேலும்மேலும் விளக்கினால் குற்றமல்லவே; எனது பவத்துன்பத்தை நீக்கிய சுவாமிகளே! அடியேனுக்கருளிய உபதேசாமுதங்கள் புசிக்கப் புசிக்கத் தெவிட்டாவாம். எ-று.

இ - ம். வெளிப்படை. 48

அ - கை. கிரம சிருஷ்டியான சீவேஸ்வர சகத்விவகாரங்கள் அறிஞரது பிராரத்தம் என்று அறிந்த சீடன் அதற்குவித்தாக உகபற் சிருட்டியினால் அமைந்து கிடக்கின்ற சஞ்சிதத்தைக் கெடுக்கும் பொருட்டு அஃது நசிக்கும் என்ற இரண்டு வகையில் யாது உண்மை? என வினாதல்.

கைதவங்களைச் சாத்திரஞ்சொல்லுமோ கருணையாலெலனையாளும், ஐயனேகுருவே யெவராகிலு மனுபவித்தாலன்றிச், செய்தகன்மங்கள் விடாதென்றவசனமுஞ் சென்மசஞ்சிதம் வேகத், துய்யஞானத்தீ சுடுமென்றவசனமுந் துணிவதெப்படிநானே.

இ - ள். கிருபையினால் அடியேனை யாளாகின்ற என்னை யாளும் ஆசிரியரே! எனது குருசுவாமியே! அசத்தியங்களோ தங்களுரைக்குமோ? யாவரிலும் தாங்கள்செய்த கர்மபலன்கள் அநுபவித்தொழித்தாலல்லது நீங்காதென்ற வாக்கியமும், அநந்த சனனங்கட்குக் காரணமான சஞ்சித கருமங்கள் வெந்து நீறாகும்படி பரிசுத்தமான ஞானக்கினியானது எரிக்குமென்ற வாக்கியமும் ஆகிய இவ்விரண்டில், இது வாஸ்தவம் இது அன்று அடியேன் தெளிவது எவ்விதம். எ-று.

இ - ம். சஞ்சிதகன்மம் அநுபவித்தால் தீரும், ஞானத்தால் தீரும் என்ற வசனங்களில் யாது உறுதி? என வினவினதாம். 49

அ - கை. மேல் வினாவிற்கு உத்தரம்.

சீவபேதங்க ளளவில்லைமைந்தனே செய்கையு மளவில்லை,
ஆவவாமவரவரதிகாரங்க ளறிந்துபக்குவநோக்கிப், பூவலர்ந்து
பின்பலங்கள்காட்டுவனபோற் பூருவஞ்சித்தாந்தம், காவல்
வேதங்களிரண்டையும் வசனிக்குங்காண்ட மூவகையாலே.

இ - ள். மாணாக்கனே! சீவர்களுடைய வேறுபாடுகள் மட்டில்லை; அவர்கள் செயலும் மட்டில்லை; அவரவர்களுக்கு ஆவன ஆம்; ஆதலால், அவரவர்களது அதிகாரந்தெரிந்து பருவம் பார்த்து, மலரானது விகசித்துப் பின்பு பலனைக்கொடுப்பதுபோல, நம்மைக் காக்கின்ற சுருதிகள், கர்மகாண்டம் பத்திகாண்டம் ஞானகாண்டம் என்னும் மூன்று பகுப்பினால், பூருவபட்ச வாக்கியமும் சித்தாந்த வாக்கியமும் ஆகிய இரண்டுவகையுஞ் சொல்லும். எ-று.

இ - ம். சீடனது பக்குவத்திற்கு ஏற்கப் பூருவபட்சம் சித்தாந்தம் என இரண்டாக வேதங் கூறும் என்பதாம். 50

இதுவுமது.

ஊனபாவிகளடைவனநரகங்க ளவசியமானாலும்
தானமந்திரவிரதஹோமங்களாற் றவிருமென்பதுபொய்யோ

ஈனமாம்பலசன்மசஞ்சிதவினை யெத்தனையானாலும்
ஞானமாங்கனல்சுடுமென்ற மறைமொழி நம்பினால்வீடுண்டே.

இ-ள். கொடிதான பாவிகள் நரகங்களை அடைவது உண்மை யானாலும், தானங்களினாலும் மந்திரங்களினாலும் விரதங்களினாலும் யாகங்களினாலும் ஒழியும் என்பது அசத்தியமா? இழிவாகிய அநந்தசங் கத்தைக் கொடுக்கும் சஞ்சிதகன்மம் எவ்வளவு சேர்ந்திருக்கினும், ஞானக் கினியானது எரிக்குமென்ற வேதவாக்கியத்தை நம்புவானானால் முத்தி யுண்டாகும். எ-று.

இ-ம். அனுபவித்துத் தீருமென்ற பட்சத்தை நீக்கி, அறிவிற் கெடுமென்ற சித்தாந்தத்தைக்கொண்டு அறிவை வளர்க்கில் அதனாற் சஞ்சிதங் கெடும் என்பதாம். 51

அ-கை. சஞ்சிதத்தைக் கெடுக்கும் ஞானமிருக்கக் கன்மத்தைவிரு ம்புவது ஏன்? என் வினாதல்.

என்மனந்திருக்கோயிலாத் தினங்குடியிருந்தருள்குருமூர்த்தி
சென்மசஞ்சிதவினையைவே ரறுத்திடுந்தேவரீர் மெய்ஞ்ஞானம்
தன்மயந்தருமகிமையை விபுதரர்சகத்துளோரறியாமல்
கன்மமாங்குழியினில் விழுந்தழிகின்றகாரணமுறையீரே.

இ-ள். அடியேன் இதயாம்பரமே சிறந்த கோயிலாக எப்போ தும் குடிகொண்டிராநின்ற தேசிகமூர்த்தியே! சுவாமிகள் போதிக்கும் உண்மை ஞானமானது சநநத்திற்குக் காரணமான சஞ்சித கர்மங்களின் மூலமாகிய அவித்தையை அறியாதிற்கும்; சமஸ்தமும் தனது ஸ்வரூ பமாகும்படி செய்யும் பெருமையை வானவரும் உலகத்தாரும் தெரி யாமல் கிரியாமார்க்கமென்கிற படுகுழியில் வீழ்ந்து கெடுகின்ற கார ணத்தைச் சொல்வீர். எ-று.

இ-ம். வெளிப்படை. 52

அ - கை. மேல் வினாவிற்கு உத்தரம்.

அழிவிலாததற்பதந்தன்னைத் தன்னை யகமுகத்தவர்சேர்வார்
வழிகடப்பவர் பராமுகமாகினன் மலர்ந்தகண்ணிருந்தாலும்
குழியில்வீழ்வர்காணப்படிவெளிமுகங்கொண்டுகாமிகளானோர்
பழிதரும்பிறவிக்கடலுழலுவார் பரகதியடைவாரே.

இ - ள். புத்திரா! கெடாத பிரமபதத்தை அந்தர்முகமுடையவர்கள் அடைவார்கள்; மார்க்கத்தில் செல்கின்றவர்கள் பராமுகமானால் விகசிதமான நேத்திரங்களிருக்கினும் பள்ளத்தில் விழுவார்கள்; அவ்வண்ணம் பகிர்முகமே தமக்குப் பயனாகக்கொண்டு விடயப்பிரியமையுடையவர்களா யுழலுங் காமிகள் பழியைக்கொடுக்கின்ற பிறவிக்கடலின் சுழலுவார்கள்; முத்தியைப் பெறமாட்டார்கள். எ-று.

இ - ம். அகமுகமின்றிப் பகிர்முகமாகச் செல்லுதலே சன்மங்களில் செல்லுதற்கேது என்பதாம். 53

அ - கை. சிவச்செயல் இவை சிவச்செயல் இவை எனத் தெளியும் சித்தம், சீவன் பகிர்முகமாதல் ஈசன் செய்விக்குஞ் செயலேயன்றிச் சீவர்கள் என்செய்வார்கள்? என்ற வினாவிற்கு உத்தரம்.

சிறந்தநன்மையுந்தீமையுமீசனார் செய்விக்குஞ்செயலன்றோ, பிறந்தசீவர்களென்செய்வா ரவர்கண்மேற்பிழைசொலும் வகையேதோ, துறந்ததேசிக மூர்த்தியே யென்றிடிற் சுருதிநூற்பொருண் மார்க்கம், மறந்தமூடர்கள் வசனிக்கும் பிராந்திகாண் மைந்தனேயது கேளாய்.

இ - ள். சகல பற்றுக்களையும் நீத்த குருவே; சிறப்பான நன்மையுந் தீமையும் ஈசனார் செய்விக்குஞ் செய்கை அல்லவா? சநித்த சீவர்கள் என்ன செய்வார்கள்? அச்சீவர்கள்மேல் குற்றம் கூறற்குக் காரணம் என்னை? என்று கேட்பாயாகில், வேத சாஸ்திரார்த்த வழியை

மறந்த அஞ்ஞானிகள் சொல்லுகின்ற மயக்கம்; புத்திரனே! அதைக் கேட்பாய். எ-று. 54

இதுவுமது.

திகழ்ந்தவீசனார் சிருட்டியுஞ்சீவனார்சிருட்டியும் வெவ்வேறே, சகந்தனிற்பொதுவீசனாற்சிருட்டிகள் சராசரப்பொருளெல்லாம், அகந்தையாமபி மானங்கள்கோபங்க ளாசைகளிவையெல்லா, நிகழ்ந்தசீவனார் சிருட்டிகளாகுங்கா ணிமலனார் செயலன்றே.

இ-ள். சுத்தப்பிரமமாக விளங்காநின்ற ஈஸ்வர சிருட்டியும் சீவசிருட்டியும் வேறு வேறாம்; உலகத்தில் யாவர்க்கும் பொதுவான தாவரசங்கமங்களனைத்தும் ஈஸ்வரசிருட்டிகளாம்; நான் என்னும் அகந்தையாகிய அபிமானங்களும் துவேஷங்களும் ஆசைகளும் ஆகிய இவைகள் அனைத்தும் விளங்கிய சீவசிருட்டிகளாம்; நின்மலமான ஈஸ்வர சிருட்டிகள் அல்ல. எ-று.

இ-ம். ஈஸ்வரசிருட்டி சீவசிருட்டிகள் இவையெனப் பகுத்துக் கூறினதாம். 55

இதுவுமது.

மூவராம்பரன் சிருட்டிக ளுயிர்க்கெலா முத்திசாதனமாகும்
சீதனாது சிருட்டிக டங்களைச் செனிப்பிக்கும் பிணியாகும்
தாவராதிக ணசித்திடி லொருவர்க்குஞ் சநநங்கணசியாவாம்
கோபமாதிக ணசித்திடிற் பந்தமாங் கொடும்பிறவிகள்போமே.

இ-ள். திரிமூர்த்தி ரூபமான ஈஸ்வரனுடைய சிருட்டிகள் சீவர்களனைவர்க்கும் வீடடைதற்குச் சாதனமாம்; சீவசிருட்டிகளானவை சீவர்களைப் பிறப்பிக்கின்ற சஞ்சித ரோகமாம்; ஈஸ்வர சிருட்டியாகிய தரு முதலிய பஞ்சபூத பௌதிகவடிவங்கள் நசிக்கில் யாதோருயிர்க்

கும் ஜனனம் நீங்காவாம்; ஜீவசிருட்டியாகிய துவேஷ முதலியான இராக்கின் பந்தமான கொடிய சகலங்கள் நசிக்கும். எ-று.

இ-ம். ஈஸ்வர சிருட்டியான பஞ்சபூத பௌதிக முதலியதத்துவங்கள் முத்திக்குச் சாதனமும் சீவசிருட்டியான காமக்குரோதாதிகள் பவத்திற்கு ஏதுவுமாம் என்பதற்கு உத்தி கூறினதாம். 56

ஈசர்காரியம்பிரளயத்தொழியவுமெவர்பவமொழிந்தார்கள்
தேசகாலதேகாதிகளிருக்கவுஞ்சீவகாரியமோகம்
நாசமாக்கியவ்விவேகத்தினுயிரொடுஞானமுத்தர்களானார்
பாசமோகங்கள் பசுபதிசெயலன்றே.

இதுவுமது.

இ-ள். ஈஸ்வர சிருட்டியான பஞ்சபூத பௌதிகங்கள் பிரளய காலத்தில் நாசமாகவும் யாவர்பிறவியை ஒழிந்தார்கள்? தேசம் காலம் தேகம் முதலிய ஈஸ்வர சிருட்டி யழியாதிருக்கும்போதே சீவசிருட்டியான காமமுதலியன நசிப்பித்து விவேகத்தினால் சீவன் முத்தர்களானார்கள்; ஆதலால் காமவெகுளி மயக்கங்கள் சீவச்செயலே அன்றிச் சிவச்செயல் அன்று என்பதாம். 57

இதுவுமது.

அச்சுவத்தமென்றொருமரமதிலிரண்டரும்பாவைகள்வாழும்
நச்சுமங்கொரு பறவையம்மரக்கனி நன்றுநன்றெனத்தின்னும்
மெச்சுமங்கொரு பறவைதின்னுதென வியங்கியப்பொருளாக
வைச்சமாமறை சீவனையீசனை வகுத்தவாறறிவாயே.

இ-ன். அரசென்று சொல்லப்பட்ட விருக்ஷமொன்றுளது; அத்தருவில் அரியபக்ஷிகளிரண்டு வாழ்ந்து கொண்டிருக்கும்; அவ்விடத்து (போகத்தை) விரும்புகிற ஒரு பக்ஷியானது அத்தருவின் பலத்தை நல்லது நல்லதென்று புசிக்கும்; அதன்கண் திதிக்கப்பெற்ற மற்றொரு

க்ஷியானது புசியாது என்று அப்பக்ஷிகளைக் குறிப்புப்பொருளாகவைத்து காவேதமானது சிவனையும் ஈசனையும் பகுத்தவண்ணம் நீ விசாரித்து றியக்கடவாய். எ-று.

அச்சுவத்தம் என்பது தலைகீழான மாயாவிருக்ஷம் எனக்கொள்க.

இ - ம். மாயையில் வாழ்கின்ற சீவேஸ்வரர்களின் தாரதம்மியம் றிதெனப் பகுத்துக் கூறினதாம்.

இதுவுமது.

இந்தச்சீவனல் வருமறு பகையெலா மிவன்செயலல்லா ல், அந்தத்தேவனல் வருமென்ற மூடர்கண்மூடர்களதோகதிய டைவார்கள், இந்தச்சீவனல் வருமறு பகையெலா மிவன்செய ல்லாமல், அந்தத்தேவன லன்றெனும் விவேகியே யமலவீட டைவாரே.

இ - ள். இச்சீவனல் உண்டான காமமுதலிய பகைகளாலும் இவன் செயலாலுண்டாமே அன்றி அவ்வீசனல் உண்டாமென்றஅறி விலிகள் நரகத்தை அடைவார்கள்; இச்சீவனல் உண்டாகும் சட்ப கைகள் முதலிய அனைத்தும் இச்சீவ சிருட்டியே அன்றி அவ்வீச னல் வந்தனவல்ல என்னும் விவேகிகளே நின்மலமான மோக்ஷத்தை அடைவார்கள். எ-று.

இ - ம். காமாதிகளை ஈஸ்வர சிருட்டியெனக் கருதாமல் சீவசி ருட்டியெனக்கொண்டு அவற்றை விசாரத்தால் கெடுக்கின் முத்தி உண் டாம், என்பதாம். 59

- கை. முன்பு ஈஸ்வர சிருட்டி பொது என்றமையால், அவரும் பொதுவாக வேண்டுமே? அங்ஙனமாயின், சீவர்களிடத்தில் பக்ஷ பாதம் வருவானேன்? என்றவினவிற்கு உத்தரம்.

நலமெய்மையயனே யெல்லவர்க்குந் தெய்வநாயகன்பொது வாகுல், சில்லரைவாழ்வித்தல் சிலரொடுகோபித்தல் செய்வதே

னென்றாயேல், குலவுமைந்தரைத் தந்தைபோற்சிட்டரைக்கு ளிர்ந்து துட்டரைக்காய்வன், கலைகணல்வழிவரச்செயுந் தன் டமுங் கருணையென் றறிவாயே.

இ - ள். உண்மையே திருவுருக் கொண்டுவந்த ஆசிரியரே! அனை வர்க்கும் ஈஸ்வரன் பொதுமையானால் சிலரை இன்புறவும் சிலரைத் துன்புறவும் செய்வது என்னை என்று கேட்பாயாகில் குலவாநின்ற புத் திரர்களைப் பிதா தக்கபடி நேசிப்பதுங் கோபிப்பதும்போல, அவ்வீஸ் வரன் சற்சனருக்கின்பஞ் செய்து துர்ச்சனருக்குத் துன்பஞ்செய்வன்; சாஸ்திரங்களின் விதிவழி ஒழுகும்படி சீவர்களைச் செய்யுஞ் சிட்சையும் கிருபையினாலென்று உணர்வாய். எ-று.

இ - ம். சீவர்கள் சுகப்படும் பொருட்டு வருத்திய அஃதுங் கரு ணையே யன்றிப் பக்ஷபாதமன்று என்பதாம். 60

அ - கை. அங்ஙனம் ஆயின் ஈசன் யாவரையும் ஏன் இரக்ஷிக்க வில்லை? எனவருஞ் சங்கைக்கு உத்தரம்.

மனைவிலங்கறு மைந்தனே கற்பகமரங்கனல் புனலுமன்
றும், நினையடைந்தவர் வறுமையுஞ்சீதமுந் தாகமுந்தவிர்த்தா
ளும், அனையவீசனு மடைந்தவர்க் கருள்செய்வா னகன்றவர்க்
கருள்செய்யான், இனையகுற்றங்க ளெவர்குற்றமாகுமென்
றெண்ணிநீ யறிவாயே.

இ - ள். சம்சாரவிலங்கு நீங்கிய புத்திரா! கற்பகவிருக்ஷமும் அக் கினியும் சலமும் ஆகிய இவைமூன்றும் தம்மைச் சேர்ந்தவர்களது தாரித் திரத்தையும் குளிரையும் தாகத்தையும் நீக்கி இரக்ஷிக்கும்: அத்தன்மை யனவாக ஈஸ்வரனும் தன்னை அடைந்தவர்களுக்குக் கிருபைசெய்வான், அடையாதவர்களுக்குக் கிருபைசெய்யான்; இத்தன்மையான குற்றங் கள் யாவர் குற்றமாமென்று ஆலோசித்து நீ தெரிந்துகொள்வாய். எ-று.

இ-ம். கற்பகவிருக்ஷ முதலியவற்றைச் சார்ந்தவர்க்குத் துன்பம் நீங்கி இன்பமுண்டாவதுபோல், ஈசனைச் சார்ந்தவர்களுக்குப் பவத்துன்ப நீங்கி வீட்டின்பமுண்டாவது உண்மையென அறிந்து அவனைச் சார முயற்சி செய்யாதது இவன் குற்றமே என வறிக என்பதாம். 61

அ-கை. ஞானம் உண்டாகச் சீவன் முயற்சிக்கும் மாபு கூறல்.

ஒன்றுகேண் மகனேபுமான் முயற்சியா லுரைத்துமா
ணிடர்க்கீசன், நன்றுசெய்யவே காட்டிய நூல்வழி நடந்து நல்
லவர்பின்னே, சென்றுதுட்டவாதனை விட்டுவிவேகியாய்ச்
சினித்தமாயையைத்தள்ளி, நின்றுஞானத்தை யடைந்தவன்
பவங்கள்போ நிச்சயமிதுதானே.

இ-ள். புத்திரா! ஒருவசனங் கேட்பாய்: புருஷப் பிரயத்தினத்தினலன்றி வேறொன்று லாகாதென முன்னர்க்கூறி, பின்பு ஈஸ்வரன் மனிதர்க்கு நன்மையைச் செய்யும்பொருட்டு காண்பித்த சுருதி மார்க்கத்திற் சென்று, சத்துக்கள்பின் திரிந்து, முன்னுள்ள குரோதாதியான அசுத்தவாசனையை நீங்கி, ஆன்மா அனான்மா என்கிற சித்சடங்களைப் பகுத்தறியும் விவேகத்தை யுடையவனய், கற்பனையாக உதித்த சடமான மாயையை நீக்கி, விலக்ஷணமான கூடஸ்தனயிருந்து பிரம சைதன்னியத்தைப் பெற்றவனுடைய பிறவிகள் நீங்கும், இதுவே சத்தியமாம். எ-று.

இ-ம். சீவன் தனது முயற்சியினல் ஈஸ்வரானுக்கிரகம் பெற்று அவன் வாக்கியமான வேதாந்த முடிவைக் குருமுகமாக விசாரித்து, அதனல் விவேகமுண்டாய் அஞ்ஞான நீங்கி ஞானம் உதயமாகில் பவம் நீங்கும் என்பதாம். 62

அ-கை. யாதினல் இந்த ஞானம் உதிக்கும்? என்ற வினவிற்கு உத்தரம்.

இந்தஞானந்தான் வருவதெப்படியென்னின் விடைவிடாவி சாரத்தில் வந்தடைந்திடும் விசாரந்தா னேதெனின் மனாதியா ஞ்சரீரத்தில், இந்நானெவன் சித்தெது சடமேதாவிரண்டு மொன்றாகக்கூடும், பந்தமேது வீடேதெனவு சாவுதல் விசார மென்றறிவாயே.

இ-ள். இப்பிரமஞானமானது உதிப்பது எவ்வண்ண மென்று கேட்பாயாகில், இடையறாத ஆத்ம விசாரணையால்வரும்; விசாரணையா வதுயாதெனில், மனமுதலிய தேகத்திலிருக்கின்ற இந்த நானியா வன்? சித்தென்பது யாது? சடமென்பது யாது? சித்தும் சடமும் ஆகிய இரண்டும் ஒன்றாகக் கூடப்பெற்ற பந்தம் யாது? அதனைவிட்ட பெற்ற முத்தி யாது? என விசாரித்தல் விசாரணை யென்று அறிந் துகொள்வாய். எ-று.

இ-ம். சித்சட விலக்கணங்களைப் பகுத்தறியும் விசாரமே ஞானம் உதிப்பதற்கு மூலம் என்பதாம். 63

அ-கை. கன்மம் முக்கியம் என்னுங் கொள்கை நீங்கும்பொருட்டு ஞானம் உதிப்பதற்குச் சற்கருமம் இருக்க விசாரம் யாதுக்கு? என்ற வினாவிற்கு உத்தரம்.

போனசன்மங்க டமிலனுட்டித்தநற் புண்ணிய பரிபா கம், ஞானமாகுமே விசாரமேயென்றிடி னுமூலந்திடங்கே ளாய், ஆனபுண்ணிய மீசுரார்ப்பணஞ்செயி னசுசிபோஞ்சுசியா கும், மானதம்பினை விசாரித்து ஞானத்தை மருவுமென் றறி வாயே.

இ-ள். முன் சநநங்களில் அப்பியாசஞ்செய்த சற்கரும பரிபா கத்தால் ஞானமுதிக்குமே, ஆன்மா அநான்மா என்கிற விசாரணையா லுதிக்கு மென்பாயாகில், யாம் சொல்லுகிற உத்தரத்தைக் கேட்பாய்;

தத்தம் வருணாச்சிரமங்கட்குரிய சற்கருமத்தை பலாபேக்ஷயின்றி ஈஸ்வரப் பிரீதி செய்யில் அந்தக் கரணத்திலுள்ள அசுத்தம் நீங்கும், சித்த சுத்திவரும்; அம்மனம் பின்பு சிற்சட விசாரஞ்செய்து ஞானத்தைப் பொருந்தாநிற்குமென்று தெரிந்துகொள். எ-று.

இ-ம். நிஷ்காமியமாகச் செய்யுஞ் சற்கருமம் சித்த சுத்தியையும்; விசாரம் ஞானத்தையுங் கொடுக்கும்; ஆதலால், விசாரமேவேண்டும் என்பதாம். 64

அ-கை. பலபேற்றையுந் தரத்தக்க வலியுள்ள கன்மம் ஞானத்தைத் தராதோ? விசாரம் யாதுக்கு? என வினாதல்.

பத்தியும்வயிராக்கியமும் பரலோகமுமணிமாதி
சித்தியுந்தவநிட்டையும் யோகமுந்தியானமுஞ்சாரூப
முத்தியுந்தரும்விசித்திர கருமங்கண்மோகமாத்திரந்தள்ளும்
புத்தியுந்தரலருமையோ விசாரமேன்புண்ணியகுருமூர்த்தி.

இ-ள். தருமஸ்வரூபமான ஆசிரியரே! ஈஸ்வர பத்தியையும், விராகையையும், சுவர்க்காதி லோகங்களையும், அணிமா முதலிய அஷ்டமா சித்திகளையும், தவமும், சமாதியையும், இயமாதி அஷ்டாங்க யோகங்களையும், மூர்த்தியாகிய தியானங்களையும், சாரூபபத முத்தியையும் ஆகிய இவற்றைக் கொடுக்கின்ற பல சத்தியுள்ள கன்மங்களானவை, அஞ்ஞானத்தைக் கெடுக்கின்ற அறிவையுங் கொடுப்பது அரியதோ? விசாரணை யாதுக்கு? எ-று.

இ-ம். வெளிப்படை. 65

அ-கை. மேல்வினாவிற்கு உத்தரங் கூறுவான் றொடங்கித் திருஷ்டாந்தங் கூறல்.

வேடமாறிய பேர்களையறியவே வேண்டினான் மகனேகேள்
கூடமாமவர் சுபாவங்கள்சீலங்கள் குறிகளாய்ந் தறியாமல்

ஓடியுங்குதித்துந் தலைகீழ்நின்று முயர்ந்தகம்பத்தேறி
ஆடியும்பல கன்மங்கள் செய்யினு மவருண்மைதெரியாதே.

இ – ள். மாணாக்கனே! கேட்பாயாக; மாறுவேடங் கொண்டவர்களை யறிய விரும்பினால் மறைந்திருப்பவர்களான அவர்களுடைய குணங்களையும் நடைகளையும் அடையாளங்களையும் ஆராய்ந்து, அவர் இன்னவர் என்றறியாமல், ஓடியும் குதித்தும் தலைகீழாக நின்றும் உன்னதமான ஸ்தம்பத்திலேறி ஆடியும் இவ்வாறான பலகன்மங்கள் செய்தாலும், அவர்களது யதார்த்த வடிவந் தெரியமாட்டாது. எ–று. 66

அ – கை. தாட்டாந்தங் கூறல்.

இன்னவாறந்தப் பிரமத்தையறிவிக்கு மிலக்கணத்தால்
வேதஞ்சொன்னஞானமும் விசாரத்தால் வருமன்றிச் சுருதி
நூல்படித்தாலும், அன்னதானங்கடவங் கன்மந்திரங்களாசா
ரங்கள் யாகங்கள், என்னசெய்யினுந் தன்னைத்தானறிகின்ற
இவைகளால் வாராதே.

இ – ள். இத்தன்மையைப் போலப் பிரமஸ்வரூபத்தைத் தெரிவிக்கும் லட்சணத்தால் சுருதிசொல்லிய பிரஞ்ஞானமும் விசாரணையினால் வருமேயல்லாமல், வேதசாஸ்திரங்களை வாசித்தாலும், அன்னதானங்களும் தவங்களும் மந்திரங்களும் ஆசாரங்களும் வேள்விகளுமாகிய இவைகளில் எந்தக் கருமங்களைச் செய்தாலும், ஆத்மா வாகிய தன்னைத் தெரிந்துகொள்வது இக்கன்மங்களால் வரமாட்டாது. எ–று.

இ – ம். ஒருவன் உண்மையைத் தெரிவிக்குஞ் சத்தி உணர்வுக்கே யன்றித் தொழிற்கு இன்மைபோல, ஞானத்தை அறிவிக்குஞ் சத்தி விசாரத்திற்கே யன்றிக் கன்மத்திற்கு இன்று என்பதாம். 67

அ – கை. ஞானம் உதிப்பதற்கு நீங்கவேண்டிய அஞ்ஞானம் கருமத்தால் அன்றி விசாரத்தால் எங்ஙனம் நீங்கும் எனல்.

துளங்குதர்ப்பண மழுக்கறக் கைக்கொண்டு துலக்கினுற் போமன்றி, விளங்குபுத்தியா லுலகிலார் துலக்கினுர் விமலதே சிகமூர்த்தி, களங்கமாகுமஞ் ஞானமுமப்படி கருமத்தாற் சமூ வாமல்; உளங்குறித்தஞானத்தி லெப்படியொழியுமீ தருள் வீரே.

இ-ள். நின்மலமான குருமூர்த்தியே! விளங்காநின்ற செப்புக் கண்ணுடியில் உள்ள களங்கம் அறும்படி கையால் விளக்கினுல் போமே யல்லாமல், ஜகத்தின்கண் விளங்காநின்ற அறிவினுல் எவர்கள் விளக் கினுர்கள்? அவ்வண்ணமே களங்கமாகிய அஞ்ஞானத்தையும் சற்கன் மத்தினுல் நீக்கப்படாமல், மனதிற் குறிக்கப்பட்ட அறிவினுல் எங்ஙு னம் நீங்கும்? இதைச் சொல்வீர். எ-று.

அஞ்ஞானத்தை, "களங்கம்" என்றது ஆன்மாவை மறைத்தலி னுலென்க.

அ-கை. ஞானம் உதிப்பதற்கு அஞ்ஞானத்தை நீக்குதல் விசாரத் தால் அன்றிக் கன்மத்தால் கூடாது எனல்.

தர்ப்பணத்தினிற் களிம்புவாஸ் தவமலஞ் சகசாமதலின் மைந்தா, கற்பளிங்கினிற் கருநிறஞ்சகசமாக் கறுத்ததன் றுரோபம், தற்பணத்தினி லழுக்கற வேண்டினுற் சாதனத தொழில் வேண்டும், கற்பளிங்கி லாரோபமே கறுப்பெனக் கண்டிட மனம்போதும்.

இ-ள். மகனே! செப்புக்கண்ணுடியில் களிம்பாகிய உண்மை யான அழுக்கானது சுபாவம்; ஆதலால், படிகக்கல்லில் தோற்றிய கருமை நிறமானது சுபாவமாகக் கறுத்ததன்று, கற்பிதமாம்; செப்புக் கண்ணுடியில் களங்கமறும்படி விரும்பினுல் கருவிகளாற் செய்யுந்

செய்யல்வேண்டும்; படிகக்கல்லில் தோற்றிய செந்நிறம் கற்பிதமே என்று பார்த்திட மணமேபோதும். எ-று. 69

அ-கை. மேல் உத்தரத்திற்கு உபமேயங் கூறல்.

இன்னுமப்படிச் சச்சிதானந்தத்தி லிடர்சடம்பொய்மூன் றும், தங்குமாயையின் கற்பிதமன்றியே சகசவாஸ்தவமன்றே, பங்கமாகுமஞ் ஞானத்தைக் கருமங்கள்பகைசெயா தறவாக் கும், துங்கஞானமே கருமவஞ்ஞானத்தைச் சுடுகின்றநெருப் பாமே.

இ-ள். இத்தாஷ்டாந்தத்திலும் அத்திஷ்டாந்தத்தைப் போல அஸ் திபாதிப் பிரியரூபமாகிய தன்னில் அனுர்தம் சடம் துக்கம் ஆகிய மூன் றும் தங்காநின்ற மாயாகற்பிதமே யல்லாமல் சுபாவமாயுள்ளதன்று; அ தான அஞ்ஞானத்தைப் புண்ணியகன்மங்களானவை பகைபண்ணாமல் ... பாக்கும்; மேலான ஞானமே கன்மரூபமாகிய அஞ்ஞானத்தை எரிக் கின்ற அக்கினியாம். எ-று.

இ-ம். செம்பில் களிம்புபோல ஆத்மாவுக்கு அஞ்ஞானஞ் சகச மாகாமல் பளிங்கில் பஞ்சவன்னம்போலப் பிராந்தியாதலால், அங்ஙனந் தோற்றுங் கன்மசம்பந்தமான அஞ்ஞானத்தைக்கெடுப்பது விசாரரூப மான ஞானமே ஆம் என்பதாம். 70

அ-கை. மேற்கூறியதை வற்புறுத்தல்.

மனைக்குள்வைத்த பண்டங்களை மறந்தவன் வருடநா ளழுதாலும், நினைத்துணர்ந்தபின் கிட்டுமப்படியிந்த நிரு மலவான்மாவும், அநர்த்தமான தன் மறதியைக்கெடுத்துத் தன் னறிவினாற்காணாமல், கனத்தகன்மங்க ளூறுகஞ்செய்யினுங் காணுமோகாணாதே.

இ-ள். வீட்டிற்குள்வைத்த வஸ்துக்களை வைத்தவிடந் தெரி யாது மறந்தவன் நாளுண்டு துக்கித்தாலும், முன்வைத்த விடத்தை

ஞாபகஞ்செய்து அறிந்தபின் அவைகள் கிடைக்கும்: அதைப்போல, இந்த நிருமலமான ஆத்மஞானமும் துக்கத்திற்குக் காரணமாகிய தனது அறியாமையைப்போக்கும் தனது அறிவினல் தரிசிக்கப்படாமல், கனமான கன்மங்களை அநேகயுகஞ் செய்தாலும் காணப்படுமோ? காணப்படாது. எ-று.

இ-ம். ஞாபகத்தால் மறதிநீக்கின் முன்வைத்த பொருள் வெளிப்படும் அல்லது தொழிலால் வெளிப்படாததுபோல, விசாரஞானத்தால் அஞ்ஞானம் நீங்கின் முன்னுள்ள பிரமப்பொருள் வெளிப்படும் அல்லது கன்மத்தால் வெளிப்படாது என்பதாம். 71

அ-கை. பிரமசுகத்தை விசாரஞானங் கொடுக்கும் என்ற வேதம் அச்சுகத்தைக் கன்மமுங் கொடுக்குமென்பது யாது? எனவினுதல்.

நன்மையாங்குரு வேசுகந்தருவது ஞானமேயெனும்வேதம், தன்மபாவமிச் சிரங்களாற்றேவர்க டருவிலங்குகண்மாந்தர், சென்மமாகுவ சாதியாசாரமே செய்தவஞ்சுகமென்று, கன்மகாண்டத்தில் விதிப்பதேன் விதித்துவகாரண முரைநீரே.

இ-ள். நல்ல ஆசிரியரே! பிரமாநந்தத்தைக் கொடுப்பது அறிவே என்கிற சுருதியானது, புண்ணிய கன்மங்களால் தேவர்களும், பாவ கன்மங்களால் விருட்சமுதல் மிருகம் ஈருகிய ஐவகைத்தோற்றமும், மிஸ்ரகன்மங்களால் மனிதர்களுமாகிய ஜநநம் ஆவன என்றும், வர்ணாச்சிரம தருமப்படிசெய்கிற தவமே சுகமெனவும், கிரியாகாண்டத்தில் விதித்ததென்னை? அங்ஙனம் விதியாநின்ற காரணத்தைச் சொல்வீர்.

இ-ம். வெளிப்படை. 72

அ-கை. அங்ஙனம் விதித்த வேதத்தின் அபிப்பிராயம் வேறு எனக் கூறல்.

தினமுமண் ணுகர் பிள்ளைநோய்க் கிரங்கியே தீம்பண்ட
மெதிர்காட்டிக், கனமருந்துக ளொளித்துவைத் தழைக்கின்ற
கருணையாந் தாய்போல, மனையறங்கள் செய்மகங்கள்செய்
நன்றென்று மலர்ந்தவா சகஞ்சொல்லும், நினைவுவேறாகாஞ்
சுவர்க்ககா மிகளந்த நிர்ணயந் தெரியாரே.

இ-ள். நாள்தோறும் மண்ணைப்புசிக்கின்ற குழந்தையின் வியாதிக்கு இரக்கமுற்று, கனமான ஔஷதங்களை மறைத்துவைத்து, தித்திப்புள்ள வஸ்துக்களை எதிரே காண்பித்து, அக்குழந்தையைக் கூப்பிடுகின்ற கிருபையுள்ள தாயைப்போல, இல்லற தருமங்களைச்செய், யாகங்களைச்செய், அஃது நன்மையென்று விகசிதமான வேதவாக்கியம் சொல்லுகின்ற கருத்துவேறாகும்; சுவர்க்க விருப்பமுள்ளவர்கள் அக்கருத்தின் நிர்ணயத்தை அறியார்கள். எ-று.

ப-ம். 'மண்ணுகர் பிள்ளை' என்பதனால் விடயத்தை நுகரும் அறிவிலி என்பதும், 'நோய்' என்பதனால் பிறவித் துன்பம் என்பதும், 'இரங்கி' என்பதனால் அருளுற்று என்பதும், 'தீம்பண்டங்காட்டி' என்பதனால் சுவர்க்காதி பதங்களைக் காட்டும் என்பதும், 'மருந்துகளொளித்து வைத்து' என்றதனால் ஞானமுதத்தை யொளித்துவைத்து எனவும், 'அழைக்கின்றதாய்' என்றதனால் அவ்வமுதத்தைக் கொடுக்க வேதம் விளிக்கும் என்பதுங் கொள்ளக் கிடந்தன.

இ-ம். வேதம் இம்மை இன்பத்தை நீக்குவான் மறுமை இன்பத்தைக்கூறி அஃது நீங்கினபின் இதையும் நீக்கிப் பரமசுகமாக்கும் பொருட்டு அங்ஙனங்கூறினதென்பதாம். 73

அ-கை. வேதம் போகபாக்கியங்களை அனுபவிக்க விதியாது என்பதற்கு உவமைகூறல்.

போகமாருயிர் கண்டதை யுண்பதும்புணர்வது மியல்
பேகாண், ஆகமங்களுஞ் சுபாவத்தை விதிக்குமோவத்தனை

தெரியாதோ, காகமே கறுத்திடு நெருப்பேசுடு கசந்திடுவேம் பேநீ, வேகவாயுவே யசையென வொருவரும் விதித்திடல் வேண்டாவே.

இ-ள். போகத்தைப் புசிக்கின்ற சீவர்களுக்கு நேர்ந்த பதார்த் தங்களை அருந்தலும், நேரிட்ட பெண்களைப் பொருந்தவும் சுபாவமே யாம்; வேதங்களும் சுபாவத்தை நியமிக்குமோ? அவ்வளவு தெரியாதா? காக்கையே! நீ கறுத்திடுவாய், அக்கினியே! நீ சுடுவாய், வேம்பே! நீ கசந்திடு, அதிவேகமுள்ள காற்றே! நீ சலிப்பாய், என்று ஒருவரும் நிய மிக்க வேண்டுவதில்லையே. எ-று.

ப-ம். அறிவின்மையால் உயிர்கட் கியல்பான அருந்தல் பொருந் தலென்னும் வாசனையை வேதம் விலக்குமேயன்றி விதிக்குமோ என் பார் "போகமா ருயிர்கண்டதை யுண்பதும் புணர்வது மியல்பேகாண், ஆகமங்களுஞ் சுபாவத்தை விதிக்குமோ" எனக்கூறினர்.

இ-ம். வேதம் போகபாக்கியமே பயனான கன்மத்தை விலக் கினதே யன்றி விதித்ததன்று என்பதாம். 74

அ-கை. கன்மகாண்ட வாக்கியம் பூருவபக்ஷம் என்பதற்கு உத்தி கூறல்.

கள்ளுமூனுநீ விரும்பினன் மகங்கள்செய் காமத்தின் மனதானல், கொள்ளும் பெண்டொடு கலவிசெய் யெனிலி வன் குறையெலாந் தொடாநின்றே, தள்ளும்வேதத்தின் சம் மதஞ் சகலமுந் தவிர்வதே கருத்தாகும், விள்ளுமிவ்விதியென் னெனிற் பூருவநியமமாம் விதியன்றே.

இ-ள். மதுவையும் மாமிசத்தையும் நீ யுண்ண இச்சித்தால் யாகங் களைச்செய்து புசிப்பாய்; காமவேட்கை யுண்டானல் விவாகஞ்செய்யு மனைவியோடு புணர்ச்சிசெய்வாய் என்றால், இக்காமி மற்றவைக ளனைத்

தையக் கொண்டாது நீக்குவதே வேதத்தினுடைய சம்மதம்; அப்படி அனைத்தும் நீக்குவதே அதன் அபிப்பிராயமுமாகும்; சொல்லாநின்ற இக்கன்மகாண்டவிதி என்னவென்றால் பூருவபக்ஷமாக நியமித்த விதியாம். எ-று. 75

அ - கை. இவ்விதி பூருவபக்ஷம் என்பதை வற்புறுத்தல்.

மதுவிறைச்சிக ளுண்ணென்ற சுருதிபின் மணந்துபா
ரெனல்பாராய், மிதுனவிச்சையும் புத்திரோற் பத்தியால்
விரும்பென்ற விதிபாராய், இதையும் விட்டொழி யதிநயிட்
டிக வன்னிக் கிகழ்ச்சியற் றதும்பாராய், அதையறிந்து கன்
மங்க ளாசைகளொழிந் தானந்தமடைவாயே.

இ - ள். மதுமாமிசங்களைப் புசியென்ற வேதமானது பின்பு ஆக்கிராணஞ் செய்தாற்போதும் என்பதைப்பார்; மனைவியோடு புணர்ச்சியின்பமும் மகப்பேறுண்டாம் பொருட்டு இச்சிப்பாயென்ற விதியைப் பார்; இவ்விதியையும் விட்டொழிந்த சந்நியாசிக்கும் நைஷ்டிகப் பிரமசாரிக்கும் நிந்தையில்லாததும் பார்; அக்கருத்தை உணர்ந்து கன்மங்களின்மேல் வைத்த இச்சைகள் நீங்கி ஞானத்தினாற் பிரமானந்தத்தை அடைவாய். எ-று.

ப - ம். இல்லறதருமஞ் செய்யாமையால் துறவிக்கும் பிரமசாரிக்கும் இழிவின்மை பாரென்பார், "அதிநயிட்டிக வன்னிக்கிகழ்ச்சியற்றதும் பாராய்" எனக் கூறினார்.

"மிதுனவிச்சையும் புத்திரோற்பத்தியால் விரும்பென்ற விதிபாராய்" என்றமையால், நேரிட்ட ஸ்திரிகளைப் புணரில் இம்மையிற் பாவமும் பழியும், மறுமைக்கண் நரக துக்கமுமுண்டாகு மாதலால், ஒருத்தியை மணஞ்செய்து அவளைப் புணர்தி என்ற வேதம், பின்னே விதியாத தினத்திற்கூடில் துர்ப்புத்திரனுண்டாய் அவனால் இம்மையிற் பாவமும் பழியும் மறுமையில் நரகதுக்கமும் வருமாதலால் சத்புத்திரனுண்

டாய் உனக்கும் உன் குலத்துக்கும் இம்மையிற் புகழும்! மறுமையிற் சுவர்க்கமுமுண்டாதற் பொருட்டு விதித்ததினத்தில் அவளைப்புணர்தி என்று சொல்லும் விதியையும் நீ பார்ப்பாய் என்பதாயிற்று.

இல்வாழ்வான் மனைவியோடு கூடுதற்கு விதித்த தினமாவன:— மாதர்கட்கு இருதுகாலம் வழக்கமாகப் பதினாறு நாட்களென்பர் அவற்றுள், மாதவிடாயானது முதல் நான்குதினம் பெரியோர்களால் நிந்திக்கப்படுகின்றது; ஆதலால் அந்நான்கு தினமும், ஏகாதசி, திரயோதசிகளும் நீக்கி ஏனைப் பத்துதினத்திற் கூடுவது முறைமை: மாதவிடாயான நாள்தொடங்கி ஆறு, எட்டு, பத்து, பன்னிரண்டு, பதினான்கு, பதினாறுந் தினங்களிரவிற் சேர்ந்தால் பிள்ளைகளும், ஐந்துமுதல் ஒற்றைப்பட்ட நாட்களிற் சேர்ந்தால் பெண்களும் பிறக்கும்; ஆதலால் புத்திர விருப்பமுள்ளவன் இரட்டைத்தினத்திற் சேரவேண்டியது: எவன் நீக்கவேண்டிய முதல் நான்குதினத்தையும், ஏகாதசி, திரயோதசி, அமாவாசை, பௌர்ணமிகளையும் நீக்கி மற்றைத்தினத்தி னிரவிற் றன் மனைவியோடு சேருகிறானோ அவன் கிரகஸ்தனாக விருப்பினும், பிரமசாரி யென்றே சொல்லப்படுகிறானென்று தர்ம சாஸ்திரத்திற் சொல்லப்பட்டிருப்பதால் அவையே மனைவியோடு புணர்தற்கு விதித்ததினமாமெனக.

இ - ம். வேதம் கன்மகாண்டத்தில் கூறும் வருணாச்சிரம கன்மங்கள் அதனாலுண்டாகும் போகவின்பங்கள் அனைத்தும் பின்பு துன்பங்களாக வருத்துதலைக் கண்டு அவற்றைவிடுத்துப் பரம சுகத்தைத் தேடவேண்டும் என்பது அதனபிப்பிராயம்; ஆதலால், இவற்றை ஒழித்துச் சுகத்தைத் தேடல்வேண்டும் என்பதாம். அதாவது பரமாத்மாவை ஞானத்தாலன்றிக் கர்மத்தால் அடையப்பாற்றன்று எனக் கூறினதாம். 76

அ - கை. முற்கூறிய வண்ணம் ஞானம் அஞ்ஞானத்துக்குச் சத்துருவாயின், அஃது இஃதோடுஞ் சேர்ந்து ஒரு தொழிலைச் செய்யலாமோ? என வினாதல்.

உலகமானவஞ் ஞானமுங்கருமமு முறவென்ற வழி கூடும், பலவுமானவஞ் ஞானமுஞானமும் பகையென்ப துண்டாகுல்; நிலவிலேமறுப் போலவஞ்ஞானமு நிமலஞானத் தோடே, குலவிநின்றிந்தச் சிருட்டிகள் செய்யவுங் கூடுமோ குருமூர்த்தி.

இ - ள். ஆசிரியரே! சகத்துருவமான அறியாமையும் சற்கருமங்களும் நட்பென்றமார்க்கம் ஒக்கும்; நாநாவிதமான அஞ்ஞானமும் ஏகமான ஞானமும் சத்துரு என்பது உள்ளதாகுல் சந்திரனிடத்தில் களங்கம் இருப்பதுபோல அஞ்ஞானமானது களங்கமற்ற ஞானத்தோடும் சேர்ந்திருந்து, இச்சிருட்டியாதிகளைச் செய்யவுங் கூடுமா. எ-று.

இ - ம். தமப்பிரகாசங்கள் தம்மின் விரோதிகளாகலின் இரண்டுங் கூடிநிற்றல் கூடாதென்பது சீடன் கருத்து. 77

அ - கை. மேல்விஞவிற்கு உத்தரங் கூறல்.

சொரூபஞானமும் விருத்திஞானமுமென்று சோதிஞானமுமிரண்டாம், சொரூபஞானமே விருத்தியின் ஞானமாய்த் தோன்றும் வேறில்லைமைந்தா, சொரூபஞான மஞ்ஞானசத்துருவென்று சுழுத்தியிற் கண்டாயே, சொரூபஞானத்தின் மருவுமஞ்ஞானத்தைச் சுடும்விருத்தியின் ஞானம்.

இ - ள். மாணுக்கனே! சுயம்பிரகாசமான சைதன்னியமே சொருபஞானம் எனவும், விருத்திஞானம் எனவும் இருவகையாம்; சொருபஞானமே விருத்தி ஞானமாய்த் தோன்றுமே அன்றி மற்றொன்றில்லையாம்; ஸ்வரூப ஞானமானது அஞ்ஞானத்துக்குப் பகையென்று, சுழுத்தியவத்தையில் பார்க்கவில்லையோ; ஸ்வரூப ஞானத்தில் கூடியிருந்த அறியாமையைச் சமாதியிலுதித்த விருத்திஞானமானது எரிக்கும். எ-று.

ப-ம். சுத்தசைதன்னியம் என்பார் "சோதிஞானம்" எனவும், பரஞானம் என்பார் "சொரூபஞானம்" எனவும், விசாரஞானம் என்பார் "விருத்திஞானம்" எனவும் சுழுத்தியில் அறிவின்மையின் வசமாகாமல் தானறிவாக இருந்ததை எதிரிட்டுக் காண்கின்றது என்பார், "சொரூபஞான மஞ்ஞான சத்துருவென்று சுழுத்தியிற் கண்டாயே' எனவும், சமாதியில் உதயமான இவ்வறிவினால் அஞ்ஞானம் நசிக்கும் என்பார், "சொரூபஞானத்தின் மருவு மஞ்ஞானத்தைச் சுடும் விருத்தியின் ஞானம்" எனவுங் கூறினார்.

இ-ம். ஆத்ம சங்கற்பமான அறிவிற்கு உண்டான அறியாமை அவ்வறிவில் உதயமான அனுபூதியினால் கெடும் என்பதாம். 78

அ-கை. காரணத்தால் கெடாத அஞ்ஞானம் காரியத்தால் எங்ஙனங் கெடும்? என்ற வினாவிற்கு உத்தரம்.

துருத்திமாயையைச் சுழுத்தியிற்சுடாதது சொரூபஞானந்தானே, விருத்திஞானமாய்ச் சுட்டதெப்படியெனில்வெய்யிலா துலகெங்கும், பரித்தசூரியன் சூரியகாந்தத்திற் பற்றியக்கினியாகி, எரித்தவாறும்போற் சமாதியில்விருத்தியா லெறிக்குமென் றறிவாயே.

இ-ள். துருத்தியைப்போல உசுவாச நிசுவாசங்களையுடைய சடமாகிய அஞ்ஞானத்தைச் சுழுத்தியின்கண்ணே கெடுக்காதது சொரூபஞானந்தானே; அதுவே விருத்திஞான ரூபமாய் எரித்தது எங்ஙனம்? எனின், சகத்தில் எவ்விடத்தும் வியாபித்த தனது உஷ்ண கிரணத்தினால் எரிக்காமல் சூரியனானவன் சூரியகாந்தக் கல்லிற்பற்றி அக்கினி ரூபமாய்ச் சகல வஸ்துக்களையுந் தகித்த தன்மையைப்போல, நிட்டையின்கணுதிக்கும் பூரணவிருத்தி ஞானத்தினால் திரிசிய ரூபமான அஞ்ஞானத்தைக் கெடுக்கும் என்று உணர்வாய். எ-று.

இ-ம். காரணமான கிரணத்தால் கெடாத பொருள்கள் காரியமான அக்கினியால் கெடுவதுபோல, சொரூபஞானத்தால் கெடாதஅஞ்

ஞானம் அதினுதயமான பூரணவிருத்தி ஞானத்தால் கெடும் என்பதாம். 70

அ - கை. விருத்திஞானம் அந்தக்கரணகாரியம் ஆதலின் அதைக் கருமம் எனப்படாதோ? என வினுதல்.

அருளுடையனே திரிவித கரணத்தாலாகிய தொழிலெல்லாம், கருமமல்லவோ விருத்திஞானமு மந்தக்கரண காரியமன்றோ, உரியகன்மமஞ் ஞானத்தைக் கெடுக்குமென்றோதினு லாகாதோ, பெரிய ஞானமென் றதற்கொரு பேரிட்ட பெருமையையுரையீரே.

இ - ள். அடியேன் சங்கைக்கெல்லாம் தக்கவிடை அநுக்கிரகஞ் செய்யாகின்ற எனது குருவே! மனம் வாக்குக்காயம் என்கின்ற, முக்கரணங்களால் உண்டான கிரியைகள் அனைத்தும் கன்மம் அல்லவா? அகம்பிரமமென்னும் விருத்தி ஞானமும் அந்தக்கரணத்தின் பரிணாமமாதலின் அதன் காரியமல்லவா? இங்ஙனங் காரியமாகக்கூறிய விருத்தி ஞானமென்னும் மானச கன்மமானது அஞ்ஞானத்தை நீக்கும் என்று உரைக்கின் ஆகாதா? மஹத்தான ஞானமென்று அக்கன்மத்திற்கு ஒரு நாமந்தரித்த மகிமையைச் சொல்வீர். எ-று.

இ - ம். வெளிப்படை. 80

அ - கை. மேல்வினுவிற்கு உத்தரம்.

விருத்திஞானமந் தக்கரணத்தொடு விருத்தியாகினு மைந்தா, ஒருத்திமக்களே தங்களிற்பகைக்கின்ற துலகெங்குங் கண்டோமே, கருத்தனுகிய புருடதந்திரங்களாங் கருமங்களைப்போல, வருத்தஞானமோ புருடதந்திரமன்று வத்துதந்திரமாமே.

இ - ள். மாணாக்கனே! நான் பிரமமாகின்றேன் என்னும்,விருத்தி ஞானமானது மனத்தினுடைய விருத்தியானாலும், ஒருதாயின் புத்திரர்கள் தங்களுக்குள்ளே பகைக்கின்றதை சகம் எங்கும் பார்த்திருக்கின்றோம்; கன்மங்களானவை அகம் பாவமுள்ள புருட தந்திரங்களேயாம்; விசாரப் பிரயத்தனத்தா லுளதாகா நிற்கும் விவேக ஞானமானது அவற்றைப்போலப் புருடதந்திரம் அன்றாம், வஸ்துவினது தந்திரமாம். எ-று.

இ - ம். விருத்திஞானமுங் கன்மமும் அந்தக்கரண காரியம் ஆயினும், புருடதந்திரத்தால் மனதிலுதிக்கும் கன்மத்தை வஸ்து தந்திரத்தால் மனதிலுதிக்கும், பூரணவிருத்தி ஞானங் கெடுக்கு மாதலின், அவ் விருத்திஞானங் கன்மம் ஆகாது என்பதாம். 81

அ - கை. போன சன்மங்களென்ற செய்யுள் முதல் இதுகாறும்கன்மமானது ஞானம் உதிப்பதற்கு ஏது அன்றெனை, அதை விசார ஞானத்தால் நீக்கி, மேல் அவ்விசார ஞானத்தையும் நீக்குவான் தொடங்கி, அதை யோகஞானமும் விவேகஞானமும் என, இரு திறனுக்க் கூறுகின்றார்.

வகுத்தகன்மங்கள் செய்யவுந்தவிரவு மற்றொன்றாக்கவுங்
கூடும், மிகுத்தஞானமப் படியன்று தியானமும் விவேகஞான
மும் வேறே, செகத்தி லொன்றையொன் றிவன்பாவிக்குந்
தியானகற் பிதயோகம், முகத்தமாக்கண்ட ஞானமேவாத்தவ
மோகமாய் மயங்காதே

இ - ள். புருடர்களால் வகுக்கப்பட்ட கன்மங்களானவை விதித்தபடி செய்தற்கும் ஒழிதற்கும் மற்றொருவிதமாக விரும்பியபடி செய்தற்கும் ஆம்; பூரணஞானமானது அத்தன்மையை யுடையதன்று; தியானமும் விவேகஞானமும் வேறாகும்; உலகத்தின்கண் ஒரு வஸ்துவை மற்றொரு வஸ்துவாக இப்புருடன் பாவிக்கின்ற கற்பனாயோகமானது

தியானமாம்; பிரத்தியக்ஷமாகத் தரிசித்த ஞானமே உண்மையான விவேகஞானமாம்; இவற்றிலறியாமை யுடையவனும் மயங்காதே. எ-று.

இ-ம். யோகஞானம் கற்பிதமான பரோக்ஷமும் விவேகஞானம் உண்மையான அபரோக்ஷமும் ஆம், என்பதாம். 82

இதுவுமது.

கண்டறிந்தது ஞானங்கேட்டதுதனைக் கருதுபாவனை
யோகம், கண்டபேர்சொலக் கேட்டதுமறந்துபோங் கண்டது
மறவாதே, கண்டவத்துமெய் தியானவத்துக்கள்பொய் கறுவி
யஞ்ஞானத்தைக், கண்டவக்கணங் கொல்வது ஞானமே கரும
மென் றறிவாயே.

இ-ள். அனுபவமாகப் பார்த்துணர்ந்தது ஞானமாம்; கேட்டதைத் தியானிக்கின்ற பாவனையானதுயோகமாம்; பார்த்தவர்கள் சொல்லக்கேட்ட பொருள்மறந்துபோம்; பார்த்தது மறக்காது; பார்த்தபொருளானது உண்மையாம்; பாவிக்கின்ற பொருள்களானவை மித்தையாம்; கோபித்து அறியாமையைப் பார்த்த அந்தக்ஷணத்தில் கெடுப்பது ஞானமேயன்றிக் கன்மம் அன்று; இதனையுணர்வாயாக. எ-று.

இ-ம். தியானயோகங் கேட்டவண்ணம் பாவித்தலும், விவேகஞானம் பாவித்தவண்ணம் கண்டாலும் ஆதலால், இஃதே உண்மை என்பதாம். 83

அ-கை. தியானயோகம் கற்பிதம் எனின், அதில் உதிக்கும் முத்தியும் கற்பிதம் அன்றோ? என்னும் வினாவிற்கு உத்தரம்.

சருவமுத்தியைத் தருகின்ற தியானமுஞ் சத்தியமன்
றென்றால், சருவமுத்தியுஞ் சத்தியமன்றென்று சங்கியாதே
நீகேள், உருவங்கெட்டவன் றியானிக்கும்பொழுதி லவ்வுரு

வம் வாத்தவமன்றே, உருவமாகு மப்பொழுது கண்ணுற்கண்டவுருவம்வாத்தவமாமே.

இ - ள். சர்வம் பிரமமயம் என்னும் வீட்டைக் கொடுக்கின்ற தியானத்தையும் உண்மை அன்றென்று சொன்னுல், அத்தியானத்தில் வரும் பூரணுனுபவமும் உண்மை அன்றென்று நீ சங்கியாதே ; அதற்குச் சமாதானம் சொல்வோம் கேட்பாயாக ; பிரமஸ்வரூபத்தைக் கேள்வியுற்றவன் சிந்திக்கும்பொழுது அப்பாவனு ரூபமாகிய ஸ்வரூபம் உண்மை அன்று ; அப்பாவனையானது அந்த ஸ்வரூப மாகும்போது ஞானதிருஷ்டியினுற் பார்த்த ஸ்வரூபமானது உண்மையாம். எ-று.

இ - ம். பாவனை கற்பிதமும் அதில் நின்று அதைக் கரைத்தெழாநின்ற பாவிப்பவன் உண்மையும் ஆதலால், அப்பாவனை மித்தையே, அதனுல் உதயமாகு முத்தி சத்தியமே ஆம் என்பதாம்.

அ - கை. பொய்க்கு மெய்மை உதிப்பிக்குஞ் சத்தி எது? என்ற வினுவிற்கு உத்தரம்.

சடமதாகிய தியானமெய்யாகிய சர்வமுத்தியை நல்கும், திடமானதெப் படியெனிலவரவர் தியானமே பிறப்பாகுப, உடலமாசையாற் றியானிக்கிற் றியானித்த வுடல்களாகுவர் மைந்தா, தொடர்பவங்கெடச் சொரூபமே தியானிற்கிற் சொரூபமாகுவர் மெய்யே.

இ - ள். மாணுக்கனே ! பொய்யாகிய தியானமானது சத்தியமாகிய பரிபூரணமான கைவல்யத்தைக் கொடுக்கின்ற திடத்தை யுடையதாயிருப்பது எங்ஙனம்? என்று கேட்கில், அவரவர் மரணகாலத்திலே சிந்திக்கிற ரூபமாகவே மறுசநநமுண்டாகும் ; ஆகையால், தேக இச்சையினுற் சிந்திக்கச் சிந்தித்த வடிவமாவார்கள் ; தொன்றுதொட்டுவருகின்ற சநநம் மீண்டுண்டாகாமல் கெடும் பொருட்டு ஆத்மஸ்வரூபத்தைச் சிந்திக்க அச்சொரூபமே ஆவார்கள் ; இஃது உண்மையாம். எ-று.

9

ப-ம். தியானம் சிற்சட வுருவமாகும் என்பார் "தியானித்த உடல்களாகுவர்" எனவும், "சொரூபமாகுவர்" எனவுங் கூறினார்.

இ-ம். தியானத்திற்குக் காரண உருவம் சத்தும் காரிய உருவம் அசத்தும் ஆதலின், அதற்கு அந்தச் சத்தை அழிவிக்கும் வல்லமை உண்டாயிற்று என்பதாம். 85

அ-கை. தியானத்திற்கு இச்சத்தி யிருக்க விசாரஞானம் யாதுக்கு? என்ற வினாவிற்கு உத்தரம்.

பிரமரூபத்தைத் தியானித்தபேர்களும் பிரமமாகுவ ரென்றால்
நரசரீரமாங் குரவனே விசாரமேன் ஞானமேனென்றதே
பரமபாவனை பரோக்ஷமாம் பின்பந்தப்பரோக்ஷமேயபரோக்ஷம்
திரவிசாரமா ஞானமேமுத்தியாந் தீர்வையீதறிவாயே.

இ-ள். மானிடவடிவமாக வெழுந்தருளிய குருவே! பிரமஸ்வரூபத்தைச் சிந்தித்தவர்களும் அப்பிரமமே ஆவார்களென்று சொன்னால் விசாரம் யாதினுக்கு? ஞானம் யாதினுக்கு? என்று கேளாதே பிரமத்தியான மானது முன்னே தியானிக்கும்போது பரோக்ஷஞானமாம், அத்தியானம் பரிபாகமானபின்பு அந்தப் பரோக்ஷஞானமே உபாசனா வீக்ஷணியத்தால் அபரோக்ஷஞானமாம்; திடமான விசாரத்தினால் உதிப்பதான அந்த அபரோக்ஷஞானமே மோக்ஷமாம், ஆதலால் இதுவே முடிவென்றறிவாயாக. எ-று.

இ-ம். தியானத்தின் காரியம் யோகமும், காரணம் விசாரஞானமும் ஆதலால், அவ்விசாரஞானமே வீடடைதற்கு வேண்டும் என்பதாம். 86

அ-கை. முன்பு தியானயோகத்தை நீக்கி மேல் விசார ஞானத்தை நீக்குவான் விருத்திஞானம் இருக்கின் சுவாநுபவம் எங்ஙனங் கூடும்? என்ற வினாவிற்கு உத்தரம்.

வீடதாம்பரி பூரணசொரூபத்தில் விருத்திஞானமுங்கூடிச்
சேடமாகினு லகண்டமா மனுபவ சித்தியெப்படியென்றால்
சாடிநீர்மண்ணைப்பிரித்ததேற்றும்பொடிதானுமன்றேடுமோயும்
ஊடிஞானமுமறிவிலாமையைக்கெடுத்தொக்கவேகெடுந்தானே

இ-ள். முத்திரூபமாகிய பரிபூரணமான பிரமஸ்வரூபத்தில் அந்தக்கரணத்தின் விருத்திரூபமான தத்துவஞானமுஞ் சேர்ந்து விசேடமானல், அகண்டாகார அனுபவம் சித்திப்பது எங்ஙனம்? என்னின், சாடியிலிருக்கும் சலத்தின்கண் உள்ள சேற்றை வேறு செய்த தேற்றுங்கொட்டைத் தூளும் அச்சேற்றோடுங் கெடும்; அதுபோல, விருத்திஞானமும் பகைத்து அஞ்ஞானத்தைக் கெடுத்துத் தானுங் கூடவே நசிக்கும். எ-று.

இ-ம். விசாரஞானம், அறிவுதயமாம்பொருட்டு அறிவின்மையைக் கெடுத்து, அதனோடுங் கெடுவதே அன்றிச் சேடிக்கமாட்டாது, என்பதாம். 87

அ-கை. கைதவங்கள் என்ற செய்யுள்முதல் இதுகாறும் உகபற்சிருட்டியால் உண்டான சஞ்சிதம் பரஞானத்தால் கெடும் எனவும், அதனால் உண்டான மனோகாரியமான கன்மத்தை அதன் காரணமான விசாரஞானங் கெடுத்து, அஃதும் இதனோடுங் கெடும், எனவும் கூறி, இச்செய்யுளில் அவ்வனுபவமுள்ள சீவன்முத்தர் இலக்கணங் கூறல்.

இந்தநிச்சய முத்தருளனுபவ மிருப்பதெப்படி யென்றால், சிந்தையற்றநூ மண்டலவிசாரனுஞ் சிசுவும்போற் சுகமாவர், பந்தமுத்திகண் மறந்துபோமுண்டென்று பலர்சொலினுங்கையாவர், அந்தரத்தையுண் டுமிழ்ந்தமேதார் கொசுகெனுமவர்களை நகையாரோ.

இ-ள். இந்த நிச்சயரூபமான அகண்டாநுபவமானது சீவன்முத்தருக்குள்ளே அநுபவமாக இருக்கின்றது எவ்வண்ணம்? என்றால், பகைவர் உளரென்னுஞ் சிந்தையின்றிப் பூவலகமுழுதும் ஆளுகின்ற சக்கிரவர்த்தியையும் நன்கு தீதென்றறியாத குழந்தைகளையும் போல, அவர்கள் சுகஸ்வரூபராயிருப்பார்? பந்தமுத்தி ரூபமானபாவனாவிகற்பங்கள் ஒழிந்துபோம்; அவை உளவாம் என்று அநேக ருரைக்கில், சிரிப்பார் ஒரு மசகமானது ஆகாயத்தை விழுங்கிக் கக்கிற்றென்னுமவர்களை யார்தான் நகையார்கள்? எ-று.

ப-ம். சுவாநுபூதி எப்போதும் ஒரு தன்மையாக விளங்குகின்றதனக்கு, அறியாமையால் பந்தமும் அதன் நிவர்த்தியான வீடும் இப்போது உண்டானது இன்று என்பார், "பந்த முத்திகள் மறந்துபோமுண்டென்று பலர்சொல்லி னகையாவர்" எனக்கூறினார்.

இ-ம். அறிவறியாமை இன்றி முன்னுள்ள சத்த மாத்திரமாக விளங்கிச் சுகித்திருப்பவனே சீவன்முத்தன் என்பதாம்.

அ-கை. மத்தியில் அவாந்தரமாகத் தோன்றும் கற்பனையில் மயங்காமைக்கு ஓர் கதைகூறல்.

மலடிமைந்தனுந் தானுவிற்புருடனும் வான்மலர் முடிசூடி
இலகுகந்தர்ப்ப நகரிலேசுத்திகை யிரசதம்விலைபேசிக்
கலகமாயின ரிடையினிற் கயிற்றராக் கடித்திருவருமாண்டார்
அலகையாயினரெனும்விவ காரத்தையறிந்தவன் மயங்கானே.

இ-ள். மலடி புத்திரனும், குற்றியிற்றோன்றிய புருடனும், ஆகாயதாமரைப் பூவைச் சிரசில்தரித்து, விளங்காநின்ற கந்தர்வ நகரத்திலே இளிஞ்சில் வெள்ளியை விலைபேசி பிணக்கடைந்தார்கள்; நடுவில் ரச்சு சர்ப்பந் தீண்டி முன்சொன்ன இரண்டுபேர்களும் இறந்து பேயாயினார்கள் என்கிற கதையினது நியாயத்தைத் தெரிந்தவன் மயங்கமாட்டான். எ-று.

இ - ம். கற்பனையின் மூலந்தெரிந்தவன் அதனிடத்தில் மயங்
கான் என்பதாம். 89

அ - கை. இதுகாறும் காரியோபாதியான அவித்தையினுல் உண்
டான மயக்கத்தை நீக்கி, மேற்காரணோபாதியான மாயையினுல்
உண்டாகும் மயக்கத்தைக் களைதற்பொருட்டு, அஃதும் மித்தை
யாதலின், அதனுல் வரும் பலப்பிராப்திகளும் மித்தை என்று
அகற்றி, நீ சுவானுபூதியாக விளங்குவாய் எனக்கூறல்.

மாயையென்பது பொய்யெனிலதுபெற்ற வகையெலாம்
பொய்யாமே, தாயையன்றி மக்களுக்கொரு பிரவியுஞ்சாதியும்
வேறுண்டோ, சேயசொர்க்கமு நரகமுநன்மையுந் தீமையும்
பாராமல், தூயசத்துச்சித் தானந்த பூரண சொரூபமா யிருப்
பாயே.

இ - ள். மாயையென்று சொல்லப்படுவது மித்தை யென்றால்
அதனுல் உண்டான பொருளனைத்தும் மித்தையேயாம்; எங்ஙனமெ
னின், தாயின் பிறப்புஞ் சாதியுமன்றி அவள் புத்திரருக்கு வேறொரு
பிறப்பும் குலமும் உண்டோ இல்லை ஆதலால், செவ்விதான சுவர்க்
காதி பதங்களும், ரௌரவாதி நரகங்களும் நன்கென்பவையும் தீங்கெ
ன்பவையும் இவையெனப் பாராமலே பரிசுத்தமான சச்சிதாநந்தமாகிய
பரிபூரண ஸ்வரூபமாக இருப்பாய். எ-று.

இ - ம். மாயை மித்தையாதலின் அதன் காரியங்கள் அனைத்து
மித்தையேயாம் என்பதாம். 90

அ - கை. மாயாகாரியம் மித்தை ஆயின் பிரமன் முதலிய அனைத்
தும் மித்தையாமே ? அங்ஙனங் கூறின் குற்றம் வாராவோ ? என
வினுதல்.

பங்கயாசனன் முதற்பல தேவரும் பாருள பெரியோரும்
கங்கையாதியாந் தீர்த்தமுந் தேசமுங் காலமுமறைநாலும்

ஆங்கமாறுமந்திரங்க ளுந்தவங்களு மசத்தியமெனச்சொன்னால்
எங்ஙனுய்கிரே யதனாற்குற்றங்க ளில்லையோ மொழிவீரே.

இ - ள். எமதாண்டவரே? பிரமன் முதலிய சமஸ்த தேவர்களும் பூமியின்கண்ணுள்ள மகான்களும், பகீரதி முதலிய தீர்த்தங்களும், புண்ணிய தேசங்களும், திரிகாலங்களும் வேதங்கள் நான்கும், சாத்திரங்களாறும், பிரணவாதி மகாமந்திரங்களும், தவங்களும் மித்தை என்றுரைக்கில், எங்ஙனஞ் சொல்லுவதனால் பிழைக ளில்லையோ? சொல்லீர். எ-று.

இ - ம். வெளிப்படை. 91

அ - கை. மேல்வினாவிற்கு உத்தரம்.

சொப்பனந்தனிற் கண்டதைப் பொய்யென்றுசொல்வது
பிழையானால், அற்பமாயையிற் றோன்றிய சகங்களை யசத்தெ
னல் பிழையாமோ, சொப்பனந்தனிற் கண்டதைப் பொய்யெ
ன்று சொல்லலா மெனின் மைந்தா, அற்பமாயையிற் றோன்றி
யசகமெலா மசத்தியமெனலாமே.

இ - ள். புத்திரா! கனவில் கண்டதை மித்தையென்று சொல்வது குற்றம் ஆயின், அற்பமாகிய மாயையினிடத்திற் றோன்றிய உலகங்களனைத்தும் மித்தையென்றால் குற்றமாம்; கனவில் கண்டதை மித்தையென்று சொல்லலாமெனில், சிறுமையாகிய மாயையினிடத்தில் உண்டான உலகமனைத்தையும் மித்தையென்றுரைக்கலாம். எ-று.

இ - ம். சொப்பனம்போல மாயா காரியமான சகசீவ பரங்கள் என்றும் மித்தையாதலின், அவைகளின் இயல்பைக் கூறுதலால் குற்றமில்லை என்பதாம். 92

அ - கை. சத்து அசத்தின் உண்மை இஃதெனக் கூறல்.

பொய்யை மெய்யென்ற மூடர்புண்ணியரென்று புராண
ங்கூப்பிடுமானால், மெய்யை பொய்யென்ற ஞானிக்குக் குற்றங்

கள் விசித்த சாத்திரமுண்டோ, பொய்யதேதெனினு மரூபங்க ளாம் பூதமாகிய மாயை, மெய்யதேதெனிற் சச்சிதானந்தமாய் வியாபிக்கு மான்மாவே.

இ-ள். மித்தையைச் சத்தியமென்ற அறிவிலாரைத் தருமவான் களென்று அஷ்டாதச புராணங்களு முறையிடுமாயின், உண்மையை உண்மையென்ற ஞானவான்களுக்குக் குற்றங்களை நியமித்த நூல்களு முளவோ? மித்தையாவது எது! எனில் நாமரூப வடிவங்களான பஞ்சபூத பௌதிகங்களாகிய மாயையேயாம்; தத்துவம்யாது? எனில், சச்சிதாநந்த ஸ்வரூபமாக வியாபித் திருக்கும் ஆத்ம ஸ்வரூபமே யாம். எ-று.

இ-ம். ஆத்மா அனாத்மாவின் இலக்கணங் கூறினதாம். 93

அ-ங்க. மாயையின் தன்மை இஃதெனத் தோன்ற அறுவகை யால் வினுதல்.

மாயையென்பதே துடையராரெப்படி வந்தது வருவா னேன், மாயையென்பது பிரமத்தின் வேறெனின் வத்துவுமிர ண்டாமே, மாயையென்பதும் பிரமமுமொன்றெனின் வத்து வும் பொய்யாமே, மாயையென்ற மேகங்களுக் கொருசண்ட மாருதகுருமூர்த்தி.

இ-ள். மாயை யென்கிற மேகங்களுக்கு ஒப்பற்ற பெருங்காற் றாகிய தேசிகமூர்த்தியே! மாயை என்று சொல்லுவதுயாது? அதனை உடையவர் யாவர்? எவ்விதம் உதயமாயிற்று? உண்டான காரணம் என்ன? மாயை என்று சொல்வது பிரமத்துக்கு வேறானது என்று ரைக்கின் வஸ்துவுந் துவிதமாமே? மாயையென்று சொல்லப் படுவ தும் பிரமமென்று சொல்லப்படுவதும் ஏகமென்றால், மாயாவஸ்துவைப் போலப் பிரமவஸ்துவும் அசத்தியமாமே? இதனை அருளுவீராக. எ-று.

இ - ம். மாயையின் உருவத்தையும், அதை உடையவர்களையும் அதனுற்பத்தியையும், அஃது உதித்ததற்குக் காரணமும்; அஃது பிரமத்திற்குப் பின்னமாயின் வஸ்து துவிதமாமே எனவும், அபின்னமாயின் வஸ்துவும் மித்தையாமே எனவும், அதனுண்மையைத் தெரிய வினவினதாம். 94

அ - கை. மேற்கூறிய அறுவகை வினாக்களில் முதல் நான்கு வினாவிற்கு உத்தரங் கூறல்.

அதனையின்னதென் றுரைத்திடப்படாமையா லவாச்
சியவடிவாகும்; இதுதனக்குளதுடலியா னுலகுமெய் யெனு
மவருடையோர்கள், கதையிலாதபொய் வந்ததிப்படியென்று
கண்டபேரிலைமைந்தா, விதனமாயையேன் வந்ததென்றாற்
புத்தி விசாரமற்றதனாலே.

இ - ள். மகனே! அம்மாயையை இத்தன்மையுள்ளதென்று சொல்லக்கூடாமையால் அவாச்சிய உருவமாம்; இஃது எனக்குள்ளது, இத்தேகம் நான், இச்சகம் சத்தியம் என்னும் அபிமானமுடையவர்களே அதனையுடையவர்கள்; காரணமில்லாத மித்தையானமாயை யுதித்தது இவ்விதமென்று பார்த்தவர்கள் இல்லை; திண்மயமான மாயையானது ஏன் தோற்றிற்று எனில், ஆத்மஞானவிசாரம் செய்யாததினால் வந்தது.

ப - ம். உருவம் அருவம் உருவாருவம் என மாயையைப் பகுத்துச் சொல்லக்கூடாதென்பார், "அவாச்சிய வடிவு" எனவும், தேகாதி பிரபஞ்சத்தை உண்மையென்று கொள்பவரே அம்மாயை உடையவரென்பார் "உடலியானுலகு மெய்யெனுமவருடையோர்கள்" எனவும், மித்தையாகத் தோன்றல் மாத்திரமே அன்றி உற்பத்தி இல்லை என்பார்" பொய்வந்த திப்படியென்று கண்டபேரிலை" எனவும், அம்மாயை தோன்றுதல் யாதினால் என விசாரிக்கும் விசாரம் இன்மையே அதனுற்பத்திக்குக் காரணம் என்பார், "மாயையேன் வந்ததென்றாற் புத்திவிசார மற்றதனாலே" எனவுங் கூறினார்.

இ - ம். மாயையின் உருவத்தையும், அதனை உடையவர்களையும், அதனுற்பத்தியையும், அஃது உதித்தற்குக் காரணத்தையும் இவையெனக் கூறினதாம். 95

அ - கை. ஐந்தாம் வினவிற்கு உத்தரம்.

அருவமாகுமாயாவித்தைகள்விளை யாடுமுன்றெரியாவே
உருவமாம்பலகந்தப்பசேனையா யுதித்தபின்வெளியாகும்
பிரமசத்திகளனந்தமாமதைக் கண்டுபிடித்திடல்கூடாதே
பரவுபூதங்கள்கண்டனுமானத்தாற்பலருக்கும்வெளியாமே.

இ - ள். இந்திரசாலஞ் செய்பவன் அருவமாகிய கந்தர்வ நகர முதலானவைகளைக் காட்டி விளையாடுதற்கு முன்பு அவன் மாயாவித்தைகள் தோன்றாவாம்; வடிவங்களாகத் தோன்றுகின்ற அந்த கந்தர்வ சேனைகள் உண்டானபின்பு அவ்வித்தைகள் விளக்கமாகும்; (அதுபோல) பிரமத்தினது சத்திகளானவை அநேகமாம்; அம்மாயாசத்தியைக் கண்டுபிடித்தல் கூடாததாம்; விரியும் பஞ்சபூதங்களைப்பார்த்து அனுமானப் பிரமாணத்தால் யாவர்க்கும் அப்பிரம சத்திகளுண்டென்று விளங்கும். எ-று.

இ - ம். மித்தையான சகந்தோன்றுதலின், அங்ஙனந் தோற்றுவிக்கும் மித்தையான மாயாசத்தி ஒன்று உளது என உணரவேண்டும் என்பதாம். 96

இதுவுமது.

காரியங்களுஞ்சத்தியா தாரமுங்காணுமற்றதுமாயம்
பாரினின்றமாயாவியுஞ் சேனையும்பார்ப்பவர்கண்காணும்
வீரியந்திகழ்வித்தையாயினசத்தி வெளிப்படாததுபோலப்
பேரியற்பிறமத்துக்குமுலகுக்கும் பிறிதுசத்திகளுண்டே.

இ - ள். அச்சத்தியினது ஆதாரமான பிரமமும் சிவேஸ்வர சகத்தாகிய காரியங்களுந் தோன்றும்; அம்மாயாசத்தியானது மாயமாயிருக்

கும்; பூமியின்கண் இந்த்ரமாயாவித்தை செய்பவனும், அவனுற் காட்டப்பட்ட சேனைகளும், காண்பவர் கண்ணிற்குத் தோன்றும்; கெம்பீரமாய் விளங்குகின்ற வித்தையாகிய சத்தியானது தோன்றாது; அதைப்போல, மகத்துவமுள்ள பிரம ஸ்வரூபத்துக்கும் சகத்துக்கும் மத்தியில் சிலசத்திகள் உளவாம். எ-று.

இ-ம். பிரமத்திற்கும் பிரபஞ்சத்திற்கும் மத்தியில் அவக்தாயாகத் தோன்றுகின்ற மாயை தனியே ஓர் முதலாகிப் பிரமத்திற்கு வேறுபட்டிராது, அதனால் வஸ்து இரண்டாகமாட்டாது என்பதாம். 97

அ-கை. ஆறும் வினாவிற்கு உத்தரம்.

சத்திசத்தனைத்தவிரவே றன்றுகாண்சத்தனுமாயாவி
வித்தைகாட்டியவிந்திரசாலம்போய் வித்துவானும்போலப்
புத்திமைந்தனேசத்திமானாகிய பூரணவான்மாவின் [பே.
வத்துநிர்ணயஞ்சொன்னதிட்டாந்தத்தின் வழிகண்டுதெளிவா

இ-ள். அறிவுள்ள மகனே! இந்திரசால சத்தியானது அதனைக் காட்டிய சாலக்காரனைவிட வேறன்றாம்; சத்தியையுடையானாகிய சாலக்காரன் காண்பித்த வித்தையாகிய இந்திரசாலம் நீங்கி வித்துவானும் வண்ணம்போல, சர்வசத்திமானாகிய பரிபூரண வாத்மாவின் ஸ்வரூப நிச்சயத்தைச் சொல்லிய திருஷ்டாந்தத்தினுடைய மார்க்கத்தைப் பார்த்துத் தெளிந்து கொள்வாய். எ-று.

இ-ம். சத்தனைத் தவிரச் சத்தி என்று ஒருவஸ்து வேறு இன்மையாலும், அச்சத்தி இல்லாத விடத்தும் சத்தன் இருக்கையாலும், அச்சத்தனுஞ் சத்தியும் எங்ஙனம் ஒன்றாம்? அங்ஙனம் ஒன்றாகாமையான் அச்சத்தியைப்போல அச்சத்தன் சத்தாகான் என்பதாம்

அ-கை. பிரதிபிம்பமான மாயாசத்தியை நீக்கி, பிம்பமான சிற்சத்தியை வெளிப்படுத்துவான், அசத்தான மாயாசத்தி உள்ளது என்பது எங்ஙனம்? என்ற வினாவிற்கு உத்தரம்.

இல்லையாகிய சத்தியையுண்டென்ப தெப்படியெனக் கேட்கில், புல்லையாதியா மசேதனப்பொருளெலாம் பூத்தநுக் காய்ப்பன்பாராய், நல்லையாமகனேயதிற் சிற்சத்தி நடந்திடா திருந்தக்கால், தொல்லை யாய்வருஞ் சராசரவுயிர்க்கெலாஞ் சுபாவங்கள் வேறுமே.

இ – ள். நற்குணங்களையுடைய புத்திரனே! மித்தையாகிய மாயா சத்தியை உளதென்பது எங்ஙனம்? என்று கேட்பாயாகில், புல முதலியனவாகிய சடவஸ்துக்க ளனைத்தும் அததற்குரிய காலத்தில் புஷ்பித்துக் காய்ப்பனவற்றைப் பார்த்திடாய்; அவ்வப்பொருள்களிற் சிற்சத்தியானது செல்லாதிருக்குமாயின் தொன்றுதொட்டு வருகின்ற தாவரசங்கமமாகிய உயிர்களனைத்திற்குங் குணங்கள் மாறும். எ–று.

இதுவுமது.

கருப்பைமுட்டையுட் பறவைகள் பலநிறங் கலந்த சித்திரம்பாராய், அருப்ப மாஞ்சத்தி நியமமில்லாவிடி லரசிலா நகர்போலாம், நெருப்புநீர்களாங் கசப்புமே மதுரமா நீசனு மறையோதும், பொருப்புமேகமாங் கடலெலா மண்களாம் புவனமிப்படிபோமே.

இ – ள். கருப்பையிலிருக்கும் முட்டையிலுள்ள பக்ஷிகள் அநந்த வர்ண முடையதாகும் விசித்திரத்தைப் பார்; அருமையான சிற்சத்தியின் நியமம் இல்லாமற்போனால் அரசன் இல்லாத பட்டணத்தைப்போல எல்லாம் மாறுபடும்; (அஃதெங்ஙனமெனில்) அக்கினியானது சலமாகக் குளிரும்; கைப்பும் தித்திப்பாகும்; சண்டாளனும் வேதாத்தியயனஞ் செய்வான்; மலையும் மேகம்போற் சஞ்சரிக்கும்; சமுத்திரங்கள் அனைத்தும் மண்ணாகும்; இவ்வண்ணம் சகத்தானது தன் சுபாவம் மாறுபடும்.

இ – ம். சூரியகிரணமே பகிர்முகத்தில் மித்தையான சலமாகவும் அந்தர்முகத்தில் உண்மையான கானலாகவும் தோற்றுவனபோல, பிர

மப்பிரகாசமே பகிர்முகத்தில் மித்தையான மாயாசத்தியாகவும், அந்தர் முகத்தில் உண்மையான சிற்சத்தியாகவும், தோன்றிய இச்சத்தியே, அனைத்திற்கும் உள்ளீடாயிருந்து நடாத்துதலின், அஃதின் தன்மையை அதன்மேல் வைத்துக் கூறினதே அன்றி அதற்கு இன்றெனபதாம்.

அ - கை இச்சத்திகள் நீங்கலும், சத்தனைத் துவிதம் இன்றித் தரிசித்தலும், முத்தியை அடைதலும் எங்ஙனம்? என்று, மூன்று வகையாய் வினாதல்.

ஆர்க்குங் காணவு மறியவும் படாதென்று மவாச்சிய வடிவென்றும், சேர்க்கு நாமரூபப் பயிர்வித்தெனறுஞ் செப்பிய சிற்சத்தி, பேர்க்குமா றெங்ஙன் பிரித்திடப் படாதெனின் பிரமபாவனை யொன்றாப், பார்க்குமா றெங்ஙன் முத்தியாகுவ தெங்ஙன்பரம சற்குருமூர்த்தி.

இ - ள். மேலான தேசிகரே; யாவருக்கும் பார்க்கவும் உணரவும் கூடாது எனவும், இன்னதென வுணர்த்தக்கூடாத ரூபம் எனவும், கற்பனையாகச் சேர்க்கின்ற நாமரூபப் பிரபஞ்சமாகிய பயிருக்கு விதை எனவும் சொல்லிய சிற்சத்தியை நீக்குமாறு எப்படி? நீக்கக்கூடாது என்றால், ஸ்வரூப சமாதியில் அத்துவிதமாகத் தரிசிக்குமாறு எப்படி? வீடு உண்டாவது எப்படி? எ-று.

இ - ம். வெளிப்படை. 101

அ - கை. முதல் இரண்டு வினாவிற்கு உத்தரங்கூறல்.

வாயுத்தம்பனஞ்சலத்தம் பனமணிமந்திரமருந்தாலே
தேயுத்தம்பனஞ்செய்திடி லதிலதிற்சிறந்தசத்திகளெங்கே
நீயச்சச்சிதாநந்தமாய்வேறென் றுநினைந்திடா திருப்பாயேல்
மாயச்சத்திபோமீதன் றிமந்திர மறைகளிற்காணுமே.

இ - ள். மணிமந்திர ஔஷதங்களினால் வாயு ஸ்தம்பனமும் ஜல ஸ்தம்பனமும் அக்கினி ஸ்தம்பனமும் செய்தால் அவ்வவற்றில் சிறந்

திருக்குஞ் சலனம் நெகிழ்ச்சி உஷ்ணம் ஆகிய மூன்று சத்திகளும் எங்கேயிருக்கின்றன?' நீ அந்தச் சச்சிதாநந்த வடிவயாகி மற்றொன்றையும் நினையாதிருப்பாய் ஆகில் மாயாசத்தி நீங்கும்; இதைத்தவிர உபாயம் வேதங்களிற் பார்த்திலம். எ-று.

இ-ம். குருவாக்கியப்படி உண்மையான சச்சிதாநந்த ஸ்வரூபமே தானாகச் சிந்திக்கின் அதன்மயமாதலும், இல்லாததான மாயாசத்தி யில்லாததாகவே நீங்குதலும் ஆம் என்பதாம். 102

அ-கை. மூன்றும் வினாவிற்கு உத்தரங் கூறல்.

மேவுமண்ணிலவ் வியத்தமே வியத்தமாம் விவகரித்திட
வேண்டின், நாவினான் மண்ணைக் குடமென்ப ரக்குடநசிப்பது
நாவாலே, பாவுநாம ரூபங்களை மறந்துமண் பார்ப்பதே பர
மார்த்தம், சீவபேத கற்பிதங்களை மறந்துநீ சின்மய மாவாயே.

இ-ள். கடகசத்தி தங்கிய மண்ணில் அக்கடம் ரூபிகரிக்குமட்டும் மறைப்பட்டிருந்த அச்சத்தி, கடகமாகிய பின்னர் வெளிப்படும்; விவகரிக்கு நிமித்தம் நாவினால் அம்மண்ணைக் கடமென்று சொல்லுவார்கள்; அக்கடநாமம் போய் மண்ணாக நிற்பதும் நாவாலேயாம்; கற்பனையாக வழங்குகின்ற நாமரூபவடிவங்களை நினையாது மண்ணாகப் பார்ப்பதே உண்மை ஞானமாம்; அங்ஙனம் சீவன் ஈஸ்வரன் சகத்து என்னும் வேறுபாடுகளை நீக்கி நீ சின்மாத்திரம் ஆவாய். எ-று.

இ-ம். கடத்தை மண் என்று அறியின் கடம் என்பது நசித்து அது மண்ணாக விளங்குவதுபோல, சிற்சத்தியைச் சித்தெனக் காணின் அச்சத்தி நீங்கி அது சித்தாக விளங்குவதே மாயா நிவர்த்தியாகிய முத்தி என்பதாம்.

இஃது மேற்கூறும் எண்வகை ஆநந்தத்தில் ஒன்றான அத்துவிதானந்தம் எனக்கொள்க. 103

*அ - கை. அச்சத்திகள் நீங்கினவிடத்தும் அதன் காரியமான திரிவித நீங்காமையால் அஃது நீங்கும் உபாயம் அனுக்கிரகிக்கவேண்டும் என்ற வினாவிற்கு உத்தரம்.*

பூரிக்குங்கன சச்சிதா நந்தத்திற் பொய்சடந்துயர் மூன்றும், தூரத்தாயினுந் தோன்றுபாழ் விபரிதந் துடைப்பதெப்படியென்றால், நீரிற்றோன்றுந் தன்னிழ லலைவீழதாய் நின்றலையினுஞ்சோராய்ப், பாரிற்றோன்றிய தன்னைநோக்கிடலந்தப் பாழ்நிழல் பொய்யாமே.

இ - ள். பூரணமாயிருக்கின்ற கனமான சச்சிதாநந்த ஸ்வரூபத்தில் அனுர்தசடதுக்கமாகிய திரிவிதமும் இலவாயினும் மெய்போலத் தோன்றுகின்ற பாழாகிய விபரீதத்தைக் கெடுப்பது எவ்விதம் என்னில், சலத்தில் பிரதிபலித்துத் தோன்றுகின்ற தனது சாயையானது தலைகீழாயிருந்து அலைந்தாலும் செவ்விதாய்ப் பூமியிற்றோன்றிய தனதுருவத்தைப் பார்க்கில் அப்பாழான சாயையானது இல்லாமற்போம். எ-று.

இ - ம். தன்னைத்தரிசிக்கில் தனது சாயையான திரிசியந் தானே நீங்கும் என்பதாம். 104

இதுவுமது

ஞானங்காரண மறிவுகாண்காரிய நாமரூபப்பேர்கள், ஆனதெப்படி யழிந்ததெப்படி யெனவாய்குதல் பலனன்றே, மானமைந்தனே தீர்க்கச்சொப்பனசகம் வந்ததும்பாராமல், போனதுந் நினையாமலுன் போதமாய்ப் பூர்ணமாயிருப்பாயே.

இ - ள். பெருமையுள்ள புத்திரா! காரணமானது ஞானத்தை அறியும் அறிவாம்; காரியமானது நாமரூபமான சீவேஸ்வர சகங்களாம்; இவற்றின் உற்பத்தி நாசம் எவ்வண்ணமென்று விசாரித்தல் பயன் இல்லையாம்; நீண்ட கனவாகிய உலகங்கள் உதித்ததையும் சென்றதை

யும் விசாரியாமல் உனது ஞானப் பிரகாசமான் பரிபூரண ஸ்வரூபமாய் இருப்பாய் எ-று.

இ-ம். காரணமான சின்மாத்திரமாகத்தான் விளங்கின் காரிய
மான யாவும் அஃதாகவே விளங்கும் என்பதாம். 105

அ-கை. இந்திக்குமுறையும் அதில் உதிக்கும் அத்துவிதாந்தமுங் கூறல்.

அசத்திலெம்மட்டுண்டம்மட்டும் பராமுகமாகினையம்மட்டும்
நிசத்திலுள்விழிப்பார்வையாயிப்படி நிரந்தரப்பழக்கத்தால்
வசத்திலுன்மனநின்றுசின்மாத்திர வடிவமாகிடின்மைந்தா
கசத்ததேகத்திலிருக்கினுமாநந்தக் கடல்வடிவாவாயே.

இ-ள். மகனே! மெய்போலத் தோன்றிய சகசீவபரங்களாகிய மித்தையில் எவ்வளவுகாலஞ் சம்பந்தமா யிருந்தனையோ அவ்வளவு காலமும் பகிர்முகமானாய்; இப்படி பகிர்முகமான அவ்வளவுகாலமும் அறிவென்னு முண்மையில் அந்தர்முக திஷ்டியாய் இடைவிடாத அப்பியாசத்தினால் உன்மனமானது உனதுவசமாக இருந்து சைதன்னிய ஸ்வரூபமானால், வெறுக்கப்பட்ட சரீரத்தில் நீ இருந்தாலும் பிரமாநந்த சாகர ஸ்வரூபமாவாய். எ-று.

இ-ம். இங்ஙனஞ் சிந்தித்துச் சித்துருவமாவானாயின், அவ்வுருவமான ஆநந்த ஸ்வரூபமே தானாக விளங்குவன் என்பதாம்.

அ-கை. மாயை அவித்தை முதலிய சடபாவ நீங்கிச் சிற்சத்தியாகிய சிற்பவம் ஆத்மாவிற் கரைந்து அஃதானபின்பு, அவ்வாத்மா சச்சிதாநந்த ஸ்வரூபம் என்று வுணர்த்தின ஆசாரியரை நோக்கி அங்ஙனமாயின் சத்தையுஞ் சித்தையும் போல ஆநந்தமே அதனிடத்திற் காணப்பட இல்லை என வினாதல்.

தானன்றிவேறொன்று மிலாதபூரணச் சச்சிதாநந்த குண
மாம், ஊனின்றவுயிர்தோறு மொன்றாகுமென்றாலெ நோக்கின்ற

படி கண்டிலேன், நானென்ற சீவன்கள் சத்தானவகையொக்கு ஞானங்கள் வெளிகண்டதாம், ஆனந்தமிவைப்போல வெளியாக வுதியாத வடைவேது குருநாதனே.

இ-ள். தேசிகரே! ஆன்மா தன்மாத்திர மிருப்பதன்றித் தன்னைத் தவிர இதர வஸ்துக்களில்லாத பரிபூர்ணமாகிய சச்சிதாநந்த சுபாவமாய்த் தேகத்தின்கண் இருந்த சீவர்கள்தோறும் ஏகமா யிருக்குமாயின், அவ்வான்மா அங்ஙனம் ஒத்திருக்கும் வண்ணம் பார்த்திலன்; அகம்பாவமுள்ள சீவர்கள் சத்தென்னுந் தன்மை ஒக்கும்; சித்தும் விளங்குகின்றது; இவற்றைப்போல ஆநந்தமானது வெளியாகத் தோன்றாத காரணம் எது. எ-று. 107

அ-கை. மேல்வினாவிற்கு உத்தரங் கூறல்.

உருவங்களிரதங்கள் பரிசங்களொருபூவி லொன்றாகு மொன்றாலுமே, கரணங்களோரொன்றி னோரொன்று தெரியுங் கணக்கன்றி வாராதுகாண், அருமந்த சச்சிதாநந்தச்சுபாவங்களான்மாவின் வடிவாகினும், பிரபஞ்சமயமாம் விருத்தி பேதத்தினாற் பேதங்களாகுமகனே.

இ-ள். மகனே! வடிவங்களும் சுவைகளும் பரிசங்களும் ஒரு மலரில் ஒன்றாயிருக்குமெனினும், இந்திரியம் ஒவ்வொன்றிற்கு அதற்குரிய ஒவ்வொரு விடயந் தெரியுமேயல்லாமல் ஒன்றிற்கு மற்றொன்றின் விடயந் தெரியமாட்டாது; அப்படியே அருமருந்தன்ன சச்சிதாநந்த இயல்புகள் ஆத்மஸ்வரூபமானாலும் சகத்துருவமான விருத்தியின் வேற்றுமையினால் வேறுபட்டிருக்கும். எ-று.

இதுவுமது.

தாமசமிராசதஞ் சாத்துவித முக்குணந் தாங்காரும்விருத்தி மூன்றாம், ஆமவைகண் மூடமுங் கோரமுஞ் சாந்தமும்

மயிதான மாகுமகனே, எமுற விருங்கின்ற சச்சிதாநந்தங்க ளென்றென்று மொன்றாகிலும், நாமுரைக்கும் விருத்திப் பிரி வினாற்சொரூப ஞானதி பிரிவாகுமே.

இ-ள். மைந்தா! தமசும் இராசசும் சத்துவமும் ஆகிய திரிகு ணங்களால் உண்டான விருத்திகள் திரிவிதமாம்; அம்மூன்றும் மூட விருத்தி எனவும் கோரவிருத்தி எனவும் சாந்தவிருத்தி எனவும் பெய ரைப பெறுவனவாம்; இன்புற விருக்கின்ற சச்சிதாநந்த மானவைகள் எப்போதும் ஏகமானாலும் நாம் சொல்லும் விருத்தி பேதத்தினல் சச்சி தாநந்த ஸ்வரூபங்கள் பேதங்களாம். எ-று. 109

இதுவுமது.

சடமானமூடத் தருக்கல்லு மண்களிற் சத்தொன்றுமே தோன்றுமால், விடமானகாமாதி கோரத்தி லாநந்தம் விளை யாது மற்றவைகளாம், திடமானவொழி வாதிசாந்தத்திலே சச் சிதாநந்த மூன்றும்வெளியாம், மடமான மூடங்கள்கோரங்கள் விடுசாந்த மனமாகிலாநந்தமே.

இ-ள். சடமாகிய மரம் கல் மண்களின் மூடவிருத்தியில் சத்து மாத்திரம் தோன்றும்; விஷரூபமான காமமுதலிய கோர விருத்தியில் ஆநந்தம் உதியாது, சத்துஞ் சித்துந் தோன்றும்; உறுதியான ஒழிவு முதலிய சாந்தவிருத்தியில் சத்து சித்து ஆனந்தம் ஆகிய மூன்றும் வெளிப்படும்; அறிவின்மையாகிய மூட விருத்திகளையும் கோரவிருத் திகளையும் விடாநின்ற மனமானது சாந்தவிருத்தியைப் பெறில் ஆநந் தம் வெளியாம். எ-று.

இ-ம். ஆத்மஸ்வபாவமான சச்சிதாநந்தம் விருத்தி பேதங்களி ஞல் மறைபட்டதும் வெளிப்பட்டதும் போலத் தோன்றினதே அன்றி அவைகள் அதனிடத்து இல்லாதது அன்று என்பதாம். 110

அ - கை. அச்சச்சிதாநந்த இலக்கணம் யாது? என்ற வினாவிற்கு உத்தரம்.

இகமான குருநாதனே சச்சிதாநந்தமெனு மிலக்கணமறி
கிலேன், அகலாதசத்தாலதேது சித்தாவதேது ஆநந்தமேதென்
றிடின், மிகுகால மூன்றுங் கெடாதிருப்பது சத்துவேறுபாடறி
தல் சித்தாம், மகிழ்காம நுகர்போது சுகமாகுமனுபூதி வாழ்
வென்ப தாநந்தமே.

இ - ள். இம்மானிட வடிவமாக எழுந்தருளிய குருசுவாமியே! சச்சிதாநந்த மென்கிற இலக்கணத்தைத் தெரிந்திலேன்; நீங்காத சத்தென்பது யாது? சித்தென்பது யாது? ஆநந்தமென்பது யாது? என்று கேட்பாய் ஆயின், மிகுந்த திரிகாலங்களினும் நசியாதிருப்பது சத்தாகும்; சிற்சட பேதங்களை அறிதல் சித்தாகும்; விரும்பும் காமத்தை அனுபவிக்கும்போது உண்டாகும் இன்பம் போன்ற சுவானுபூதி சுகமென்று சொல்லப்படுவது ஆநந்தமாம். எ-று.

இ - ம். சச்சிதாநந்த இலக்கணம் இவையெனக் கூறினதாம்.

அ - கை. ஆத்மா சச்சிதாநந்தம் என்பதற்கு அனுபவம் வினாதல்.

நாசச்சரீரத் திருக்குஞ்சரீரிதனை நால்வேத மாவாக்கி
யம், நீ சச்சிதாநந்தமென் றிடினுமாசிரியர் நீ பிரமமாகுமெ
னினும், மாசற்ற சச்சிதானந்த நானென்ன விவண்மன்று மனு
பவமெங்ஙனே, கோசப்புரங்களை யிடித்துத் தகர்த்தமத குஞ்
சரக் குருநாதனே.

இ - ள். பஞ்சகோசமாகிய மூன்று தேகங்களையும் உடைத்துத் தள்ளாக்கிய யானையாகிய குருசுவாமியே! நசிக்கின்ற தேகத்தில் இருக்கின்ற தேகியை, நான்கு சுருதியின் முடிவிலுள்ள மகாவாக்கியங்களும் நீயே சச்சிதாநந்த ஸ்வரூபமென்று சொல்லினும், தேசிகருபதேசமும்

நீயே பிரமமென்று சொல்லினும், நின்மலமான சச்சிதாநந்தமே நானென்று இம்மாணுக்கன் பொருந்தும் அனுபவமானது எவ்விதம். எ-று.

இ - ம். வெளிப்படை. 112

அ - கை. ஆத்மா சத்தென்பதற்கு அனுபவங் கூறல்.

சென்மாந்தரஞ்செய்த வினைகளுடறருமெனிற் செல்கால மிவனுண்டலோ, கன்மானுபவநரக சொர்க்கமெனில் வருகின்ற காலத்து மிவனுண்டலோ, உன்மாதயாதனு வுடல் கடவுளுடன்மனுட வுடன்மாறி மாறியழியும், தன்மாயவுடல் கெடினு மிவனிருப்பது கொண்டு சத்தென்ப தொக்குமகனே.

இ - ள். மைந்தா! முற்சநநங்களிற் செய்த கன்மங்களானவை தேகத்தைக் கொடுக்குமென்றால், சென்ற காலத்தினும் இப்புருடனிருந்தான் அல்லவா? இப்போதுசெய்த கன்ம மனுபவித்தற்குத்தக்க இனி நாக சொர்க்கங்களை அடைவன் என்றால், எதிர் காலத்தினும் இவனிருப்பான் அல்லவா? சித்தப்பிரமைக்குக் காரணமான யாதனுசரீரமும் தேவசரீரமும் மானுடசரீரமுமாக மாறிமாறி நசிக்கும்; தனது மித்தையாகிய தேக நசிக்கினும் இத்தேகி கெடாமலிருப்பதனால், இவனே சத்தென்னு மனுபவமொக்கும். எ-று.

இ - ம். தேகமுதலியன நசிக்கினும் தான் நசியாமல் மூன்று காலங்களினும் இருத்தலின் ஆத்மாவே சத்தென்பதாம். 113

அ - கை. ஆத்மா சித்தென்பதற்கும் ஆநந்த மென்பதற்கும் அனுபவங் கூறல்.

இருளாகமூடுஞ் சுழுத்தியிலிராத்திரியி, லிரவிசுடரற்ற பொழுது, மருளாமலிருளையும் பொருளையுந் தெரிகின்ற வகைகொண்டு சித்தாகுமே, பெருவாழ்வு மிக்கதானே தன்

ளிடத்தினிற் போகாதபிரியமதனுல், அருகாத பிரியஞ் சுகத்
தில்வருமா தலா லாநந்த மாமைந்தனே.

இ-ள். மகனே! அந்தகாரமாக மூடிக்கொள்ளுஞ் சுழுத்தி அவத்தையிலும் இராவிலும் சூரியப்பிரகாச மில்லாதபோதும் மயங்காமல் இருட்டையும் வஸ்துக்களையும் காண்கின்ற வகையினுல் ஆன்மா சித்தாகும்; பேராநந்த மிகுந்த தானே தன்னிடத்தில் நீங்காத பிரியம் வைப்பதனுல் குறையாத பிரியமானது தனதுசுகத்தில் வருவது அனுபவம், ஆதலால் ஆன்மாவே ஆநந்தமாம். எ-று.

இ-ம். ஆத்மா அறிவறியாமை இன்றி அறிவாயிருந்து அறிதலின் சித்தும், விடயங்கள் அனைத்தினுமுள்ள பிரிய நீங்கினும் தனது பிரிய நீங்காமையின் ஆநந்தமும் ஆம் என்பதாம். 114

அ-கை. சுகசாதனங்களில் பிரியமிருப்பதுபோல ஆத்மாவிலும் பிரியமிருத்தலின் அது ஆநந்தத்திற்குச் சாதனமாகாதோ? எனில், அங்ஙனம் ஆகாது என்பதற்கு அனுபவம் கூறல்.

அன்னபானுதிசுக சாதனமதாகையா லார்க்கும் வெகு
பிரியமாகும், இன்னவாறான்மாவு மாநந்தசாதன மெனக்கரு
தல் பொருளல்லவே, சொன்னவான் மாவையொரு சுகசாத
னங்களொடு சொல்லுவாயாகின் மகனே, உனதாநந்தம்வே
றேவனு பவிப்பதா முபயவான் மாவுமுளவோ.

இ-ள். மைந்தா! உண்பன பருகுவன முதலியவை சுகத்துக்குச் சாதனமாகையால் யாவர்க்கும் மிகுந்த பிரியமாம்; இவ்வண்ணம் ஆத்மாவும் ஆநந்தத்துக்குச் சாதனமென்று நினைப்பது அருத்தமல்லவே; சொல்லிய ஆத்மஸ்வரூபத்தை ஒரு சுகசாதனங்களோடுங் கூடச் சொல்லுவையாகில், உனதாநந்தமானது உன்னைவிட வேறோ? அநுபவிப்பதாகிய இரண்டாமாத்மாவும் உண்டோ. எ-று.

இ - ம். சாதனம் இறந்து சாத்தியமான இடத்தில் சேவிக்க நிரதிசயாநந்தம் வேறும், அஃது அனுபவிக்கும் ஆத்மாவேறும் இன்று; ஆதலினால், அவ்வாத்மா ஆநந்தமாவதன்றி அதற்குச் சாதனமாகாது என்பதாம். 115

அ ‹ கை. ஆத்மா ஆநந்தஸ்வரூபமாயின் எதிரிட் டனுபவிக்கும் ஆநந்தம் அஃது ஆகாதோ? எனின். அஃது விடயாநந்தமாதலின் ஆகாது என்பதற்கு அனுபவங் கூறல்.

விடயசுக மதில்வருதல் பிரியமாத் திரமாகும் வெகு பிரிய மான்மாவிலாம், விடயசுகம் வருபிரிய மாறிவரு மான் மாவில் வெகுபிரிய மாறுதுகாண், விடயசுகம் விடலுமாங் கொள்ளுமா மான்மாவை விடுவதெவர் கொள்வதெவர்பார்; விடயசுக போகங்கள் விடுமவனை யவனால் விடப்படாதொரு நாளுமே.

இ - ள். விஷயாநந்தத்தில் இன்பமுண்டாதல் பிரீதியின் அளவினதாம்; ஆத்மாவினிடத்தில் அதனினும் மிகுந்த பிரியமுண்டாகும்; விடயாநந்தத்தில் உதிக்கின்ற பிரியமானது நிலையாது மாறிமாறி உண்டாகும்; ஆத்மாவினிடத்துள்ள மிகுந்த பிரியமானது மாறாது ஒரு தன்மைத்தாம்; விஷயசுகம் வெறுத்து விடுதற்கும் விரும்பி யேற்றுக்கொள்ளுதற்கும் தகுதியாகும்; இப்படி ஆத்மாநந்தத்தை விடுகின்றவர் யாவர்? கொள்ளுகின்றவர் யாவர்? நன்றாகப்பார்; விடயாநந்தானுபவங்களை ஒருவன் வெறுத்துவிடக்கூடும்; அங்ஙனம் வெறுத்துவிட்டவன் தன்னால் தன்னை வெறுத்துப் புறம்படுத்தக் கூடுமோ? ஒருநாளுங்கூடாதே. எ-று.

இ - ம். விடய இன்பங்க ளனைத்தும் ஆத்மப்பிரிய லேசமாதலின்: அஃது நசித்தும் இஃது நசியாதிருத்தலின், அவ்வாநந்தம் ஆத்மாநந்தமாகாது என்பதாம். 116

அ - கை. ஆத்மா ஆனந்த வடிவமாகின் அதனிடத்தில் வெறுப்பிருக்கின்றதே எனில், அங்ஙனம் இன்றென்பதற்கு அநுபவங்கூறல்.

வேகின்ற கோபங்க ளாலென்னை நான்கொன்று விடு
கிறேனென்று சிலபேர், சாகின்ற படியினாற் றன்னையே தான்
கொன்று சாவனெனல் சங்கையல்லவே, தேகந்தனைக் கொல்
லுமவனால் விடப்பட்ட தேகமேவ னல்லன் மகனே, ஆகந்
தனிற்கோப மிலதுதனை யொருநாளு மான்மா வெறுப்ப
திலையே.

இ - ள். மைந்தா! கொதித்தெழா நின்ற கோபங்களால் என்னை யான் கொல்லுகின்றேனென்று சொல்லிச் சிலர் இறக்கின்றபடியினால்; ஆன்மா தன்னைத்தானே கொலைசெய்துகொண்டு சாவது என்று சங்கிப்பது சங்கை அன்றாம்; உடலைக் கொல்கின்ற அப்புருடனால் நீக்கப்பட்ட தேகமானது அவ்வாத்மா அன்று, தேகத்தில் கோபம் வந்ததேயல்லாமல் ஆத்மாவை எப்போதும் ஆத்மா வெறுப்பதில்லை. எ-று.

இ - ம். ஆத்மா தற்பிரியத்தில் குறைவு வாராமல் தேகத்தை நீக்கினதேயன்றித் தன்னிடத்தில் வெறுப்புண்டானதன்று என்பதாம்.

அ - கை. தனது ஆனந்தமுதலிய ஆநந்தங்கள் ஆத்மா என வருமேலில் அங்ஙனம் ஆகா எனக்கூறி, ஆத்மாநந்தமே முக்கியம் எனக் கூறல்.

தாகப்படும்பொருளு லும்மகன் பிரியமாந் தநயனிலு
முடல்பிரியமாம், ஆகத்திலும்பிரிய மிந்திரியமாகரண மத
னிலும் பிரியமுயிராம், ஏகப்பிராணனிலும் வெகுபிரிய மான்
மாவி லிந்தவான்மா முக்கியம், ஊகத்தினாற் கௌவுணமித்தை
கர்த்தாமூன்று மொன்றினைன் றதிகமகனே

இ - ள். மைந்தனே! பிரியமாகச் சம்பாதிக்குந் தனங்களினும் புத்திரன் பிரியமாகும், அப்புத்திரனிலும் தேகம் பிரியமாகும், அத்

தேகத்திலும் இந்திரியங்களானவை பிரியமாகும், அவ்விந்திரியங்களி லும் சீவனனது பிரியமாகும், ஒன்றான அச்சீவனிலும் கூடஸ்தனிடத் தில் மிகுந்த பிரியமாம், ஆதலால் இவ்வாத்மாவே முக்கியமாம்; உத்தி யினல் கௌணாத்மா மித்தை யாத்மா கர்த்தாத்மா ஆகிய மூன்றும் ஒன் றினென்று அதிகமாம். எ-று.

இ-ம் தனமுதலிய ஆறினும் வைக்கின்ற பிரியம் கௌணம் எனவும், ஆத்மப்பிரியமே முக்கியம் எனவுங் கூறினதாம். 118

அ-கை. ஆத்மாநந்தமே முக்கியமாயின், புத்திரன் முதலியவைகள் ஆத்மா எனவும், அவைகள் முக்கியம் எனவுங் கூறியது என்னை? எனின், அதற்கு உத்தரங் கூறல்.

கெடலானபொழுதிவன் காணிக்குமகனை கௌணவா ன்மாமுக்கியம், விடலாதவுடலம் பரிக்குநாளுடலான மித்தை யான்மாமுக்கியம், திடமானநன்மைகதி வேண்டினற் கர்த்தனு ஞ்சீவவான்மாமுக்கியம், சடமாயுமுத்தியினின் ஞானவான்மா வான தானேமகாமுக்கியம்.

இ-ள். மரணகாலத்தில் இவன் ஆதீனத்துக்கு வேண்டிய புத்தி ரனை கௌணாத்மாவே முக்கியமாம்: நீங்காத தேகத்தைத் தாங்குகின்ற நாளில் அத்தேகமான மித்தையாத்மா முக்கியமாம்; பலமாகிய நல்லக தியை விரும்புங்காலத்தில் நானென்னுஞ் சீவாத்மா முக்கியமாம்? திரி சியங்கள் நீங்கிய மோக்ஷத்தில் ஞானாத்ம ஸ்வரூபமாகிய தானே மிகவு முக்கியமாம். எ-று.

இ-ம். புத்திரன்முதலிய மூன்றையும் முக்கியாத்மா வென்றது ஒவ்வோர் சமயத்து ஆதலால் பூர்வபக்ஷமும், ஆத்மாவை முக்கியம் என் றது என்றும் ஆதலால் சித்தாந்தமுமாம் என்பதாம். 119

அ-கை. விருப்பு முதல் மூன்று நீங்கிய ஆநந்தமே ஆத்ம ஸ்வ ரூபமாம் எனல்.

புலியுமனுகூலமெனி லிட்டமாம்பகைசெயிற் புதல்வனே
னினும்வெறுப்பாம், உலகிலிருவகையுமல் லாதபுல்லாதியினு
தாசீன மாமாதலால், மலினமறு சின்மயன்பலவகையு மிப்படி
மகிழ்ச்சியில் விருப்பமிகழான், அலகிலானந்த வடிவாமுன்
சொரூபத்தை யாராய்ந்து பார்மைந்தனே.

இ-ள். மைந்தனே! வெறுக்கத்தக்க புலியும் அநுகூலஞ் செய்யும் ஆயின் சிநேகமாகும்; புத்திரனாயினும் பகைக்கின் துவேஷமாம்; பூமியின்கண் இவ்விரண்டும் அல்லாத திரண முதலியவைகளில் உபேக்ஷையாம்; ஆதலினால் களங்கமற்ற ஞானஸ்வரூபனானவன் னானாவிதத்திலும் இவ்வண்ணம் ஆத்மாநந்தத்தில் பிரியத்தை நீங்கான்; அளவற்ற பிரமாநந்த ஸ்வரூபமாகிய உனது ஆத்மஸ்வரூபத்தை ஆராய்ந்தறிவாயாக. எ-று.

இ-ம். விருப்பு வெறுப்பு உதாசீனம் ஆகிய மூன்றும் ஆத்மசுகத்திற்கு மாறுபடுதலினாலும், இவைகளில்லாத அச்சுகம் மாறுபடாதிருத்தலினாலும், இவ்வாநந்தமே ஆத்மஸ்வரூபமாம் என்பதாம். இஃது மேற்கூறும் அஷ்டவித ஆநந்தத்தொன்றான ஆத்மாநந்தம் எனக்கொள்க.

அ-கை. ஆத்மா நிரதிசயாநந்தம் என்பது அனுபவமாம்பொருட்டு, அதிசயாநந்தம் எண்விதமாகக் கூறுவான் தொடங்கி, ஆநந்தம் எத்தனைவகை? என்ற வினாவிற்கு உத்தரங் கூறல்.

மானஞ்சிறந்த குருநாதனே யானந்தவகைக ளெத்தனை
யென்னிலோ, ஞானந்திகழ்ந்த பிரமாநந்தம் வாசனாநந்தம் வி
டயாநந்தமென், றாநந்தமூன்றுவிட வெட்டுவகை யென்பர்சில
ரவ்வைந்துமிதி லடக்கம், யானந்தவகை சொலக்கேண் மைந்
தனே யெட்டுமிஃதின்ன தின்னதெனவே.

இ-ள். பெருமையிருக்கும் தேசிகோத்தமரே! ஆநந்தப்பிரிவுகள் எவ்வளவென்று கேட்பாயாகில், சித்துவிளங்கிய பிரமாநந்தம் வைப்,அ

வாசனானந்தம் எனவும், விஷயாநந்தம் எனவும் ஆநந்தம் மூன்றுவிதமாம்; சிலர் எட்டுவிதம் என்று சொல்லுவார்கள் ; மற்றைய ஐந்தும் இம்மூன்றி லடக்கமாம் ; எண்வகை ஆநந்தமும் இஃது இன்னது இன்னது என்று நாம் அப்பகுப்பைச் சொல்ல, மகனே ! நீகேட்பாயாக. எ-று.

ப - ம். பிரமாநந்தத்தில் ஆத்மாநந்தமும், முக்கியாநந்தமும், நிசாநந்தமும், அத்துவிதாநந்தமும், ஞானாநந்தமும், ஆகிய ஐந்தும் அடங்கியிருக்கின்றது என்பார், 'அவ்வைந்து மிதிலடக்கம்' என, ஒருமையாகக் கூறினார்.

அ - கை. அவ்வஷ்டவித ஆநந்தத்தின் வகைகூறல்.

போகத்தில்வரு சுகம்விடயசுக நித்திரைப்போ துளது
பிரமசுகமாம், மோகத்த னந்தலிற் சுகமவாசனைச் சுகமுமுப்பி
ரிய மான்மசுகமாம், யோகத்தி லுளதுமுக்கிய சுகமுதாசின
முற்றசுக நிசசுகமதாம், ஏகத்தை நோக்கலத்துவித சுகம்வாக்
கிய மெழுந்தசுகஞானசுகமே.

இ - ள். போகங்களில் வருகின்ற ஆநந்தம் விடயாநந்தமாம் ; சுழுத்திகாலத்துள்ள ஆநந்தம் பிரமாநந்தமாம் ; மயக்கமாகிய நித்திரை தெளிந்துவருஞ் சமயத்துள்ள ஆநந்தம் வாசனாநந்தமாம் ; எங்கும் தனது பிரியவடிவாகக் காணுஞ்சுகம் ஆத்மா நந்தமாம் ; சமாதியிலுள்ள சுகம் முக்கியாநந்தமாம ; உதாசினத்திலுள்ள ஆநந்தம் நிசாநாதமாம் ; அத்துவிதமான தன்னை நாடாநிற்கும் சுகம் அத்துவிதாநந்தமாம் ; மகாவாக்கிய விசாரத்தி லுதயமான ஆனந்தம் விசித்தியாநந்தமாம். எ-று.

ப - ம். ஞேயத்தில் உதிக்கும் இன்பம் என்பார், "போகத்தில்வருசுகம்" எனவும், நனவிற் சுழுத்தியிலுள்ளது பிரமசுகம் என்பார், "நித்திரைப் போதுளது பிரமசுகம்" எனவுங்கூறினார்.

இ - ம். சுருக்கமான அருத்தத்துடன் அவ் வாநந்தங்களின் நாமங்களைக் கூறினதாம்.

அ - கை. அவற்றில் விடயாநந்த இலக்கணங்கூறல்.

இவ்வாறுரைசெய்த சுகம்பேதங்களினியல்பா மனைவசொல
மகனேகேள், ஒவ்வாநனவினி லுழல்வானிடர் கெடவுறங்குஞ்
சயனத்திலுறுநேரம், செவ்வாமனமக முகமாமதிலொளிர்சித்
தின் சுகநிழல்சேருங்காண், அவ்வாறிவ னுளமகிழ்வா மனுப
வமதுதான் விடயசுகாநந்தம்

இ - ள். மைந்தா! இந்தப்பிரகாரம் சொல்லிய ஆநந்த வேறுபா
டுகளின் இயல்பான தன்மைகளைச் சொல்லக் கேட்பாயாக; இன்பம்
பொருந்தாத சாக்கிரத்தில் சுழல்பவனுடைய துன்பநீங்கும் பொருட்டுப்
படுக்கையில் நித்திரைசெய்யுஞ் சமயத்தில் செவ்விதன மனமானது அந்
தர்முகமாகும்; அம்மனதில் பிரகாசிக்கின்ற சிதாநந்தச் சாயையானது
சேரும்; அவ்வண்ணம் இவன் மனமானது மகிழ்ச்சியாகும்; அநுபவ
மான அதுவே விடயாநந்தமாம். எ-று.

ப - ம். அறிவறி யாமையில் சுழலும் பவத்துன்ப நீங்கும்பொருட்
டுச் சமாதியில் அகமுகமாய் மனஞ் சித்தைத் தரிசிக்கில் சுகமுண்டாகும்
என்பார், "நனவினி லுழல்வானிடர் கெடவுறங்குஞ் சயனத்திலுறுநே
ரம், செவ்வா மனமகமுகமா மதிலொளிர்சித்தின் சுகநிழல் சேருங்காண்"
எனவும், அங்ஙனம் மகிழ்தல் ஞேயாநந்தம் என்பார், "அவ்வாறிவனுள
மகிழ்வா மனுபவ மதுதான் விடயசுகாநந்தம்" எனவுங் கூறினர்.

இ - ம். சமாதியில் அகமுகமாகச் சென்று அபியுமிடத்து உண்
டானது பிரமசுகம் ஆயினும், அதை எதிரிட்டறிந்து மனமகிழ்தலின்
அச்சுகம் விடயாநந்தமாயிற்று என்பதாம். 123

அ - கை. பிரமாநந்த இலக்கணங் கூறல்.

சனந்தருசுக விடயந்திரிபுடி யிடராமெனமன மசையா
மல், சேனந்தனதுகுலாயந் தனில்விழு செயல்போலித்திரை
செறிசிவன், தானநதமில்பர னுடனொன்றுவனிறு தன்மயல்

லதுபிறநினையாமல், ஆனந்தமயமாவன் சுகமிருமதுதானுயர் பிரமாநந்தம்.

இ-ள். இழிவைக் கொடுக்கின்ற விஷயசுகமானது திரிபுடியான துன்பமாம் என்று மனஞ்சலியாமல், பருந்தான்து தனதுகூண்டில் அடங்குந் தொழிலைப்போல நித்திரைசெய்கின்ற சீவனானவன் முடிவில்லாத பிரமத்தோடு கூடுவன்; ஒப்பற்றதன்னை யல்லாது வேறு கருதாமல் ஆனந்தகாரமாவன்; சுகமிருந்த அவ்வாநந்தமே மேலான பிரமாநந்தமாம். எ-று.

ப-ம். பிரமத்தை எதிரிட்டறியின் அறிபவன் அறிவு அறிபொருள் என மூன்றும்! அதனால், துன்பமாம் என்பார் "ஈனந்தருசுகவிடயந் திரிபுடி யிடராம்" எனவும், மனதை அடக்கிச் சொரூபசமாதி செய்கின்ற ஆத்மாபிரமத்தில் கலக்கும் என்பார், "மனம் அசையாமல் நித்திரை செறிசீவன், தானந்தமில்பரனுட ரென்றுவன்" எனவும், அங்ஙனம் பிரமத்திற்கூடிய ஆத்மா அப்பிரமாநந்தமாக அநந்திப்பான் என்பார், "ஒருதனையல்லது பிறநினையாமலாநந்தம் மயனானவன்" எனவும், இஃதே பேரானந்தம் என்பார், "சுகமிரு மதுதானுயர் பிரமாநந்தம்" எனவுங் கூறினார். நித்திரை என்பது அறிதுயில் எனக்கொள்க. 124

இதுவுமது.

தூங்குஞ்சுகமது பிரமச்சுகமெனல் சுருதிப்பொருள்விழிதுயில்வோர்கள், தாங்கும்மலரணை நன்றாகச்சிலர் சம்பாதிப்பது தானசுகம், தீங்குந்நன்மையு மாண்பெண்முறைமையுந் தெரியா தமளிசெய் பொழுதேபோல், ஆங்குள்வெளிகளு மறியாலனுபவ மதனாலதுபிர மாநந்தம்.

இ-ள். அறிதுயிலில் உதயமாகும் ஆனந்தமானது பிரமாநந்தம் என்று கொள்வது வேதமுடிவான மகா வாக்கியப்பொருளாம்; நித்திரை செய்பவர்களிற் சிலர் தாங்காநின்ற புஷ்பசயனத்தை நல்லதாகச் சேக

ரிப்பது ஸ்தானசுகமாம்; தன்மைநிலையும் ஆண் பெண் என்கின்ற முறைமையும் அறியாமல் நித்திரைசெய்கின்ற காலம்போல அவ்விடத்து அகம்புறங்களுந் தெரியாத சுவானுபவமாதலால் அவ்வறிதுயில் பிரமாநந்தமாம். எ-று.

ப - ம். வேதமுடிவான மகாவாக்கியார்த்த உபதேசத்தில் ரமிக்கும் யோகநித்திரையே பிரமாநந்தம் என்பார், "தூங்குஞ்சுகமது பிரமச் சுகமெனல் சுருதிப்பொருள்" எனவும், அங்ஙனஞ் சமாதி அடைதற்குச் சாதனமான ஞானபூமி முதலியவைகளைப் பெற்று ஏகாந்தமாய் இருந்தலே இடம் என்பார், "துயில்வோர்கடாங்கும் மலரணை நன்றுகச் சிலர் சம்பாதிப்பது தானசுகம்" எனவும் அகம்புறம் இன்றிப் பரிபூரணமாக விளங்கும்போது உள்ளசுகமே பிரமாநந்தம் என்பார், "உள்வெளிகளு மறியா வனுபவமதனு லது பிரமாநந்தம்" எனவுங் கூறினார்.

இ - ம். சுழுத்தியைப்போலச் சமாதியில் அகமுகமாய் ஆத்மா பிரமத்தில் சேர்ந்து அதன் மயமாச் சுகத்தை அனுபவித்தலின் அஃது பிரமாநந்தம் ஆயிற்று என்பதாம். 125

அ - கை. சித்தில் சுகம் விளங்கும் அனுபவந் தெரிவான், அறிவின்றி ஆநந்தம் அறிவில் எங்ஙனந் தோற்றும்? என்ற இடையில் வினுதல்.

உதயப்புவியினி லொருவன்னனுபவ மொருவன் மன
தினிலுதியாதே, மதியுங்கெடுகிற துயில்கொண்டாநந்தமய
னன்றேசுக முறுகின்ருன், இதுவிஞ்ஞானமயனுஞ் சிந்தையி
னினைவாய் வந்திடு மெனக்கண்டேன், சுதைவிண்ணேர்புகழ்
குருவே நீரிது சொல்லீர் சகலமும் வல்லீரோ.

இ - ள். முத்திக்குச் சகாயமாகிய இப்பூமியில் ஒருவனுக்கு உதிக்கும் அநுபவமானது வேறொருவன் மனதில் உண்டாகாதே; மனோமயகோசத்தோடு விஞ்ஞானமய கோசமும் இறக்கின்ற யோகநித்திரை

யைக் கொண்ட ஆநந்தகாரனல்லவா பரமசுகத்தை அடைகிறான்? இச் சுகமானது விஞ்ஞான வடிவமாகிய மனதில் நினைவாக வருமென்பதை அறிந்தேன்; இஃதெங்ஙனங்கூடும்? அமிர்தபானஞ் செய்யுந் தேவர்கள் துதிக்காநின்ற சமஸ்த வல்லமையுமுள்ள தேசிகரே? நீர் இதை அருளிச்செய்வீராக. எ-று.

இ - ம். வெளிப்படை. 126

அ - கை. மேல்வினவிற்கு உத்தரங்கூறல்.

நெய்யும்வெண்ணெயு மிருபேர்களுமறி நினைவிற்பிறிவறி வினிலில்லை, செய்யுநனவினி லிருக்கும்மனமொடு சேருஞ் சின்மய விஞ்ஞானன், நையுந்துயர்மனநழுவும் பொழுதுணர் ஞானச் சுகமுணு மாநந்தன், பெய்யுந் துளிகளுநீருங்குள மொடுபாகும்போ லிவர்பிறிவன்றே.

இ - ள். நெய் என்பதும் வெண்ணெய் என்பதுமாகிய இரண்டு நாமங்களும் நாமரூபமாக அறிகின்ற மனதிற் பேதமே அன்றி அவற்றின் சுவையைக் கொள்கின்ற வறிவினில் பேதம் இல்லை; இச்சாஞானக் கிரியைகளைச் செய்கின்ற சாக்கிரத்தில்ஸ்திரமான மனதோடுஞ்சேருகின்ற சின்மாத்திரமான விஞ்ஞானமயனும் வருந்துகின்ற துன்பமுள்ள மனமும் நீங்குங்காலத்தில் அறிகின்ற ஞானநந்தத்தை அனுபவியாநின்ற ஆநந்தமயனும் ஆகிய இவர்கள் மேகம் பொழியாநின்ற மழைத் துளிகளும் சலமும்போலவும், பெல்லமும் பாகும்போலவும், வேறல்லர். எ-று.

இ - ம். அறிவிறந்து உதிக்கும் ஆநந்தம் தெளிவாக விளங்குதலினாலும், ஆநந்தத்தினின் றுதிக்கும் அறிவு சுகமா யிருத்தலினாலும், இச்சிற்சுகம் அனுபவத்தில் ஒன்றுதலின் அறிவில் வரும் என்பதாம். இதைக் குருமுகமாகச் செய்யுஞ் சகச நிட்டையிற் காண்க.

அ - கை. அங்ஙனம் ஆயின் பிரமாநந்த மயமாக நின்றுவிடாமல் அறிவில் வருவானேன்? என்ற வினவிற்கு உத்தரமும் வாசனுநந்த இலக்கணமுங் கூறல்.

ஒன்றாகிய பிரமாநந்தன்சுக மொழிவானேன் வெளிவருவானேன், என்றான் முன்செய்த கருமம்வெளியினி லிழுக்குஞ் சுழுத்திவிட்டெழுந்தோனும், நன்றாயினசுகமகலான் வெளியி லடைவான்மறதியும் பெறமாட்டான், அன்றெனவிருந் துறங்குஞ்சிலகண மதுவேவாதனை யாநந்தம்.

இ-ள். ஆநந்தமயனான சீவன் ஏகமாகிய பிரமாநந்த சுகத்தை நீங்குவானேன்? வெளியே சாக்கிரத்தில் வருவானேன்? என்று கேட்கில், பூர்வத்திற்செய்த கன்மமானது வெளியினிற் கொண்டுவரும்; அப்படிச் சுழுத்தியினின்று வெளிப்பட்டவனும் நன்மையான அச்சுகத்தை நீங்கான்; புறம்பிலும் செல்வான்; மறதியையும் அடையான்; அன்றெனவும் ஆம் எனவும் நின்று நித்திரை செய்கின்ற சொற்பகாலமாகிய அதுதான் வாசனாநந்தமாம். எ-று

இ-ம். ஆநந்த மயத்தினின்றும் விஞ்ஞானமயத்தில் வருதல் சகசநிட்டையும் பிராரத்த கன்மானுபவத்தையுங்குறித்தெனவும், துயிலைப்போலச் சமாதியினின்று நீங்குஞ் சமயத்தில் பிரமாநந்த சமஸ்காரத்தோடும் வருதலின் அச்சுகம் வாசனாநந்த மாயிற்றெனவுங் கூறினதாம். 128.

அ-கை. நிசாநந்த இலக்கணங் கூறல்.

அந்தக்கணமுட லகமென் றிடர்களி லலைந்தேசுகந்தனை மறந்தேபோம், முந்தைச்செயும்வினை சுகதுக்கந்தருமோனந் தருநடுவடிவேகாண், எந்தப்புருடனு மொருசிந்தையுமறவிருந்தே னெனலனுபவமாகும், இந்தப்படிதனுதாசி னச்சுயிறுவே நிசமெனுமாநந்தம்.

இ-ள். தேகத்தை நானென்று நினைத்த அப்போதே ஆன்மா துன்பங்களிற் சுழன்று ஆநந்தத்தை மறந்துவிடும்; முன்செய்த கன்மமானது இன்பங்களையேனும் துன்பங்களையேனும் கொடுக்கும்; மௌனங் கொடுப்பது மத்தியகத நிலையையே ஆம்; எத்தன்மையான புருஷ

னும் ஒரு நினைப்பும் இன்றி இருந்தேன் என்பது அனுபவமாம், இப்படி தனது உதாசீனத்திலுண்டான ஆநந்தமான இதுதான் நிசாநந்தமாம். எ-று.

இ - ம். சமாதியில் விருப்பு வெறுப்பு இன்றிச் சமரசமான உண்மையாய் இருத்தலின், அச்சுகம் நிசாநந்தமாயிற்று என்பதாம்; இதை முக்கியாநந்தம் எனக் கூறுவாருமுளர். 129

அ - கை. முக்கியாநந்த இலக்கணமுங் கூறல்.

நிசமானதுமுக் கியமோகுடத்துள நீரன்றோவெளியிறந்தான், வசமாமகங்கர மறைந்தாணிசமது படிந்தான்முக்கிய வகையாகும், திசையார்திரிசிய மறியாதேதுயில் செறியாதேயுடறறிபோலே, அசையாதேமதி சமமாகியநிலையதுதான் முக்கியவாநந்தம்

இ - ள். நிசாநந்த மானதும் முக்கியாநந்தமாமோ எனில், கடத்துக்குள்ளிருக்குஞ் சலமல்லவோ புறம்பிலிருக்கின்ற ஈரம்? அதுபோல வசமான அகங்கார மறைபட்டு நிசமானது கூடினுல் முக்கியமாம்; திக்குகளில் நிறைந்திருக்கின்ற விடயத்தை அறியாமலும் நித்திரையை அடையாமலும் தேகமானது ஸ்தம்பத்தைப்போல அசையாமலும் அறிவானது சமமாக நிற்றலே முக்கியாநந்தமாம். எ-று.

இ - ம். சமாதியில் அறிவறியாமை இன்றி அறிவே முதலாகச் சுகித்திருத்தலின் அச்சுகம் முக்கியாநந்தம் ஆயிற்றென்பதாம்; இதை நிசாநந்தமெனக் கூறுவாருமுளர். அங்ஙனங் கூறாது இங்ஙனம் கூறியது என்னையெனின், நடுநிலையினிற்கின் முக்கியமான ஸ்வரூபம் வெளிப்படுதலின் எனக்கொள்க. சமாதியில் தன்னிடத்தில்தானே சுகித்தலின் அச்சுகம் ஆத்மாநந்தமாயிற்று எனவும், சமாதியில் ஆநந்தம் ஆநந்தி என்னும் இரண்டற்ற சுகமாக விளங்குதலின் அச்சுகம் அத்துவிதாநந்தமாயிற்று எனவும், சமாதியில் அது நீ என்பது இன்றி ஆநந்தபோதமாய்ச் சுகி

த்தவின் அச்சுகம் வித்யாநந்தமாயிற்று எனவும் கொள்க. நிரதிசயாநந்த அம்சமான இவ்வஷ்டவித ஆநந்தங்களும் அதிசயமாகச் சமாதியின்கண் நவநவமாய் விளக்குதலின் அதிசயாநந்தமெனக் கூறப்படுவனவாம். 130

அ - கை. ஆநந்த மகாண்மியங் கூறல்.

மனுடன்மனுடகந் தருவன்றேவகந் தருவன்பிதிர் கரும த்தேவன், தனுடன்கருமசுரன்சுர னிந்திரனுசான் பிரசாபதி யானேன், கனவிராட்ட னிரணியகர்ப்பன் முறைகருதுமிப்ப தினொருபேர்கள், பினவாநந்தங்க ளுரையாம்பிரமை வெள் ளக்கடல்பிரமாநந்தம்.

இ - ள். மானுடனும் மானுடகந்தருவனும் தேவகந்தருவனும் பிதி ர்கருமத்தேவனும் அசுரனும் தேவனும் இந்திரனும் பிரகஸ்பதியும் பிரம னும் கனமாகிய விராட்புருடனும் இரணியகர்ப்பனும் ஆகிய முறையாக நினைக்கின்ற இந்தப் பதினொரு பெயர்களின் ஒன்றுக்கொன்று பேதமா யுள்ள ஆநந்தவகைகள் பிரமாநந்தமென்னும் கர்பார்த வெள்ளசாகரத்தின் நுரைகளாம். எ-று.

இ - ம். நிரதிசயாநந்தமென்னுங் கடலில் அஷ்டவித ஆநந்தமென் னு நீரில் மனுடாநந்தமுதல் பதினோராநந்தங்களும் நுரைமுதலிய வேச ஙகளாகத் தோற்றும் என்பதாம். 131

அ - கை. மேலே கூறிய ஆநந்தமே அதீதமாம் எனல்.

எவனுகிலுமந்தத் துரியா தீதந்திலேழாம் பூமியிலிருந்தா னேனல், அவனுர தன்சுகன் சிவன்மாலயன்முத லதிவோரனுபவ சுகபோதம், விவகார திர்சிய மிதுவேயனுபவமெனமுன் சொல் லியவிவகாரி, உவபானமுமறி மகனேயவனடி யுதிரும்பொடிக ளென் முடிமேலே.

இ - ள். மைந்தா! யாவனாயினும் இந்தத் துரியாதீதமென்னும் ஏழாம் பூமியில் இருந்தானாகில், அம்மகாபுருடன் தான் அரி அயனென்

னும் மும்மூர்த்திகளுக்கும் நாரதர் சுகர் முதலிய அறிஞருக்கு முள்ள சுகானுபவமாகிய ஆநந்த சின்மயனுவன் ; விவகாரங்களில் திரிசியதிஷ்டி யில்லாத இதுவே சுவானுபவமென்று முன்னே சொல்லி யிருக்கின்ற விவகாரியின் திஷ்டாந்தமுந் தெரிவாயாக ; அவ்வனுபவியி னுடைய பாதத்தில் உயிராகின்ற தூள்களானவை என் சிரசின்மே லிருக்கின் றன. எ-று.

இ - ம். துரியாதீதத்தை அடைந்தவனது மகிமையைக் கூறினதாம். 132

அ - கை. சச்சிதாநந்த இலக்கணங்கூறி இன்னஞ் சந்தேகமுளதேல் கேட்பாய் எனல்.

இந்தவாறைந்துசுகஞ் சொல்லினேம் வித்தைசுகமினி மேற்சொல்வோம், முந்தைமாயையுஞ் சச்சிதாநந்தப்பொருளு மே பொழியும்போதில், அந்தமாமத்துவித சுகமான்மசுகமிர ண்டு மங்கேசொன்னேம், தொந்தமாற்றியமகனேயின்னமுனக் கைய முண்டேற் சொல்லுவாயே.

இ - ள். சுகதுக்காதி பந்தங்களைக்கெடுத்த மைந்தா ! இவ்விதம் விடயாநந்தம், பிரமாநந்தம், வாசனாநந்தம், நிசாநந்தம், முக்கியாநந் தம் என்னும் ஐந்துவித ஆநந்தத்தை உரைத்தோம் ; வித்தியா நந்தத் தைஇனிமே லுரைப்போம் ; முன்மாயாரூபத்தையும் சச்சிதா நந்தார்த் தையும் சொல்லுமிடத்தில் வேதமுடிவான அத்துவிதானந்தமும் ஆத்மா நந்தமும் ஆகிய இரண்டாநந்தத்தையும் அவ்விடத்தி லுரைத்தோம் இன்னமும் உனக்குச் சந்தேகமுண்டானுல் கேட்பாய். எ-று.

இ - ம். வெளிப்படை. 133

அ - கை. ஆத்மா சச்சிதாநந்த ஸ்வரூபம் எனத் தெரிந்தும் அதனு ண்மையான ஸ்வானுபூதி வெளிப்படும் நிமித்தம், சுருதியுத்தி

*அனுபவங்களுக்கு ஒத்திருக்கும் அவற்றின் ஒருமையைத் தெரிய வினுதல்.*

குன்றனையுமென்னையு முலகினையுமீன்றளித் தருளுங்குரு வேகேளீர், புகன்றசச்சிதாநந்தப் பதங்கடனித் தனிபாவே பொருள்வேறானல், உகண்டமனமுறைப்ப தெங்கன்பரியாய பதங்களைப்போ லுறவுகாணேன், அகண்டமாயொருசுவையா யத்தேனீக்கூட்டி யமுதாவாவறிவிப்பீரே.

இ-ள். குமரனையும் என்னையும் சகங்களையும் சிருட்டித்து ரக்ஷித்தருளுகின்ற இறைவனே! கேட்பீராக; முன்சொல்லிய சத்து, சித்து, ஆநந்தம் என்னும் முப்பதங்களும் வெவ்வேறாகி அருத்தமும் வேறுபடுமானால், விடயங்களிற் பாயாநின்ற மனமானது ஏகரசமாய் நிற்பதெப்படி? பரியாய நாமங்களைப்போலச் சம்பந்தமும் தெரியவில்லை; ஆதலால், ஏகமாகவும் ஒரே ருசியாகவுந் தேனீக்களாற் கூட்டப்பெற்ற தேனாகத் தெரிவிப்பீர். எ-று.

இ-ம். வெளிப்படை 134

*அ-கை. சச்சிதாநந்த ஒருமையைச் சுருதிப் பிரமாணத்தால் கூறுவான் தொடங்கி அவற்றின் காரணமும் ஒருமையுங் கூறுகின்றார்.*

குளிரிளகல் வெண்மை யென்ற பதங்களினு னீருமூன்று கூறுவிற்றோ, வொளிதபனஞ் செம்மையென்ற பதங்களாலக்கினியு மொருமூன்றோ, வெளிமுதலாஞ் சகமசத்து மூடமிட்டெனப் பிரித்து விலக்கி வேதம், எளிதறியமுரண்மொழிந்த சத்தாதியெனும்பிரம மேகந்தானே.

இ-ள். குளிர்ச்சியும் நெகிழ்ச்சியும் வெண்மையுமெனச் சொல்லிய சொற்களினால் சலமானது மூன்றுபொருளானதோ? பிரகாசமும் சூடும் சிவப்புமெனச் சொல்லிய சொற்களினால் நெருப்பும் மூன்று

பொருளாகுமோ? அதுபோல ஆகாயமுதலான உலகத்தை அனுர்த மெனவும் சடமெனவும் துக்கமெனவும் வேறுபடுத்தி நீக்கிச் சுருதியானது பக்குவிகள் எளிதிலுணர அவற்றிற்கு எதிராகச் சொன்ன சத்து சித்து ஆநந்தம் என்னும் பிரமமானது ஒன்றேயாம். எ-று.

சச்சிதாநந்தங்கள் பரஸ்பரம் பின்னமல்ல, ஏகந்தான்; குணமாயின் பின்னமாம்; பிரமசுரூபமாகலின் பின்னமாகா; பிரமமொன்றே, நிவர்த்தியின்மையின் சத்தென்றும், சடத்தில் விலக்ஷணமான பிரகாசரூபமாகலின் சித்தென்றும், துக்கத்தின் வேருய் முக்கியப்பிரீதிக்கு விஷயமாகலின் ஆநந்தமென்றுங் கூறப்படுகின்றது. சலமானது எப்படிநெகிழ்ச்சி குளிர்ச்சி வெண்மை ரூபமோ, அக்கினியானது லோகிதோஷ்ணப் பிரகாச ரூபமோ அப்படியே பிரமமும் சச்சிதாநந்த ரூபமென்றறிக.

இ-ம். சகத்தை அனுர்த சடதுக்கமெனக் கண்டு அதனை நீக்குதற்காகக் குறித்த நாமம் சச்சிதாநந்தமெனவும், அதனருத்தம் ஒன்றான பிரமமெனவுங் கூறினதாம். 135

அ-கை. சச்சிதாநந்தம்ஒருமையென்பது உறுதிப்படுமித்தம் வேதம் ஒருமையாகச் சொல்லிய பரியாயநாமங்களில் விதி நாமங் கூறல்.

நித்தியம் பூரணமேகம் பரமார்த்தம் பரப்பிரம நிதானஞ் சாந்தம், சத்தியங்கே வலந்துரியஞ் சமந்திருக்குக் கூடஸ்தன் சாக்ஷிபோதம், சுத்தமிலக்கியஞ்சனுதனஞ்சிவன் றத்துவம்வின் சோதியான்மா, முத்தம்விபு சூக்குமமென் றிவ்வண்ணம்விதி நாமங்கண் மொழியும் வேதம்.

இ-ள். நித்தியம் எனவும், பூரணம் எனவும், ஏகம் எனவும், பரமார்த்தம் எனவும், பரப்பிரமம் எனவும், நிதானம் எனவும், சாந்தம் எனவும், சத்தியம் எனவும், கேவலம் எனவும், துரியம் எனவும், சமம் எனவும், திருக்கு எனவும், கூடஸ்தன் எனவும், சாக்ஷி எனவும், போதம்

எனவும், சுத்தம் எனவும், லக்ஷியம் எனவும், சநாதனம் எனவும், சிவன் எனவும், தத்துவம் எனவும், விண் எனவும், சோதி எனவும், ஆத்மா என வும், மூர்த்தம் எனவும், விபு எனவும், சூக்குமம் எனவும் இந்தப்பிரகாரம் விதியால் குணப்பரியாய நாமங்களைச் சுருதிகள் சொல்லும். எ-று.

இ-ம். நிதானம்-ஆதிகாரணம், சநாதனம்-அநாதி.

அ-கை. விலக்குநாமங் கூறல்.

அசலநிரஞ்சனமமிர்தமப்பிரமேயம் விமலம்வசனாதீதம்
அசடமநாமயமசங்கமதுலநிரந்தரமருவநிருபாகண்டம்
அசமனந்தமவிநாசிநிர்க்குணநிஷ்களநிரவயவமநாதி
அசரீரமவிகாரமத்துவிதமெனவிலக்கு மநேகமுண்டே.

இ-ள். சலனம் இன்மையும், அஞ்சனம் இன்மையும், மிர்தம் இன்மையும், பிரமேயம் இன்மையும், மலம் இன்மையும், வாக்குக் கெட்டாமையும், சடம் இன்மையும், ஆமயம் இன்மையும், சங்கம் இன் மையும், துலம் இன்மையும், அந்தரம் இன்மையும், அருவ இன்மையும் ரூபம் இன்மையும், கண்டம் இன்மையும், சன்மம் இன்மையும், அந நதம் இன்மையும், நாசம் இன்மையும், குணம் இன்மையும், சகளம் இன்மையும், அவயவம் இன்மையும், ஆதி இன்மையும், சரீரம் இன் மையும், விகாரம் இன்மையும், துவிதம் இன்மையும், என்று சொல் லப்பட்ட விலக்கு நாமங்களும் அநேக முள்ளனவாம். எ-று.

அப்பிரமேயம் - அறியப்படாதது, அநாமயம் - நோயில்லாதது, அதுலம் - கனமில்லாதது, நிரந்தரம் - இடையில்லாதது, நிரவயவம்- அவயமில்லாதது, அசம்-பிறப்பில்லாதது. 137

அ-கை. இவ்விரு விலக்கு நாமங்களின் ஒருமை கூறல்.

இன்னவகைவிதிவிலக்குக் குணங்களொன்றாச் சேர்த்தொ
ருமித்தெல்லாங்கூடிச், சொன்னபொரு ளொன்றன்றிப்பிரண்

டில்லை யொருபொருளைச் சொல்லுஞ்சொற்கள், பின்னபதமா
மதனாற் சத்தாதிகுணப்பொருளாம் பிரமமேகம், அன்னபொ
ருளொருமையறிந் தகண்டபரி பூரணமாயாவாய்நீயே.

இ - ள். இத்தன்மையவாக விதியும் விலக்கும் ஆகிய குணங்கள் நன்றாகச்சேர்ந்து ஒன்றுபட்டு அனைத்துங் கூடிச் சொல்லியஅநந்தம் ஏகமே அன்றி துவிதமில்லை ; ஏகவஸ்துவை உரைக்கும் வசனங்கள் வெவ்வேறு சொற்களாம், ஆதலினால், சத்து சித்து ஆநந்தம் என்னுங் குணப்பதங்கட்குப் பிரமமொன்றே பொருளாம்; அத்தன்மையதான அருத்தத்தின் ஒருமையைத்தெரிந்து அகண்டமான பூரண ஸ்வரூபமாக நீ ஆகக்கடவாய். எ-று.

இ - ம். இவ்விதி விலக்கு நாமங்கள் பலவாயினும், கைமலை, கறையடி, புழைக்கைஎன்னுஞ் சொற்கள் வெவ்வேறு பதமாரினும், அவைகளின் பொருளான யானை பின்னமாகாமல் ஒன்றேயாவதுபோலும், ஒரு புருடனைப் பிதாமகன் தம்பி என்னும் அநேக சொற்களாற் சொல்லினும் அவன் அநேகன் ஆகாமல் ஒருவனே யாவதுபோலும், அவைகளால் உணர்த்தப்படும் பொருள் ஒன்றாதல் போலச் சத்து சித்து ஆநந்தம் என்னும் பதங்கள் மூன்றாயினும் அவையுணர்த்தும் பொருள் ஒன்றான அத்துவித வஸ்துவாயிருத்தலால் சந்தேக மொழிந்து அதுவாயிருத்தி என்பதாம். 138

அ - கை. குணாதீதமான வஸ்துவிற்குக் குணங் கூறலாமோ? என்பதற்கு உத்தரங் கூறல்.

நிர்க்குணவஸ்துவின் குணங்களுரைப்பதுதாய் மலடியெ
னனிகரென்றதே, சற்குணனேவஸ்துவிலை யுரையாம லறிய
வல்லசதுரருண்டோ, நற்குணவே தங்களிந்தச் சீவன்முத்தி
பெறப்பிரம ஞானந்தோன்றச், சொற்குணங்கள் பிரமத்தின்
குணங்களல்ல பிரமமாஞ் சொரூபந்தானே.

இ-ள். சற்குணனே? குணரகிதமான பிரம வஸ்துவிற்கு இத் தன்மையான நாமங்களைச் சொல்வது தாய் மலடி என்பதற்குச் சமான மென்று சொல்லாதே; வஸ்து நிச்சயத்தை ஆசிரியர் சொல்லாமல் தாமே தெரிந்துகொள்ளும் வல்லமையுள்ள சதுரரான சிஷருமுளரோ? ஆதலால், நல்ல சுபாவத்தையுடைய சுருதிகளானவை இச்சீவன் முத் தியை அடையும்பொருட்டுப் பிரமஞானம் உதிக்கும்படி உரைத்த சத் தாதிகுணங்கள் பிரமத்தின் குணங்களல்லவாம், அதன் அருத்தம் பிரம ஸ்வரூபமேயாம். எ-று

இ-ம். அறிதல், இறந்தவிடத்து அனுபவமாய் உள்ள நிர்க்குண வஸ்து, அறிவிற்கு அவதானமாகும்பொருட்டு, உரைக்கும் பரியாயநாம ங்களின் அருத்தப்படி சிந்திக்கின் இக்குணரூபம் இறந்து, அக்குணா தீத ஸ்வரூபம் வெளிப்படும் அன்றி, மற்றொன்றால் வெளிப்படாது. ஆதலால், அங்ஙனம் கூறுஞ் சுருதிப் பிரமாணத்தை உணர்த்தியவா தாம்.

139

அ-கை. சச்சிதாநந்தப் பொருள் ஒன்று என்பதைச் சுருதியில் காட் டினதுபோல யுத்தியிலுங் காட்டல்வேண்டும் என விளுதல்.

மோகவிருள்கெடக்கோடி யருணனென வருகுருவேமொ
ழியக்கேளீர், ஏகபரிபூரணமா மென்சொரூபமென்னுளத்திலி
ருக்கும்வண்ணம், ஆகமங்கள்சொன்னபடி யென்னையகண்டா
த்தமா வறிந்தேனையா, ஊகமுமொத்திட வுரைத்தாற் பசுமர
த்திலாணிபோ லுறைக்கு நெஞ்சே.

இ-ள். மோகாந்தகாரம் நீங்கக் கோடிசூரிய ருதயமானதுபோல எழுந்தருளிய ஆசாரியரே! அடியேன் சொல்வதைக் கேட்டருள்க; ஒன்றான பூரணஸ்வரூபமாகிய எனது பிரமஸ்வரூபம் என் இதயத்தில் அழுந்துமாறு சுருதிகள் சொல்லியபடி எனது ஸ்வரூபத்தை அகண் டப்பொருளாகத் தரிசித்தேன்; எனது ஆசிரியரே! யுத்தியும் பொ

ருந்தும்படி அருளிச்செய்தால், மனம் பச்சைமறத்திலறையும் ஆணியைப்போல் ஸ்திரப்படும். எ-று.

இ - ம். வெளிப்படை. 140

அ - கை. மேல் வினாவிற்கு உத்தரங் கூறல்.

சத்தேசித்தாகுமய லெனிலசத்தா மசத்தானுற்சாக்ஷியெங்கே, சித்தேசத்தாகுமய லெனிற்சடமாஞ் சடங்களுக்குத் திதியுமில்லை, ஒத்தேதோன்றிய சத்துஞ்சித்து நல்லசுகமாகுமூகத்துக்கோர், விதித்தேயன்னியமாகிற் சடமசத்தாஞ்சுகானுபவம் விளைந்திடாதே.

இ - ள். சத்தாக விளங்குதலே சித்தாகும் சத்துக்குச் சித்துவேறென்றால் அப்போது சத்து இல்லாததாம்; இல்லாததாயின், நடுவாயிருந்தறியும் சாக்ஷி எங்ஙனமாம்? சித்தாயிருத்தலே சத்தாகும்; சித்துக்குச் சத்து வேறென்றால் அறியாமையாம், அத்திரிசயங்களுக்கு விளங்குந் தன்மையுமில்லையாம்; (ஆதலால்) பொருந்தத்தோன்றிய திரிகாலங்களிலும் நசியாதிருக்கின்ற சத்தும் முக்காலங்களிலுந் தெளிவாக விளங்கிய சித்துமே நிரதிசயாநந்தமாகும்; உத்திக்கோர் விதையாகும்; வேறானால் சித்துஞ் சத்துஞ் சடமும் அசத்துமாம்; அங்ஙனமாயின், ஆநந்தமுதியாமல் துக்கமுண்டாகும். எ-று.

ப - ம். சத்தே சித்தாகாவிடின் தன்னையறியுந் தன்மை இல்லை என்பார், 'சாக்ஷியெங்கே' எனவும், சித்தேசத்தாகாவிடின் சர்வம் பிரமமயமாக விளங்குதல் இன்றென்பார்; 'சடங்களுக்குத் திதியுமில்லை' எனவும் இவ்விருமையின் ஒருமையினுதிப்பதே நிரதிசயாநந்தமென்பார், 'நல்ல சுகமாகும்' எனவும் இவ்வுத்தி அனுபவத்துக்கு மூலமென்பார், 'ஊகத்துக்கோர்வித்து' எனவும், வேறுபடின் இச்சச்சிதாநந்தம் அனார்த சட துக்கமாமென்பார், 'அன்னியமாகில் சடமசத்தாஞ் சுகானுபவம் விளைந்திடாது' எனவுங் கூறினர். 141

இதுவுமது.

வியாதசத்துமுன்னம் விளங்குவதன்றேலோ வேறொன்றேலோ, வாயால்வேறெனிலதுவு மசத்தோசத்தோ வசத்தேன் மலடிமைந்தன், பேர்காரியஞ்செயுமோ வசத்தெனவிப் படியதையும் பிரித்துச்சொன்றல், ஓயாதயவத்தையாங் குதர்க்கவிகற் பங்களைவிட் டொழிந்திடாயே.

இ - ள். பேயனே! திரிகாலங்களிலும் கெடாத சத்தானது முன் பிரகாசிப்பது தன்னாலேயா? மற்றொன்றாலேயா? வாக்கினால் வேறென்றால், அச்சத்தமும் இல்லாததா? இருப்பதா? இல்லாததென்றால், வந்தியா புத்திரன் தொழிலைச் செய்வானா? அக்கிரியைகளையும் இங்ஙனம் அசத்தென்று பகுத்துச்சொல்லின்? நீங்காத அவத்தையாம், குதர்க்கமாகிய வேறுபாடுகளை விட்டு நீங்குவாயாக. எ-று.

ப - ம். தன்னை அறிவதுதானே அன்றி வேறாமோ என்பார் 'வியாத சத்து முன்னம் விளங்குவதுதன்றாலோ வேறொன்றாலோ,' எனவும், அங்ஙனம் உரைக்குஞ் சத்தமும் இருந்ததை உரைக்குமா? இல்லாததை உரைக்குமா? என்பார், "வாயால் வேறெனிலதுவுமசத்தோ சத்தோ" எனவும், இல்லாதது நிகழுமா? என்பார், 'அசத்தேன்மலடி மைந்தன்காரியஞ் செயுமோ' எனவும், இல்லாதது நிகழும் என்னின் நீங்காத சங்காவத்தை உண்டாகும் என்பார் 'அசத்தென விப்படி யதையும் பிரித்துச் சொன்னாலோ யாதவத்தையாம்' எனவும் இருந்ததே அறிவென்னும் அனுபவங்கொண்டு இல்லாததை நீக்குவாய் என்பார், 'குதர்க்க விகற்பங்களை விட்டொழித்திடாய்' எனவுங் கூறினர்.

இ - ம். இருந்தது விளங்குதலின் சத்தே சித்தெனவும், விளங்குவதே இருத்தலின் சித்தே சத்தெனவும், இன்பவுருவாயின் அவ்விளைதலின் இஃதே ஆனந்தமெனவும், இவ்வனுபவத்தால் சுத்தப்பிரமாணம் உணர்த்தியதாம். 142

அ-கை. சச்சிதாநந்தப்பதங்களின்பொருள் ஒன்றென்பதற்கு அனு பவங் கூறல்.

சுருதியுத்தியொத்ததுபோ லனுபவமுங் கேள்சுழுத்திச் சுகவாநந்தம், மிருதிவடிவாதலினவ் வானந்தமேயறிவாம் வேற ங்கில்லை, கருதுபிரளயஞ்சுழுத்தி யிரண்டிலுநீயிருந்திருளைக் காண்கின்றாயே, இருதயத்திப் படிநோக்கி யேகபரிபூரணமா யிருந்திடாயே.

இ-ள். சுருதியும் உத்தியும் பொருந்தினதுபோல அனுபவத்தை யுங் கேளாய்; சுழுத்தி அவத்தையில் உள்ள ஆநந்தமானது பூரணஸ்வ ரூபமாதலின் அந்த ஆநந்தமே ஞானமாம்; அவ்விடத்து மற்றொன் றில்லை, நினைக்கின்ற கற்பாந்தமும் சுழுத்தி அவததையும் ஆகிய இரண்டு காலத்தும் நீ சத்தாகநின்று அந்தகாரத்தைப் பார்க்கின்றாய் அல்லவா? உனது இருதயத்தில் இவ்விதமாகப் பார்த்து ஒன்றான பூரணஸ்வரூப மாகவே இருப்பாயாக. எ-று.

ப-ம். அறிதல் இறந்த சுழுத்தியில் ஆநந்தம் விளங்குதல் அதற்கே தெரிதலின் அவ்வாநந்தமே அறிவென்பார், 'சுழுத்தி சுகவாநந்த மிருதி வடிவாதலி னவ்வாநந்தமே யறிவாம் வேறங்கில்லை' எனவும் இருளை அறியுமிடத்து அவ்வறிவே தானாயிருத்தலின் அறிவே சத்தென்பார், 'பிரளயஞ் சுழுத்தியிரண்டிலு நீ யிருந்திருளைக் காண்கின்றாய்' எனவுங் கூறினார்.

இ-ம். சச்சிதாநந்தத்தின் பொருள் ஒருமை என்பதற்கு அனுபவங் கூறியதாம். சுருதி யுத்தி அனுபவங்களோடும் உணர்த்திய சச்சிதாநந் தத்தின் பொருளொருமையின் ஸ்வரூபத்தைத் தேசிக ருபதேசமுகத் தால் தெரிந்துகொள்க. 143

அ-கை. சுருதி யுத்தி அனுபவப்படி சீடன் சகச நிட்டையில் பெற்ற அனுபவங்கூறல்.

பலகலையுமுணர்ந்தகுரு மொழிந்தபடியிலனுபவ மனைவிடாமல், பலமலரின்மதுப்போலச் சச்சிதானந்தமொன்ரும் பரமார்த்தத்தைப், பலபொழுதுங்கண்மூடிச் சமாதியிருந்தான்விழித்துப் பார்த்தபோது, பலவடிவாஞ் சராசரசித் திரங்களெலாந் தோன்றுமொரு படமானனே.

இ-ள். சகலசாஸ்திரங்களையும் அறிந்ததேசிகர் அனுக்கிரகித்தவண்ணம் இச்சீடனும் அனுபவத்தைவிட்டு நீங்காமல் பலமலர்களிலிருக்கும் தேன் ஒருமித்ததுபோலச் சத்துச் சித்தானந்தங்கள் ஏகமாகிய பிரமப்பொருளை எப்போதும் ஊனக்கண்ணைமூடி ஸ்வரூப சமாதியிலிருந்து ஞானவிழியால் பார்க்கும்போது நாநாவித உருவங்களான தாவரசங்கமமாகிய சித்திரங்களனைத்தும் தோன்றுகின்ற ஓர் சித்திரப்படமானான்.

அ-கை. துரியாதீதமே துரியமாக விளங்கும் அனுபவத்தில் நவநவமா ரமிக்கும்பொருட்டு அஃது உதயமாதற்கு இடமான ஞானபூமியைக்குறித்து நான்குவகையாக வினுதல்.

இதயமொத்த சற்குருவே நமக்கிதுவே விநோதமன்றி யினி வேறுண்டோ, அதையுரைத்து மதைநினைத்துமிருப்பதன்றோ ஞானிகளுக்கானநீதி, முதலுரைத்த துரியாதீதமுமேழாம் பூமியுமுக்கியமாமென்ற, பதமுமதின் வகையுமெனக்கெளிதாகத் தெரியும்வண்ணம் பணித்திடீரே.

இ-ள். மனமொத்த என்னுடைய ஆசிரியரே! நமக்கு இவ்விசாரமேயல்லாமல் இனிவேறும் ஒன்றுளதோ அப்பிரமத்தை வாக்கினுல் பேசியும் மனதினுல் தியானித்தும் இருப்பதல்லவோ ஞானவான்களுக்கான நியாயம்? முன்சொன்ன துரியாதீதத்தையும் ஏழாவது பூமியும் முக்கியமாமென்று சொல்லிய பதமும் அதின் பகுப்பையும் அடியேனுக்குச் சுலபமாகத் தெரியும்படி அருளிச்செய்வீராக. எ-று.

இ - ம். வெளிப்படை. 145

அ - கை. சுவானுபவத்தில் செல்லு மனோலய மார்க்கமான ஞான பூமியைக் கூறுவான் தொடங்கி உற்பத்திக் கிரமமான அஞ்ஞான பூமியின் வகையாகிய நாமங்கள் ஏழையும் முற் கூறுகின்றார்.

வினவுமிடத்தஞ்ஞான பூமிகளேழ் ஞானபூமிகளேழென் பர், இனியவற்றுளஞ்ஞான பூமிகளேழையுமுந்தி யியம்பக் கேளாய், தனிவித்துச் சாக்கிரஞ்சாக் கிரமகாசாக்கிரஞ்சாக் கிரத்தைச்சார்ந்த, கனவுகனக்கனவுசாக் கிரஞ்சுழுத்தி யென் றெழுபேர் கணித்தார்மேலோர்.

இ - ள். விசாரிக்குமிடத்தில் அஞ்ஞான பூமிகள் ஏழு ஞானபூமி கள் ஏழு என்று சத்துக்கள் சொல்லுவார்கள்; இனி அவைகளுக்குள் அஞ்ஞான பூமிகள் ஏழினையும் முன்பு சொல்லுவோம் கேட்பாயாக: தனிமையான வித்து நனவுஎனவும், நனவு எனவும், மகா நனவு எனவும், நனக்கனவு எனவும், கனவு எனவும், கன நனவு எனவும், சுழுத்தி என வும் ஏழுநாமங்கள் மகான்கள் கூறினார்கள். எ-று.

இ - ம். வெளிப்படை. 146

அ - கை. அவற்றுள் நான்கு பூமிகளின் இலக்கணமுங்கூறல்.

முந்தவகண் டத்தெழுமோ ரறிவுமாத் திரமதுதான் முதல்வித்தாகும், இந்தவறி விற்பண்டில் லாவகந்தைமுளைப் போலாமிதுநனவாம், வந்துவந்து பிறவிதொறு மகமமதை வளருமது மகாநனவாம், நந்துமகங் கொடுநனவின் மனோ ராச்சி யஞ்செயலே நனக்கனவே.

இ - ள். முன்னரே உள்ள அகண்டமாகிய சத்தில் உதித்த ஒரு ணர்வாகிய அதுவே முன்னுண்டான வித்து நனவாம்; இவ்வித்தாகிய உணர்வில் முன்பில்லாத அகந்தையானது முளைபோல உண்டாம் இது

சாக்கிரமாகும்; உண்டாகிச் சகங்கள் தோறும் யான் எனது என்கின்ற விருக்ஷம் வளரும் அது மகாசாக்கிரமாம்; நசிக்கின்ற அகந்தைக்கொண்டு சாக்கிரத்தில் மனோராச்சியஞ் செய்வது சாக்கிரசொப்பனமாம். எ-று.

ப-ம். அறிவு அறியாமை இன்றி அறிவாக விளங்குகின்றதன்னிடத்தில் எதிரிட்டறிய உதித்த போதமே சகசீவபரத்துக்கு மூலமான பிரகிருதியென்பார் 'முதல்வித்தாகும்' எனவும் இவ்வறிவில் பிரதிபலனமாக வெளிப்படுஞ் சாயையா னென்னு மறிவே சகசீவபர வுற்பத்திக்கு அடையாளமான மகத்தத்துவமென்பார் 'நனா' எனவும், அச்சகசீவபரங்களை யான் எனது என மமதகங்காரமாக வெளிப்படும் அறிவே அகங்கார தத்துவம் என்பார், 'மகாநனவு' எனவும், அச்சகசீவபரங்களின் உருவமே நான் என வியாபித்து அதுவாக நிற்கும் அறிதல்போலத் தோற்றமென்பார் 'நனாக்கனா' எனவுங் கூறினர். 147

அ-கை. ஏனைய மூன்று பூமிகள் இலக்கணமுங் கூறல்.

உண்டுறங்கி மனோராச்சி யஞ்செயல்சொப் பனமெனும்
பே ருடையதாகும், பண்டுகளுக் கண்டுமறந் ததைமீண்டு
நினைப்பது சொப்பன நனவாம், மண்டுமிருண் மூடுவது சுழுத்
தியாமஞ்ஞான வகைகள் சொன்னோம், விண்டுநிறை முத்திதரு
ஞானபூமிகளேழும் விளம்பக் கேளாய்.

இ-ள். புசித்து நித்திரைசெய்து மனோராச்சியஞ் செய்வது கனா வென்னு நாமமுள்ளதாம்: முன் சாக்கிரத்திற்பார்த்து மறந்துவிட்டதைத் திரும்ப ஞாபகப் படுத்துவது சொப்பன சாக்கிரமமாம்; மிகுந்த இருள் மூடிக்கொள்வது சுழுத்தியாகும்; அஞ்ஞான பூமிகளின் விதத்தைச் சொன்னோம்; சட முதலியவைகள் வேறுபட்டுப் பரிபூரணமான (கைவல்லியத்தைக் கொடுக்கும்) ஞானபூமிக ளேழையும் சொல்லக் கேட்பாயாக. எ-று.

ப-ம். அச்சகசீவ பரங்களின் யதார்த்தம் இஃது எனத் தோன்றாது அதனில் வியாபிக்கும் அறிவே மனோராச்சியம் என்பார், 'சொப்

பணம்' எனவும், அவ்வறிவு சகசீவபாங்களை மறந்து நினைக்கும் என்பார், 'சொப்பன நனு' எனவும், அச்சக சீவபாங்களை தானுகி நின்று தன்னை முழுதுமறந்த அறியாமையே மீளாத மகாசுழுத்தி என்பார் 'இருள் மூடுவது சுழுத்தியாம்' எனவுங் கூறினர்.

இ - ம். வித்துநனவு, நனவு, மகாநனவு ஆகிய இம் மூன்றும் அறிவு பரிணமித் தாகாரமாய் எதிரிடுதலால் சாக்கிரம் எனவும், சாக்கிரசொப்பனம் சொப்பனம் சொப்பனசாக்கிரம் ஆகிய இம்மூன்றும் எதிரிடுகின்ற ஆகாரங்களின் அறியாமையோடு விவகாரங்கள் செய்தலின் சொப்பனம் எனவும், சுழுத்தி ஒன்றுஞ் சிருட்டிமுதல் இதுகாறும் தன் யதார்த்தந் தெரியாமல் விடயாநந்தகாரமாக உறங்குதலின் சுழுத்தியெனவுங் கூறினரென்பதாம். 148

அ - கை. ஞானபூமிகளின் நாமங்கள் ஏழையுங் கூறுகின்றார்.

புலவர்புகழ்முதற் பூமிசுபேச்சை விசாரணையி ரண்டாம் பூமியாகும, நலதனுமானசிமூன்றும் பூமிசத்துவாபத்திநாலாம் பூமி, சொலுமசஞ்சத்திப்பேரும் பதார்த்தாபாவனைப் பேருந் துரியப்பேரும், மவினமறுமகனே யைந்தாறேழுபூமிகளா வகுத்தார்மேலோர்.

இ - ள். களங்கமற்ற மைந்தனே! அறிஞர்கள் துதியாநின்ற மூந்தின பூமியானது சுபம் விரும்பல் எனவும், இரண்டாம் பூமியானது விசாரம் செய்தல் எனவும், மூன்றும் பூமியானது மனஞ் சிறுகல் எனவும், நான்காம் பூமியானது உண்மையிலே நிலைபெற்றுநிற்றல் எனவும், சொல்லாநின்ற சங்கற்பம் அறல் என்னு நாமமுடையதையும் பதார்த்த எண்ணம் அறுத்திடல் என்னும் நாமமுடையதையும் துரியம் என்னும் நாமமுடையதையும் முறையே ஐந்தாம்பூமி, ஆறும்பூமி, ஏழாம் பூமிகளாக மகான்கள் பிரித்தார்கள். எ-று.

இ - ம். வெளிப்படை. 149

அ-கை. அவற்றுள் நான்கு பூமிகளின் இலக்கணங் கூறல்.

துர்ச்சங்க நிவிர்த்திவந்து சிவஞானம் விரும்புவது சுபேச்சையாகும், நற்சங்க மொழியினலி ஞானநூல் பழகல்விசாரணையாகும்பின், முற்சங்க விஷயங்கள் விடறனுமானசியித்த மூன்றினாலும், சற்சங்க மனதினுண்மை யறிவுதித்தல் சத்துவா பத்திதானே.

இ-ள். துர்ச்சங்க நீங்கிச் சிவஞானத்தை யாசிப்பது (சுபத்தை விரும்புதலாகிய) சுபேச்சையாகும்; சாதுசங்கத்தைச் சேர்ந்து அவருரைக்கும் வாக்கியத்தைக்கேட்டு, ஞான சாஸ்திரத்தை அப்பியாசிப்பது விசாரணையாகும்; விசாரத்தின் வெளிப்படும் பொருளைக்கண்டு முன்னுள்ள இச்சைகளை நீக்குதல் (மனஞ் சிறுகுதலாகிய) தனுமானசியாகும்; இம்மூப்பூமிகளின் பழக்கத்தினாலும் சற்சங்கம் பழகிய மனதில் மெய்யுணர்வு பிறத்தல் (உண்மையிலே நிலைபெற்ற நிற்றலாகிய) சத்துவா பத்தியாகும். எ-று. 150

அ-கை. ஏனைய மூன்று பூமிகளின் இலக்கணங் கூறல்.

தத்துவத்தின் மனமுறைந்து மித்தையெலா மறத்தலசஞ் சத்தியாகும், அத்துவிதாநந்தம்வருந் திரிபுடிபோம் பதார்த்த பாவனையதாகும், வத்துநிலை யிருந்தபடி யிருந்தமவுன சுபாவந் துரியமாகும், இத்துரிய பூமியைமுன் றுரியாதீதப் பதமென் றதுவுங்கேளாய்.

இ-ள். உண்மையில் மனம் ஸ்திரப்பட்டுப் பொய்ம்மைகளனைத்தையும் மறந்துவிடுவது (சங்கற்பம் அறலாகிய) அசம்சத்தியாகும்; அத்துவிதாநந்த முண்டாதலும் திரிபுடி நீங்குதலும் (பதார்த்த எண்ணம்) அறத்திடலாகிய பதார்த்த பாவனையாகும், பிரமவஸ்துவின் நிச்சயம் பூர்த்த வண்ணமிருக்கின்ற மௌனத்தன்மையே துரியமாம்; இந்தத்

துரியபூமியை முன்பு துரியாதீதப்பதம் என்று சொன்னதையும் கேட்பாயாக. எ-று.

இ-ம். சாதன சதுட்டய முதித்து விஷய தோஷ திருஷ்டி உண்டாய்த் தன்னைத் தரிசிக்க விரும்புவதே சுபேச்சை எனவும் விருப்பத்தால் அவனாகிய சித்துருவமும் தானல்லாத சடவுருவமும் இஃதெனவிசாரித்தல் விசாரணை எனவும், அவ்விசாரத்திலுள்ள சித்தில் வாசனை உண்டாய்ச் சடவாசனை விட்டு மனமடங்குதலே தனுமானசி எனவும், அச்சித்து வாசனை மிகுந்து அது அனுபவமாக வெளிப்படுதல் சத்துவாபத்தி எனவும், அச்சித்துயத்தினால் சடபாவநீங்குதல் அசஞ்சத்தியெனவும், அச்சித்தில் ஆநந்தோதயமாய் இரண்டற யாவுந்தானே தானாயிருத்தல் பதார்த்தபாவனை எனவும், இவ்வனுபவம் எப்போதும் உள்ளதாக விளங்குதல் துரியம் எனவுங் கூறினதாம். 151

அ-கை. இந்தத் துரிய பூமியே துரியாதீதமாகும் இயல்புதோன்றச் சத்த பூமியையும் பஞ்சாவத்தை ஆகப் பகுத்து அதன் வகையும் இலக்கணமுங் கூறுகின்றார்.

முப்புவி மூன்றினு முலகந் தோன்றுதலாற் சாக்கிரமா
மூன்றற் கப்பால், சொப்பனமா மதுவுமெள்ள நழுவுமஞ்சாம்
பூமியே சுழுத்தியாகும், அற்புதமாஞ் சுவானுபவ மிகுமாறாம்
புவிதுரிய மதற்கப்பாலோர், கற்பனையிலாதவிட மதீதமென்று
மவுனமாக் காட்டும்வேதம்.

இ-ள். முதற்கட் கூறிய பூமிகள் மூன்றிலும் சகந்தோன்றுகின்றபடியால் அம்மூன்று பூமியுஞ் நனவாகும்; நான்காவது பூமிகனவாகும்; அக்கனவு மெள்ள நீங்குகின்ற ஐந்தாம் பூமியே சுழுத்தியாம்; அதிசயமாகிய சுவானுபவமிகுந்த ஆறாம்பூமி துரியமாகும்; ஏழாம்பூமி ஒரு கற்பனையும் அற்றவிடம் துரியாதீதமென மௌனமாகச் சுருதியானது தரிசிப்பிக்கும். எ-று.

இ - ம். சுபேச்சை விசாரணை தனுமானசி ஆகிய இம்மூன்றின் சகம் விஷயரூபமாகத் தோற்றுதலின் அவை சாக்கிரம் எனவும், சத்துவாபத்தியில் சகம் நினைவுருவாகத் தோற்றுதலின் அது சொப்பனம் எனவும், அசஞ்சத்தியில் சகந்தோன்றாமையின் சுழுத்தி எனவும், பதார்த்தா பாவனையில் சகம் சின்மாத்திரமாகத் தோற்றுதலின் அது துரியம் எனவும், துரியத்தில் காண்பானும் காணப்படுஞ் சகத்தும் சத்தாமாத்திரமாக விளங்குதலின் அது துரியாதீதம் எனவுங் கூறினதாம். அனுபவிக்கும் பூமிகள் ஐந்தவத்தை யானதெனக் கொள்க. 152

அ - கை. இவ்வேழாம் பூமியைத் துரியம் என்பதற்கு அனுபவங் கூறல்.

துரியமெனுந் தனைத்துரியா தீதமெனின் மயக்கமென்றுகரு
திமேலோர், அரியதொரு விதேகமுத்தி யதீதமென்பாரதனை
க்கிலாறும்பூமி, மருவுசுழுத்தியிற்காட்சி சுழுத்தி என்பாரென்
பது நீமனத்திற்கொள்வாய், பெருமை தருஞானபூ மியின்வி
கற்ப மின்னுமுண்டு பேசக்கேளாய்.

இ - ள். துரியம் பூமியைத் துரியாதீதமென்றால் மயக்கமுண்டாமென்று கருதி வேதாந்தமுணர்ந்த மகான்கள் எட்டுதற்கரிய ஒப்பற்ற விதேக கைவல்லியத்தைத் துரியாதீதமென்று சொல்லுவார்கள்; அந்தக் கணத்திற்கு ஆறுவது பூமியான பதார்த்தா பாவனை பொருந்தாநின்ற சுழுத்தியைக் காணும் அறிவாகிய சுழுத்தியென்று சொல்லுவார்கள் என்று அதை நீ மனதில் வைப்பாய்; மாட்சிமையைக் கொடுக்கின்ற ஞான பூமிகளின் பேதங்கள் இன்னுமிருக்கின்றன அதைச் சொல்லக்கேட்பாய். எ-று.

இ - ம். இவ்வேழாம் பூமியைத் துரியம் எனவும் துரியாதீதம் எனவுங் கூறின் ஐயம் உண்டாம் எனக்கருதி அதனைச் சீவன்முத்தியின் இறுதியான துரியம் எனவும், இது நீங்கிய விதேகமுத்தியைத் துரியாதீதம் எனவுங் கூறுவர். அங்ஙனங் கூறுமிடத்து ஆறாம் பூமியா

டிய சுழுத்தியில் சகந்தோன்றாமல்தான் தோன்றிநிற்றல் துரியம் ஆத லின், துரியம் என்னும் ஆறாம்பூமியைக் காட்டிச் சுழுத்தி எனக்கொ ண்டு அதனோடு சேர்த்து இவ்விரண்டையுஞ் சுழுத்தி என்று கூறினார் என்பதாம். 153

அ - கை. ஞானபூமிகளை அடைந்த சீவன்முத்தர்களின் அவசாநா மங் கூறல்.

முன்னிலங்க ளேறியமூ வருமப்பியாசிகளா முத்தரல் லர், பின்னிலங்கள் வரன்வரியான் வரிட்டனெனுஞ் சீவன் முத்தர் பேதமாகும், சொன்னநடுப் பூமிவந்த ஞானிகளேபிரம வித்தாந் தூயமுத்தர், இன்னுமமப் பூமிகளின்பெருமைதனை நீயறிய யான்சொல்வேனே.

இ - ள். முதற்கணுள்ள மூன்றுபூமிகளில் ஏறிவந்த மூன்றுபேர் களுஞ் சாதகர்களாம்; சீவன்முத்தர்கள் அல்லர்; இறுதியிலுள்ள மூன்று பூமிகள் ஐந்தாம் பூமியில் ஏறியவன் பிரமவரன் எனவும், ஆறாம்பூமி யில் ஏறியவன் பிரமவரிட்டன் எனவும், சீவன் முத்தர்களின் பேதங் களாம்; இப்போது சொல்லிய பூமிகளின் மத்தியாகிய நாலாம் பூமி யில் ஏறிய ஞானவான்கள் பிரமவித்து என்னும் மேலான சீவன் முத் தர்களாம்; மேலும் அந்தஞானபூமிகளின் பெருமையை நீயறிய உனக் குத் தெரியும்பொருட்டு யான்சொல்வேன். எ-று.

இ - ம். முதன் மூன்றுபூமியை அடைந்தவர் அப்பியாசிகள் என வும், மற்ற நான்கு பூமியை அடைந்தவர் சீவன் முத்தர்கள் எனவுங் கூறினதாம். 154

அ - கை. ஞானபூமிகளில் மூன்மூன்றின் அப்பியாசத்தால்வரும் பய னும் அதில் முதற்பூமியின் அருமையுங் கூறல்.

நாலாம்பூ மியில்வருமுன் மூன்றுபூமியுமடைந்து நடந் துடரண்மீடார், மேலானபதமடைந்து பிறந்துமெல்ல மெல்

லவந்து வீடுசேர்வார், மாலான பவத்தில்வீழார் முதற்பூமி
கிடைப்பதுவே வருத்தமைந்தா, காலான முதற்பூமிகைவந்
தான் முத்தியுங்கை வந்ததாமே.

இ - ள். மகனே! ஐந்தாம்பூமியில் வருதற்கு முன்னம் மூன்று பூமியையுஞ் சேர்ந்து அவற்றை அனுஷ்டித்து வரும்போது மரித்தவர்கள் உயர்ந்த பதவியைப்பெற்றுப் பூமியிற்சனித்துக் கொஞ்சங் கொஞ்சமாக ஏறி முத்தியை அடைவார்கள்; இச்சாரூபமான சகத்தில்வீழார்; முதற்பூமியான சுபேச்சை யுண்டாவதே பிரயாசமாம்; ஆதியான முதற்பூமி கைவசமானால் மோட்சமும் கைவசமானதாம். எ-று.

இ - ம். வெளிப்படை. 155

அ - கை. அப்பியாச பூமியை அடைந்தவன் எவ்விதத்திலும் அநுபவியானவன் என்பது கருதி அவன் அநுபவியே எனக் கூறுதல்.

இப்புவியிலிஞ்ஞான பூமியொன்றி லிரண்டிலடைந்தி
ருந்தாரானால், அப்புருடாமிலேச்சராகிலுமுத்தர் குருபாதந்
தானேமெய்யே, தப்புரையென் றவர்கெடுவார் நடுவானமறை
களைநீ சங்கியாதே, செப்புமொரு வழிநிடமா யகம்பிரமமென
திருந்து தெளிந்திடாயே.

இ - ள். இவ்வுலகத்தின்கண் இந்த ஞானபூமிகள் ஏழில் சுபேச்சையிலாவது விசாரணையிலாவது சேர்ந்திருப்பாராயின் அந்தப்புருடர்கள் மிலேச்சர்களானாலும், தேசிகன் திருவடியானே சீவன்முத்தராவர் என்பது சத்தியமே; இதைப் பொய்வசனம் என்றவர்கள் பவத்தில் அழிவார்கள்; நடுவுநிலைமையான வேதவாக்கியங்களைக் குதர்க்கமாக நீ சங்கைபண்ணாதே போதிக்கின்ற உபதேசமார்க்கத்தில் ஸ்திரமாகச் சென்று கூடஸ்தனே பிரமம் என்று சகச சமாதியிலிருந்து தெளிவாய். எ-று.

இ - ம். இவ்வப்பியாச பூமியை அவசியம் அடையும்பொருட்டு அவைகளின் பெருமையையும் அவைகளாற்பெறும் பயனையுங் கூறி னதாம். 156

அ - கை. முத்தியை அடைதற்கு வர்ணாச்சிரமபேதம் வேண்டுவது இன்று என்பது தோன்ற இப்பூமிகளின் முடிவான துரியாதீதந் துறவறத்தார்க்கு அன்றி இல்லறத்தார்க்கு வாரா என்னும் ஐயத்தை நீக்கவேண்டும் என வினாதல்.

பொல்லாத மிலேச்சருக்கும் விதேகமுத்தி தருஞான பூமியென்றும், நெல்லாகிமுளைக்குமெனைத் தண்டுலமாக்கிய குருவே நீர்சொன்னீரே, இல்லாளும் குடும்பம்விட்டுச் சந்நியா சம்புகுந்தே காங்கியாரோர், அல்லாமன் முத்திபெறாரென்றுசிலர் சொன்மயக்க மகற்றுவீரே.

இ - ள். கொடியரான மிலேச்சர்களுக்கும் விதேக கைவல்லியத்தைக் கொடுப்பது ஞானபூமியாம் என்று தேவரீரருளினீர்; நெல்லைத் தைப்போலச் சனித்துக்கொண்டிருக்கும் அடியேனை அரிசியைப்போலச் சனியாமற்செய்த ஆசிரியரே! மனைவி முதலிய குடும்பத்தைத் துறந்து துறவைப்பெற்றுத் தனித்தவர்களே அன்றி மற்ற இல்லறத்தார் மோக்ஷம் அடையமாட்டார்களென்று சிலர் சொல்லுகின்ற பிரமையை நீக்குவீர். எ-று. 157

அ - கை. நால்வகைத் துறவின் நாமமும் அவற்றின் காரணமுங் கூறல்.

சிட்டர்புகழ் மகனேநீ சங்கித்தசங்கையின்று தெரியக்கேளாய், கட்டறுபுந் துறவுநால்வகையாகு மவைகளுக் கங்காகும்பேர்கள், பட்டதுயர்கெடுங்குடீசகம்பகூதக மம்சம் பரமஹம்சம், விட்டகலுந் துறவுக்கு விராகங் காரணமன்றி வேடமன்றே.

இ - ள். சற்சனர் துதிக்கின்ற மைந்தா! நீ வினவின வினாவானது நன்றாம், தெரியக்கூறுவோம் கேள்: பந்தமழிகின்ற சந்நியாசமானது நான்குவிதமாம்; அந்நான்குக்கும் அவ்விடத்தாகும் நாமங்கள் உண்டான துன்பம் நசிக்கின்ற குடீசக சந்நியாசம் எனவும், பகூதக

சந்நியாசம் எனவும், அம்ச சந்நியாசம் எனவும், பரமாம்ச சந்நியாசம் எனவும், பக்ஷத்தைவிட்டு நீங்கும் இச்சந்நியாசங்களுக்கு விராகமே காரணமே அல்லாமல் வேடங் காரணம் அன்றாம். எ-று.

இ - ம். வெளிப்படை. 158

அ - கை. துறவின் காரணமான விராக மூன்றின் நாமமும் அவைகளின் இலக்கணமுங் கூறல்.

மந்தமுந்தீவிரமுந்தீ விரதரமுமெனமூன்று வகைவிரா
கம், வெந்துயரம் வரும்பொழுது குடும்பத்தை வெறுத்து
வருதல் விராகமந்தம், இந்தவுடலளவுமனை தனம்வேண்டா
வெனவிடுதீ விரமென்பார்கள், அந்தணர் நூன்மித்தையென
விடலதுதீவிரதரமா மறிந்திட்டாயே.

இ - ள். விராகமானது மந்த விராகமும் தீவிரவிராகமும் தீவிரதரவிராகமும் என்று மூன்றுவிதமாம்; அவற்றில் வெவ்விய துன்பம் வரும்போது சம்சாரத்தை வெறுக்கின்ற விராகமானது மந்தவிராகமாம்; இத்தேகாந்த பரியந்தம் மனைவியும் திரவியமும் முதலியவைகள் வேண்டா என்று துறத்தல் தீவிரவிராகம் என்று சொல்லுவார்கள்; வேதியர்க்குரிய கன்மகாண்டங்களைக் கற்பிதம் என்று துறத்தலானது தீவிரதர விராகம் ஆகும்; இவற்றைத் தெரிந்து கொள்வாயாக. எ-று.

அ - கை. மந்தவிராகம் பயன் இன்று என்றும், தீவிரவிராக சந்நியாசம் இரண்டின் தன்மை இஃது என்றுங் கூறல்.

பாவிமந்தவிராகத்திற் சந்நியாசங்களொன்றும் பலித்தி
டாவே, தீவிரத்திற் குடீசகமும் பகூதமுமென்றிரண்டு திறங்
களுண்டாம், தாவிநடந்திடத்திடமி லாதவர்க்குக் குடீசகமுஞ்
சகங்களெங்கும், மேவிநடந்திடத் திடமுள்ளவர்க்குப் பகூ
தகமுமெனவிதித்தார்மேலோர்.

இ - ள். நீதான மந்தவிராகத்தில் துறவானவைகள் ஒன்றுஞ் சித்தியாது தீவிர விராகத்தில் குடீசக சந்நியாசமும் பகூதக சந்நியாச

மும் என இரண்டுவிதங்கள் உளவாம்; எட்டிநடக்கப் பலமில்லாதவர்களுக்குக் குடீசக சந்நியாசமும் உலகில் எவ்விடத்தும் அடைந்து நடக்கப் பலமுள்ளவர்களுக்குப் பகூதக சந்நியாசமும் உரியது என்று மேலோர் நியமித்தார்கள். எ-று.

இ - ம். குடீசக பகூதக சந்நியாசிகளின் இலக்கணங் கூறியதாம்.

அ - கை. தீவிரதரவிராக சந்நியாசங்கள் இரண்டின் பயன்கூறல்.

இருவகைதீ விரகரத்து மம்சனென்றும் பரமாம்சனென்
றுஞ்சொல்வார், வருமம்சனுக்குமுத்தி சத்தியலோகத்தன்றி
வாராதென்பார், பரமாம்சனுக்குமுத்தி யிவ்வுலகின் ஞானத்
தாற் பலிக்குமென்பார், திரமருவும் பரமாம்சன்றானுமிரு
வகையாதுஞ் செப்பக்கேளாய்.

இ - ள். தீவிரதர சந்நியாசத்தும் அம்சசந்நியாசி எனவும், பரமாம்ச சந்நியாசி எனவும், இரண்டுவிதமாகச் சாதுக்கள் உரைப்பார்கள்: வராநின்ற அம்ச சந்நியாசிக்கு மோட்சமானது அயனுலகத்திற் கிடைப்பது அன்றி இம்மையிற் கிடையாது என்று சொல்லுவார்கள்; பரமாம்ச சந்நியாசிக்கு மோட்சமானது இவ்வுலகத்தின்கண் ஞானத்தினாற் கிடைக்கும் என்று சொல்வார்கள்; ஸ்திரம்பொருந்திய பரமாம்ச சந்நியாசியும் இரண்டுவிதமாம்; இதைச் சொல்லுவோம் கேளாய். எ-று.

இ - ம். அம்ச பரமாம்ச சந்நியாசிகளின் பயன் கூறினதாம்.

அ - கை. பரமாம்ச சந்நியாசிகள் அப்பியாசியும் அனுபவியும் என இருவகையாவார் எனல்.

சிஞ்ஞாசுஞானவா னென்றிரண்டுபேர்களவரிற் சிஞ்ஞா
சு, மெய்ஞ்ஞான பூமியின்முன் மூன்றுபூமியுண்டாக்கும்
விவேகியாமொருவன், சுஞ்ஞானவானெனும்போன் சீவன்முத்தி
யடைந்திருக்குந் தூயமேலோன், அஞ்ஞான மகலுமந்தச்
சிஞ்ஞாசுமிருவகையா மதுவுங்கேளாய்.

இ - ள். சிஞ்ஞாசு எனவும் சுஞ்ஞானவான் எனவும் இருவர்களாம்; அவ்விருவர்களில், சிஞ்ஞாசு என்பவன் ஞானபூமி யேழில் மூன்றிலே மூன்றாம்பூமிகளில் செல்லுகின்ற விவேகமுள்ளவனுவன்; சுஞ்ஞானவா னென்பவன் சீவன்முத்தியைப் பெற்றிருக்கின்ற பரிசுத்தமான மகா னும், அறிவின்மை நீங்கும் அச்சிஞ்ஞாசுவும் இரண்டுவிதமாம்; அதை யுங் கேளாய். எ-று.

இ - ம். பரமாம்சத்தின் கூறான சிஞ்ஞாசு சுஞ்ஞாசு என்னும் இரண்டு சந்நியாசிகளின் இலக்கணங் கூறினதாம். 162

அ - கை. சிஞ்ஞாசு என்பவன் இல்லறத்திலேனும் துறவறத்திலே னும் இருந்து முத்தியை அடைவன் எனல்.

பந்தமனை துறந்துசில ரதிகளாயிருந்தடைவர் பரம
ஞானம், அந்தணர்மன் னவர்வணிகர் சூத்திரராயிருந்துசில
ரடைவர்ஞானம், இந்தவகைசாஸ்திரத்து முலகத்துங்கண்டிருந்
துங்கண் டிருந்துமைந்தா, சிந்தையின் மயக்கமென்ன சுருதி
யுத்தியனுபவத்தாற் றெளிந்திடாயே

இ - ள். மகனே! சிலர் பந்தமான இல்வாழ்க்கையை விட்டுத்துற விகளாக இருந்து பிரமஞானத்தைப் பெறுவார்கள்; சிலர் பிராமணரா கவும் க்ஷத்திரியராகவும் வைசியராகவும் சூத்திரராகவும் இருந்து பிரம ஞானத்தை அடைவார்கள்; இவ்வகையை ஆகமப் பிரமாணத்திலும் உலகத்தில் நடப்பதாகிய பிரத்தியட்சப் பிரமாணத்திலும் பார்த்திருந் தும் மனதில் சந்தேகம் என்? சுருதி யுத்தி அனுபவம் என்னுமூன்றி னாலும் தெளிவாய். எ-று.

இ - ம். முத்தியை அடைதற்கு விராகத்தால் வருஞ் சாந்தியே காரணம் அன்றி இல்லறம் துறவறம் என்னும் இரண்டும் அல்லவெனக் கூறியதாம். 163

அ - கை. மேற்கூறுவோம் என்றவாறே முற்கூறிய சர்வார்த்தங் களும் அடங்கிய வேதங்களின் முடிவான வித்தியாநந்தமாகக் கூற

வான் தொடங்கி இச்செய்யுளில் பிரமமே கூடஸ்தன் எனக் கூறு கின்றார்.

பிறந்ததுண்டானாலன்றோ பிறந்துசாவதுதானுண்டாம்
பிறந்ததேயில்லையென்னும் பிரமமாவதுவுநானே
பிறந்ததுநானன்றாகிற் பிரமமென்றந்தநானே
பிறந்ததுமிறந்ததற்ற பிரமமானானேநானே.

இ - ள். சனித்து உளதாயின் அன்றோ பின்மரித்தலும் உளதாம்; சனித்தே இன்று என்னும் பிரமம் என்பதும் நானேயாம்; சனித்தது நானல்லன் ஆயின் பிரமம் என்று சொல்லப்பட்ட அந்தநானே உற்பத்தியும் லயமும் இல்லாத பிரமம் ஆகிய கூடஸ்தனே நான். எ-று.

ப - ம். சாமவேத மகாவாக்கியப்படி அது நீயானாய் என்பார், 'பிரம்மா நானே' என்றார், பிரமம் என்பது அது என்னும் ஆனந்தமும் நான் என்பது நீ என்னும் வித்தையும் ஆம் என்பது ஆனாய் என்னும் ஐக்கியமும் ஆமெனக்கொள்க. 164

அ - கை. கூடஸ்தனே பிரமம் எனக் கூறுகின்றார்.

நானென்றபிரமமான காணேநானறியேனென்றால்
நானென்பதேதுபின்னை நம்முடைப்புந்தியென்னில்
தானதுமயக்கந்தன்னிற் சாகுமேசாவாதாகில்
நானெனநிறைந்திருந்த ஞானமானானேநானே.

இ - ள். யானென்றும் சொல்லும் பிரமமாகிய யானேயான்காணிலேன் என்னின் யான் என்பது யாது? பின்பு நமது புத்தியென்று சொல்லில் அப்புத்தியும் சுழுத்தி மயக்கத்தி லிறக்குமே, அங்ஙனம் இறவாதிருக்குமாயின் யானே நான் என்று பூரணமாக விளங்கிய மெய்ஞ்ஞானமாம். எ-று.

ப - ம். இருக்குவேத மகாவாக்கியப்படி ஞானமே பிரமம் என்பார், 'நானென்ற பிரமம்' என்றார், நான் என்பது ஞானமாகியவித்தை எனவும் பிரமம் என்பது ஆநந்தம் எனவும் கொள்க. 165

அ - கை. வித்தியாநந்தத்தின் ஒருமை கூறல்.

நிறைந்தவாறெந்தவாறு நிலைதெரிந்திலனென்றாயேல்
அறிந்ததாஞ்சுழுத்திதன்னி லாநந்தமதுவேயாகும்
குறைந்ததுக்காநந்தந்தான் குவலயந்தன்னிலில்லை
நிறைந்ததேயிந்தவான்மா நிதானமிவ்வறிவுதானே.

இ - ள். யான் பரிபூரணமானவிதம் எவ்வண்ணம் நிச்சயந் தெரிகிலன் என்பாயானால், நனவிற் சுழுத்தியின்கணுள்ள நிரதிசயாநந்தமானது அப்பூரணமேயாம்; ஏகதேசமான சுகதுக்கங்கள் உலகத்தின்கணில்லையாம்; இவ்வாத்மாவே பூரணமானது; இச்சை தன்னியமே நிதானமாம். எ-று.

ப - ம். யசுர்வேத மகாவாக்கியப்படி அகம் பிரமாஸ்மி என்பார், 'நிறைந்ததே யிந்தவாத்மா நிதானமிவ் வறிவுதானே' எனக்கூறினார். நிறைந்ததென்பது பிரமம் என்னும் அநந்தமும், ஆத்மா என்பதும் அகம் என்னும் வித்தையும், நிதானம் இவ்வறிவு என்பது அஸ்மி என்னும் ஐக்கியமும் ஆமெனக்கொள்க. 166

அ - கை. வித்தியாநந்த ஒருமையான சுவானுபூதியே தானெனல்.

மனத்தினாலெண்ணித்தானே வந்ததிவ்வுலகமாகும்
நினைத்திடிலநேகமெலாக நிற்பதவ்வறிவிலன்றோ
அனைத்தையுங்கடந்தப்பாலு மந்தமற்றறிவிதாமென்
றெனைத்தனிவிசாரித்திட்டா லேகமாய்நிறைந்தோனானே.

இ - ள். மனோசங்கற்பத்தினால் இவ்வுலகம் வுதித்ததாம்; கருதுமிடத்து அநேக உலகங்களும் இருப்பது அந்த ஞானத்தினாலன்றோ? யாவையுந்தாண்டி மேலும் முடிவிறந்த ஞானமிதுவாம் என்று என்னைத் தனிமையாக விசாரணை செய்தால் யானே பூரணமாக நிறைந்தவன். எ-று.

ப - ம். அதர்வணவேத மகாவாக்கியப்படி அயமாத்மா பிரமம் என்பார் "ஏகமாய் நிறைந்தோனானே" என்றார், அற்ற என்பது அற்

றெனத்திரிந்து நின்றது. எகம் என்பது பிரமம் என்னு மித்தியாநந்த மூம், நிறைந்தது என்பது ஆத்மா என்னும் வித்தையும், நானென் பது! இவ்வித்தியாநந்தத்தின் ஐக்கியத்திலுதித்த சுவானுபூதியாகிய அயம் என்னுந் தானும் ஆம் எனக்கொள்க.

இ - ம். நான்கு வேதங்களின் முடிவாயுள்ள மகா வாக்கியார்த்த சென்னியமான வித்தியாநந்த ஐக்கியஸ்வரூபமான நிரதிசயாநந்த சாக்ஷாத்காரமே தானெனக் கூறியதாம். 167

அ - கை. முற்கூறிய கற்பிதங்கள் அனைத்தையும் விருத்தியுள் அடக்கி அவ்விருத்தியை நீக்கின் சுவானுபவம் உதயமாம் எனக் கூறல்.

அந்தவா றிருந்துகொண்டே யானந்தமனுபவிக்க
எந்தவா றிருந்துகொண்டா லெனக்கிது தெரியுமென்னில்
இந்தமூன் றவத்தைதம்மு ளெழுந்திடும்விருத்திநீக்கில்
அந்தவா றிருந்துநீயு மாநந்தமடையலாமே.

இ - ள். அவ்வாறு பூரணமாக இருந்துகொண்டே பூரணாநந்தத்தைஅனுபவிக்க, எவ்வண்ணமிருந்தால் எனக்கிவ்வனுபவந் தரிசனமாம் என்பாய் ஆயின், சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி என்னும் இம்மூன்றவத்தைக்குள் உதிக்கின்ற விருத்தியைத் தள்ளில், அவ்வாறு பரிபூரண ஞானமாயிருந்து நீ நிரதிசயாநந்தத்தை அடையலாம். எ-று.

இ - ம். வெளிப்படை. 168

அ - கை. விருத்தி நீங்குதற்கு மூவகை உபாயங் கூறுவான் ஒருடங்கி இச்செய்யுளில் அனுபவ உபாயங் கூறுகின்றார்.

வாதனைவசத்தினாலே வருகிறவிருத்தியெல்லாம்
ஏதினாலடக்கலாகு மென்றுதான்விசாரஞ்செய்யின்
போதமாமிராசன்றனைப் புந்தியைப்புலன்களெல்லாம்
தாதராயிருக்கப்பெற்றார் சகலமுமடங்குந்தானே.

இ - ள். பழக்கவாசனையால் வருகின்ற விருத்திகள் அனைத்தையும் யாதினால் ஒடுக்கலாம் என்று விசாரிக்கின் தான் ஞானவாசனைப்

புத்திமுதலிய விடயங்கள் அனைத்தும் தன்னையலாவா விருக்கப்பெ ற்றின் அனைத்தும் ஒழிக்கும். எ-று.

இ-ம். ஞானமாகிய நித்தியாகண்ட போதமே ஸ்தூல முதலியவை விழும் விளக்கின் விருத்திகள் நீங்கும் என்பதாம். 169

அ-கை. வினைய அப்பியாச உபாயங்கள் இரண்டையுங் கூறல்.

விருத்திகடாமுமின்னும் விரோதமாம் யோகத்தாலே
திருத்திபோலூதாமூச்சைச் சுகமுடனடக்கினிற்கும்
கருத்ததற்கில்லையென்னிற் காரணசரீரமாகிப்
பெருத்தவோரவித்தைதன்னைப் பிடித்துவிட்டடங்குந்தானே.

இ-ள். மேலும் விரோதமான யோகத்தினால் துருத்தியைப் போல ஊதாநின்ற சுவாசத்தை இன்பத்தோடும் ஒடுக்கின் விருத்திக ளானவை அடங்கும், அதற்குமனம் இன்றாயின் காரண தேகமாகத் தடித்த ஒப்பற்ற அவித்தையை நீக்கின் ஒடுக்கும் எ-று.

இ-ம். பிராணபந்தன உபாயத்தைக் கௌணமாகக் கூறி அவித் தையை நீக்க உபாயத்தை முக்கியமாகக் கூறினார் என்பதாம். 170

அ-கை. அவித்தையைக் களையும் உபாயம் யாது என வினாத லுக்கு உத்தரங் கூறல்.

காரணசரீரந்தன்னைக் களைவதெவ்வாறென்றோதில்
ஆரணம்பொய்சொல்லாத வதன்பொருளகத்திலுன்னி
பூரணமாகுமென்மேற் புனைந்ததோற்றமென்று
காரணைவந்ததாகிற் றரித்திடுமவித்தையெங்கே.

இ-ள். காரணதேகத்தைக் கெடுப்பது எவ்விதமென்று கேட்கில் வேதமானது நிரசனத்தைச் சொல்லும்; ஆதலால், அதன் மகா வாக்கி யார்த்தத்தை உளத்திற் சிந்தித்துப் பரிபூரணமாகிய என்னிடத்தில் ஆரோபமாகச் சகங்கள் தோற்றமென்று உறுதிவைத்தாலும் அவித் தையானது எவ்விடத்திலிருக்கும். எ-று.

இ - ம். வேதநிச்சயப்படி குருவாக்கியத்தால் சர்வம் பிரமமயம் என்னும் அநுபவமுண்டாயின் அவித்தை நசிக்கும் என்பதாம். 171

அ - கை. சர்வம் பிரமமயம் என்னும் ஞானம் உதித்தற்கு அநுபவங் கூறல்.

அப்படியிருக்கச்சித்த மலைதலால்விகாரத்தில்
எப்படிகூடுமென்னி லென்னைவிட்டொன்றுமில்லை
இப்படிகண்டவெல்லா மென்மயமென்கனுப்போனல்
கற்பிதமென்றுதானே காண்கின்றசித்துநானே.

இ - ள். விகாரங்களில் மனமானது சுழல்வதனால் அங்ஙனிற்க எங்ஙனங் கூடும் என்றால், என்னைத்தவிர வேறொரு வஸ்துவும் இல்லை ; இவ்விதமாகக் கண்ட கிரியைகள் அனைத்தும் எனது சொருபம்; எனது சொப்பனத்தைப்போலக் கற்பிதமென்றுதானே பார்க்கின்ற சைதன்னியமே நான். எ-று.

இ - ம். கற்பிதமாகக் காணப்பட்ட கிரியைகள் அனைத்தும் தனது சிற்பிரகாசமாக விளங்குகின்றது என்னும் அநுபவ திருஷ்டியால் யாவுந் தன்மயமாய் விளங்கும் என்பதாம். 172

அ - கை. இச்சித்தே ஆனந்தவடிவாம் எனல்.

சித்துநானிறைந்தோனென்ற திடமறவாதிருந்தால்
எத்தனையெண்ணினு மேதுசெய்தாலுமென்ன
நித்திரையுணர்ந்தபின்பு நிற்கின்றகனவைப்போல
அத்தனையும்பொய்தானே யாநந்தவடிவுநானே.

இ - ன் யான் சைதன்னியமாகப் பூரணமானவனென்னும் திடச்சித்தத்தோடுகூடி யிருந்தால் எவ்வளவு சங்கற்பித்தாலும் எக்கிரியை செய்தாலும் அதனாற் குற்றம் என்ன ? நித்திரை தெளிந்தபின்பு நிற்குஞ் சொப்பனம்போல அவ்வளவும் மித்தையாம், யானே ஆநந்தஸ்வரூபமாம். எ-று.

இ - ம். நானே சித்தென்னும் அநுபவம் உதிக்கில் யாவும் மித்தையாய்த் தான் அநந்தவடிவனானவன் என்பதாம். 173

அ - கை. இவ்வநுபவம் உதிப்பதற்கு ஏதுவான உறுதி கூறல்.

நானெனவுடலைத்தானே நம்பினேனனேகசென்மம்
ஈனராய்ப்பெரியோராகி யிருந்தவையெலாமிப்போது
கானலில்வெள்ளம்போலக் கண்டுசற்குருவினாலே
நானெனவென்னைத்தானே நம்பியீடேறினேனே.

இ - ள். அநந்த சநநங்களில் தேகத்தையே யானென்று நம்பினேன்; இழிந்தவராகவும் உயர்ந்தவராகவும் இருந்தவைகள் அனைத்தையும் இச்சமயத்தில் கானற்சலத்தைப்போல ஆசிரியருபதேசத்தினால் பார்த்து எனது பிரமவடிவத்தையே யானென்று நம்பி ஈடேறினேன். எ-று.

இ - ம். குரு கிருபையினால் தேகம் நானென்னும் நம்பிக்கையை விடுத்துச் சித்தே நானென்னும் நம்பிக்கை உண்டானால் சின்மாத்திரமான முத்தியைப் பெறுவன் என்பதாம். 174

அ - கை. குரு கிருபையை வியந்து மகிழ்தல்.

என்னபுண்ணியமோசெய்தேனோ பாக்கியமோகாணேன்
நன்னிலந்தனிலெழுந்த நாரணன்கிருபையாலே
தன்னியனானேனுத் தரீயத்தைவீசுகின்றேன்
தன்னியனின்னுநானே தாண்டவமாடுகின்றேன்.

இ - ள். என்னதருமஞ் செய்தேனோ யாதுபாக்கியம் பெற்றேனோ தெரிகிலன்; நன்னிலமென்னு நகரத்தில் மானுடராக அவதரித்த நாராயணனென்னும் எனதாசிரியரது கருணையினால் கிருதார்த்தனான யான் அங்கவஸ்திரத்தை ஆகாயத்திலெறிந்து விளையாடுகின்றேன், கிருதார்த்தனான யானே மேலும் நடனஞ்செய்கின்றேன். எ-று. 175

அ - கை. தன் அனுபூதி விளக்கத்துக்குத் தக்கநாமந் தனக்குத் தரித்த மாதா பிதாவைப் புகழ்தல்.

தத்துவஞானம்வந்த சந்தோஷவதிசயத்தால்
நித்தமாடுவன்காணென்ற நிலைமுன்னமேயறிந்த
சத்தியமகனாலன்றோ தாண்டவாவென்றழைத்தார்
அத்தனைமகிமையுள்ளோ ரன்னையும்பிதாவுந்தாமே.

இ - ள். அத்துவிதஞானம் உதித்த பேருவகையான அற்புதத்தினால் எப்போதும் ஆநந்த நடனஞ்செய்வன் என்னும் நிலையை முன்பேதெரிந்த உண்மையினால் அன்றோ? அத்தனைமகிமையை உடைய தாய்தந்தையர்கள் தாண்டவராயன் என்னும் நாமந்தரித்துக் கூப்பிட்டார்கள். எ-று. 176

அ - க்கை. நிரதிசயாநந்த அனுபூதியின் ஆராமை கூறல்.

வந்தவோரிவ்வாநந்த மகிழ்ந்ததாரோடேசொல்வேன்
சிந்தையிலெழுந்துபொங்கிச் சகமெலாநிறைந்துதேங்கி
அந்தமில்லாததாயிற் றப்படிகுருவேதந்த
மந்திரமருளுமீசன் மலரடிவணங்கினேனே.

இ - ள். அறிவிலுதித்த ஒப்பற்ற இந்த நிரதிசயா நந்தத்தினால் மகிழ்ச்சி அடைந்ததை யாருடன் உரைப்பேன்? உள்ளத்திலூறி மேலிட்டு உலகங்க ளனைத்தும் பூரணமாய் முடிவில்லாத தாயிற்று; அவ்வண்ணம் வேதமுடிவான மகா வாக்கியார்த்த ரகசியத்தை அருளாநின்ற இறைவனாகிய தேசிகரது கமலமலர்போன்ற திருவடிகளைத் தொழுதேன். எ-று.

இ - ம். சிந்தனத்து உதித்த ஆநந்தமதனைக் கரைக்கச் சீவபாமான அனைத்துந் தானாகிய சிதாநந்த வடிவமாகவே விளங்குகின்றது என வித்தியாநந்தத்தை முடித்ததாம். 177

அ - கை. இந்நூலால் விளையும் பயன் கூறல்.

வித்தியானந்தமிக்க விதமெனவிளம்பினேமே
பத்தியாயிந்தநூலைப் பார்த்தநுபவித்தபேர்கள்
நித்தியகருமநிட்டை நிலைதனையறிந்துசீவன்
முத்தியையடைந்திருந்த முனீஸ்வரராகுவாரே.

இ-ள். ஞானானந்தமானது இவ்வகையாம் என்றுசொல்லினேம்; அன்பாக இஞ்ஞான சாஸ்திரார்த்தத்தை உணர்ந்து அப்பொருளை அறிந்தபடி அநுபவமான பேர்கள் நித்தியமான ஞானநிஷ்டையின் நிலைமையைத் தெரிந்து சீவன் முத்திபதத்தைப் பெற்றிருந்த முனீஸ்வரர்களாவார்கள். எ-று.

இ-ம். வெளிப்படை. 178

அ-கை. குருவாக்கியப்படி இந்நூல் சம்பூரணமாயிற்று எனல்.

ஆரணப்பொருளாம்வித்தை யாருக்கும்விளங்கவேதும்
காரணங்குறைவில்லாமற் கைவல்யநவநீதத்தைப்
பூரணமாக்கவேண்டிப் பூர்வமாநன்னிலத்தில்
நாரணகுருநமக்கு நன்றுணர்த்தனனில்வந்தே.

இ-ள். வேதமுடிவிலுள்ள மகா வாக்கியார்த்தமான ஞானார்த்தம் விளக்கும்பொருட்டு கைவல்ய நவநீதம் என்னும் ஞானசாஸ்திரத்தை எவ்வளவும் எடுத்துக்காட்டுங் காரணங்களில் குறைவுபடாமல் [illegible] செய்யவிரும்பிப் பழமையாகிற நன்னிலமென்னுந் தலத்தில் மானிட வடிவமாக எழுந்தருளிய நாராயணதேசிகரானவர் எனக்குச் சொப்பனத்தில் தோன்றி அருளிச்செய்தார். எ-று.

இ-ம். வெளிப்படை. 179

அ-கை. இந்நூலாசிரியரது சிறப்புக்கூறல்.

அன்னதன்னருளினாலே யகப்புறமின்றியொன்றால்
உன்னணவிலக்கியார்த்தத் தின்பொருளதுதானென்ன

நண்ணினசரீரமாதி நாதத்திலுபாதியென்றே
கண்ணதாயனைத்துங்காணக் காட்டினன்றாண்டவேசன்.

இ-ள். தேசிகாது கிருபையினால் உள்வெளி என்பது இன்றி ஏகமாய் எண்ணுதற்கரிய இலக்கியார்த்தத்தின் பொருட்படி பிரமம் ஆகிய அதுவே கூடஸ்தனாகிய நான் என்னும்படி பொருந்திய தேகமுதலிய வற்றை மாயா உபாதி என்று களைந்து சகலத்தையும் ஞானாகாரமாய்த் தரிசிக்கும்படி தாண்டவேசன் என்னும் இந்நூலாசிரியர் தரிசிப்பித்தார்.

இ-ம். வெளிப்படை. 180

அ-கை. இம்மாயினால் அனுபவம் உதிக்குமவர்களே சுவானுபவிகள் எனல்.

ஆன்றபதமூன்றற்கு மதுநீயானுயெனும்பொருளில்
சான்றதுரியாதீதமெனுந் தடையற்றிலங்கொண்சைதன்னியம்
ஊன்றியுணர்ந்தோர்விகற்பமயக்கொழித்துத்தடையுமுடனுத்
தோன்றித்தானேதானவர்துலங்குமவர்க்கேசுவானுபவம். [துத்

இ-ள். மாட்சிமையாகிய மகாவாக்கியத்தின் தத்தொமசியென்னு மூன்று பதத்திற்கும் அதுவென்னும் பிரமமும் நீயென்னுங் கூடஸ்தனும் இவ்விரண்டின் ஐக்கியமும் என்கிற அர்த்தத்தில் நிறைந்த துரியாதீதம் என்கின்ற மறைப்பின்றி அபரோக்ஷமாக விளங்குகின்ற சுயஞ்சோதி உள்ள மெய்யுணர்வை ஸ்திரமாகத் தெரிந்தவர்கள் பேதமான விரமையை நீக்கி அறிவின்மையையுங் கெடுத்துச் சதோதயமாய்த் தன்மயமாவர், அவ்வறிஞர்க்கே சுவானுபவமானது பிரகாசிக்கும். எ-று.

இ-ம். வெளிப்படை. 181

அ-கை. இந்நூலாசிரியர் தன்னாசிரியரைப் புகழ்தல்.

என்னுமாவாக்கிய நான்குமிசைக்கும் வித்யாநந்தமிது,
சொன்னநாராயணன் பாதந்தொழுது துதித்தோர்துகளற்

ளோர், இன்னமாணுக்கர்கள் குருவாற்சந்தேகந் தீர்ந்தேபோத த்தே, தன்னினிறைந்து நின்றார் நரேயமுத்த ராகுவரே.

இ - ள். சுபாவம் என்கின்ற நான்குவேதத்தின் முடிவான நான்கு மகாவாக்கியங்களும் சொல்லுகின்ற ஞானார்த்தம் இதுவாம்; இதனை அருளிய நாராயணன் என்னும் ஆசிரிய ரூபயபாதங்களை வணங்கித் துதிசெய்தவர்கள் களங்கமற்றவராவர்; இத்தன்மையான பிடாரமுடைய ஆசிரியரால் ஐயமின்றி இப்பதத்தை யடைந்து பூரணமாகியிருந்து பரி சுத்தமான சீவன் முத்தராவார்கள். எ-று.

இ - ம். நான்குவேதங்களின் முடிவிலுள்ள நான்குமகா வாக்கியார்த்தமும் ஒன்றான வித்தியாநந்தமே அநுபவம் எனவும் அதையடைந் தவர்களே சீவன் முத்தர் எனவுங் கூறினதாம். 182

அ - கை. இந்நூல் செய்தவிதங் கூறல்.

தத்துவவிளக்கத்தாலுஞ் சந்தேகந்தெளிதலாலும்
ஒத்திருள்விடாதமாயா வுள்ளிருளிரியவோங்கும்
சித்ததாமொளிவிளங்கச் செய்துபின்விருத்திபேதப்
புத்தியால்வருமையத்தைப் புரையறத்தெளிவித்தாண்டான்.

இ - ள். தத்துவ விளக்கமென்னும் படலத்தினாலும் சந்தேகந் தெளிதல் என்னும் படலத்தினாலும் பொருந்தச்செய்து அந்தகார நீங் காத மாயையென்னும் அகத்திருள் கெட உயராநின்ற ஞானப்பிரகாசத் தைத் திகழும்படிசெய்து பின்பு விருத்தி விகற்பமான புத்தியால் வாராநின்ற சந்தேகத்தைக் குற்றமறத் தெளிவித்து இரட்சித்தார் (இந்நூல் ஆசிரியர்) எ-று. 183

அ - கை. இந்நூல் ஆசிரியரைத் துதித்தல்.

ஆண்டதேசிகனையய னாரணனனந்தன்பாதம்
பூண்டிமுவாரோபத்தாற் பொய்ம்மயக்காய்வந்தத்தை
மாண்டகல்லபவாதத்தான் மாய்த்தருளேக்கத்தென்று
தாண்டிடவைத்தளித்த காரணுபோற்றிபோற்றி.

இ - ள். தடுத்தாண்ட குருசாமியாகிய நாராயணன் என்னும்முடி வற்றவனது திருவடியைச் சிரசில் தரித்துச் சீவேஸ்வர சகத்தென்னு மூன்றுவித கற்பனையால் இல்லாத மயக்கமாய் உண்டானதை மாட்சிமையாகிய நன்மையான அபவாத உத்தியினால் கெடுத்துக் கிருபா நோக்கத்தினால் எப்போதும் பரோக்ஷ ஞானமாகத் தரிசிக்கத் திருவடி சூட்டி இரக்ஷிக்க காரணனை சரணஞ் சரணம். எ-று. 184

அ - கை. இந்நூலைப் புகழ்தல்.

குலவுசற்குருவின்பாதக் குளிர்புனறலைமேற்கொண்டால்
உலகினிற்றீர்த்தமெல்லா முற்றபேறடைவார்போல
நலமெய்யாகியகைவல்ய நவநீத நூலைக்கற்றால்
பலகலைஞான நூல்கள் படித்தஞானிகளாய்வாழ்வார்.

இ - ள். விளங்காநின்ற சற்குருவின் அகத்தையும் புறத்தையுங் குளிரச்செய்கின்ற பாததீர்த்தத்தைச் சிரசின்மேல் தரிக்கின் சகத்தி லுள்ள புண்ணிய தீர்த்தங்கள் அனைத்திலும் ஸ்நாநஞ்செய்த பலனைப் பெறுவார்கள் ; அதுபோல, நன்மையும் உண்மையுமாகிய கைவல்ய நவநீதம் என்னும் ஞானசாஸ்திரத்தை அப்பியாசித்தால் அநந்தங் கல்வி நூல்களின் சாரமான ஆத்மஞான சாஸ்திரங்களை அப்பியாசித்த ஞானவான்களாக வாழ்வார்கள். எ-று.

இ - ம். சுருதி குரு சுவானுபவங்களை நவநவமாகத் துதித்ததாம்.

கைவல்லியநவநீதம்

முற்றிற்று.

---

கடவுள் துணை.

# பாட்டு முதற்குறிப்பு அகராதி.


| பாட்டு. | பக்கம். |
|---|---|
| அ | |
| அகமெனு | 98 |
| அக்கினிக | 61 |
| அசத்திலெம் | 143 |
| அசலகிரஞ் | 164 |
| அச்சுவத்த | 110 |
| அடங்கிய | 19 |
| அண்ணற | 190 |
| அதனையின் | 136 |
| அதுகானெ | 26 |
| அத்தியாரோ | 25 |
| அத்தக்கண | 158 |
| அந்தமுகடு | 11 |
| அந்தவாரிரு | 185 |
| அப்படியிரு | 187 |
| அரவன்று | 36 |
| அரிதாகு | 68 |
| அரியமெய்ஞ் | 70 |
| அருவமாகு | 137 |
| அருளைம | 126 |
| அழிவிலாத | 108 |
| அழுக்கொ | 29 |
| அளிகைமெ | 59 |
| அறியாத | 45 |
| அறிவுக்கு | 52 |
| அறுசுவை | 89 |
| அனசுமை | 103 |
| அனுபவா | 58 |
| அன்னபா | 148 |
| அன்னதன் | 17 |
| ஆ | |
| ஆகமப்பிர | 76 |
| ஆடவர் | 90 |
| ஆண்டதே | 192 |
| ஆதாரம | 39 |
| ஆசிமுக்கு | 31 |
| ஆரணப் | 190 |
| ஆரோப | 25 |
| ஆர்க்குங் | 140 |
| ஆனபாவி | 106 |
| ஆனவிம்ம | 16 |
| ஆனுலயா | 94 |
| ஆன்றபதமா | 191 |
| இ | |
| இசமான | 146 |
| இக்குணங் | 28 |
| இங்குமப்படி | 118 |
| இதயமெமாத்த | 170 |
| இதரினைக் | 46 |
| இந்தச்சவளை | 111 |

| பாட்டு. | பக்கம். | பாட்டு. | பக்கம். |
|---|---|---|---|
| இந்தஞான | 114 | உருக்கியதரா | 80 |
| இந்தநிச்ச | 131 | உருவங்களி | 144 |
| இந்தநீதொ | 53 | உலகமான | 124 |
| இந்தமாயை | 43 | உன்முகம் | 79 |
| இந்தவாறை | 161 | எ | |
| இப்படிப்போ | 26 | எத்தனைநான் | 63 |
| இப்புவியி | 178 | எரிகின்ற | 80 |
| இம்பரினஞ் | 43 | எல்லாங்கண் | 51 |
| இராசத | 31 | எல்லாச்சீவ | 97 |
| இருவகை | 181 | எவருடைய | 9 |
| இருளாக | 147 | எவனுகிலு | 160 |
| இலக்க | 105 | எனவுரைத்த | 75 |
| இல்லையா | 139 | என்மனந் | 107 |
| இவனதி | 16 | என்னபுண் | 188 |
| இவனயன் | 99 | என்னுடை | 10 |
| இவ்வாறு | 154 | என்னுமா | 191 |
| இவ்வுடன் | 32 | என்னைத்தா | 21 |
| இன்னதுதே | 22 | ஏ | |
| இன்னவகை | 164 | ஏகமாய் | 85 |
| இன்னவாற | 116 | ஏமமாயா | 30 |
| ஈ | | ஐ | |
| ஈசர்காரிய | 110 | ஐந்துபூதமு | 33 |
| ஈசனுக்கி | 28 | ஐயனேயெ | 59 |
| ஈசனுமா | 96 | ஐயாகேளீர் | 92 |
| ஈனந்தரு | 154 | | |
| ஈன்றளித் | 8 | ஒ | |
| உ | | ஒருவழியிது | 27 |
| உண்டுறங் | 172 | ஒன்றாகிய | 158 |
| உதவும்புவி | 156 | ஒன்றுகேண் | 113 |
| உத்தமகுரு | 95 | ஓ | |
| உத்தமவெளு | 27 | ஓய்ந்தகனு | 93 |

| பாட்டு. | பக்கம். |
|---|---|
| **க** | |
| கன்னையிற் | 55 |
| கடகேரின் | 57 |
| கடமெனுமு | 71 |
| கண்டறிந்த | 128 |
| காணயா | 48 |
| கருதயனே | 83 |
| கருப்பை | 139 |
| களங்கமற்ற | 84 |
| கன்ஞமுனு | 121 |
| கற்பனைவக் | 36 |
| **கா** | |
| காமமாதிக | 64 |
| காமியத்த | 103 |
| காரணசரீ | 186 |
| காரியங்க | 137 |
| காணரேர் | 72 |
| **கி** | |
| கிளர்மக | 91 |
| **கு** | |
| குகன்றனை | 162 |
| குரவர்சிகா | 91 |
| குலவுசற்கு | 193 |
| குளிரினகல் | 162 |
| **கெ** | |
| கெடலான | 151 |
| கேவலனில்லை | 40 |
| **கை** | |
| கைதவங்க | 105 |
| **ச** | |
| சகமதிலிரு | 39 |
| சடமதாகி | 129 |
| சடமான | 145 |
| சட்டிகுட | 98 |
| சத்திசத்தனை | 138 |
| சத்தேசித் | 167 |
| சத்தொடுகிசி | 49 |
| சந்ததப்புரு | 74 |
| சமந்தமம் | 14 |
| சருவமுத் | 128 |
| **சா** | |
| சாதனமின்றி | 15 |
| **சி** | |
| சிஞ்ஞாக | 181 |
| சிட்டர்புகழ் | 179 |
| சிட்டனின் | 60 |
| சித்துகாணி | 187 |
| சிரவணைப் | 15 |
| சிவசொரு | 102 |
| சிறந்தகன் | 108 |
| **சீ** | |
| சீரியவீசனுர் | 85 |
| சீவபேத | 106 |
| சீவன்முத்த | 69 |
| **சு** | |
| சுத்தமாந் | 86 |
| சுத்தியில் | 42 |
| சுருதியுத்தி | 169 |
| சுழுத்தியிற் | 41 |

| பாட்டு. | பக்கம். |
| --- | --- |
| **சூ** | |
| சூக்குமசக | 33 |
| **செ** | |
| செய்கையு | 88 |
| சென்மாந்த | 147 |
| சென்றது | 66 |
| **சொ** | |
| சொரூபஞா | 124 |
| சொப்பன | 134 |
| சொல்லிய | 71 |
| சொன்னது | 19 |
| **ஞா** | |
| ஞானங்கார | 142 |
| ஞானமார் | 64 |
| **த** | |
| தசபுமான் | 46 |
| தஞ்சமாங் | 58 |
| தடத்துநீ | 99 |
| தடைகளே | 61 |
| தத்துவஞா | 189 |
| தத்துவத்தின் | 174 |
| தத்துவப்பதன் | 57 |
| தத்துவைவனு | 62 |
| தத்துவவிசா | 44 |
| தத்துவவிள | 192 |
| தர்ப்பணத் | 117 |
| தன்பதியல் | 78 |
| தன்னையுந் | 20 |
| **தா** | |
| தாகப்படும் | 150 |
| தாமதமிரா | 144 |
| தாலத்தின் | 24 |
| தானன்றி | 143 |
| தானிகர் | 38 |
| **தி** | |
| திகழ்ந்தவீ | 109 |
| திணமுமண் | 120 |
| **தீ** | |
| தீராய் | 64 |
| **து** | |
| துரியநிலக் | 176 |
| துருத்திமா | 125 |
| துர்ச்சங்க | 174 |
| துளங்குத | 117 |
| **தூ** | |
| தூங்குஞ்சக | 155 |
| தூடணத | 37 |

| பாட்டு. | பக்கம். |
|---|---|
| தூலசக்கு | 51 |
| தூலமே | 84 |
| **தெ** | |
| தெரிதரும | 95 |
| **தே** | |
| தேகத்தன | 88 |
| தேகமதல்லா | 23 |
| **தொ** | |
| தொடர்பவ | 18 |
| **தோ** | |
| தோற்றமாஞ | 30 |
| தோற்றமாஞ்சத் | 41 |
| **ந** | |
| நரரின்மன் | 100 |
| நரர்குழிபறி | 73 |
| நலமெய் | 111 |
| நல்லவனே | 96 |
| நற்கருத்து | 74 |
| நனவுகண் | 23 |
| நன்மையா | 119 |
| **நா** | |
| நாசச்சரீர | 146 |
| நாலாம்பூ | 177 |
| நானென்ற | 183 |
| நானெனவு | 188 |
| **நி** | |
| நிசமானது | 159 |
| நித்தியம்பூ | 163 |
| நித்தியவழி | 14 |
| நிர்க்குண | 165 |
| நிறைந்தவா | 184 |
| **நீ** | |
| நீநானென் | 60 |
| **நெ** | |
| நெய்யும் | 157 |
| **ப** | |
| பங்கயாசன | 133 |
| பஞ்சகோச | 50 |
| பஞ்சினையூ | 63 |
| படமுநாலு | 37 |
| படர்ந்தவேதா | 12 |
| பத்தியம்வ | 115 |
| பந்தமனைநா | 184 |
| பலகலையுமு | 170 |
| பண்ணிய | 56 |
| **பா** | |
| பாவிமக்த | 180 |

| பாட்டு. | பக்கம். |
|---|---|
| பி | |
| பிரமஞானிக | 68 |
| பிரமபாவனை | 62 |
| பிரமமாந்தனை | 44 |
| பிரமரூபத் | 130 |
| பிறந்ததுண் | 183 |
| பிறிவவெதப்ப | 48 |
| பின்னைமூவ | 67 |
| பு | |
| புண்ணியப் | 46 |
| புலவர்புக | 173 |
| புலியுமனு | 152 |
| பூ | |
| பூச்சியவீ | 47 |
| பூரிக்குங் | 142 |
| பூன்றமா | 38 |
| பே | |
| பேதகன்ம | 66 |
| பேதமான | 54 |
| பொ | |
| பொய்மை | 134 |
| பொல்லாத | 179 |
| பொறுமை | 70 |
| பொன்னில | 7 |
| போ | |
| போகத்தில் | 153 |
| போகமாரு | 120 |
| போனசன்ம | 114 |
| ம | |
| மதுரமாங் | 52 |
| மதுவிறைச்சி | 122 |
| மந்தமுந் | 180 |
| மந்திரமூர்த் | 76 |
| மரங்கள் | 35 |
| மலடிமைந் | 132 |
| மற்றைமுப் | 77 |
| மனதுசத்து | 83 |
| மனத்திறு | 184 |
| மனநாசஞ் | 85 |
| மனுடன் | 160 |
| மனைக்குள் | 118 |
| மனைவிலங் | 112 |
| மா | |
| மாயையென்பது | 133 |
| மாயையென்பதே | 135 |
| மானஞ்சிற | 152 |

| பாட்டு. | பக்கம். |
|---|---|
| மு | |
| முத்தனை | 13 |
| முத்திலங்கி | 101 |
| முந்தவகண் | 171 |
| முந்தியசங் | 79 |
| முப்புவிழு | 175 |
| முன்புகறச | 50 |
| முன்னிலங் | 177 |
| மூ | |
| மூவராம் | 109 |
| மெ | |
| மெய்யுங் | 90 |
| மே | |
| மேவுமண் | 141 |
| மோகவிருள் | 166 |
| யோகஞா | 104 |
| வ | |
| வகுத்தகன் | 127 |
| வஞ்சகமில் | 82 |
| வடதால்வங் | 54 |
| வணங்கிநி | 17 |
| வந்தவோரி | 189 |
| வா | |
| வாக்கியந்த | 77 |
| வாதனுவசத் | 185 |
| வாயுத்தம்ப | 140 |
| வாராயென் | 20 |
| வி | |
| விடயசுக | 149 |
| விண்ணெனென் | 47 |
| வித்திகடா | 186 |
| வித்தியா | 190 |
| விருத்திஞா | 126 |
| விருத்தியு | 81 |
| விவகாரவே | 87 |
| வினவுமிட | 171 |
| வீ | |
| வீடதாம்ப | 131 |
| வீயாத | 163 |
| வே | |
| வேகின்ற | 150 |
| வேடமாறிய | 115 |


பாட்டு முதற்குறிப்பு அகராதி

முற்றிற்று.

---

